# பூர்ணசந்திரோதயம்

## தொகுதி 6, பகுதி 1/12

## May 1915 / April 1916

Record no. 302



# பூர்ணசந்திரோதயம்.

A Tamil Monthly Journal

Devoted to Theosophy, Religion, Science, Art and Civilization.

ஆறாந் தொகுதி.

1915௵ மே௴ முதல் 1916௵ ஏப்பிரல்௴ வரை
12 சஞ்சிகைகள் கொண்டது.

அ. ரங்கசாமி ஐயர், B.A.,B.L.,F.T.S, பத்திராதிபர்

வருஷ சந்தா ரூ. 2. தனிப்பிரதி அணா 4.

மதுரை.
விக்டோரியா அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

## ஆருந்தொகுதி விஷய அகராதி.

---



# பூர்ணசந்திரோதயம்.


தொகுதி 6 { 1915௵ மே௴ / ராக்ஷஸ௵ வைகாசி௴ } பகுதி 1


## தற்கால நிலைமை.

சென்ற மாசத்தில் ஸ்ரீமான் கந்தி என்பவரும் அவருடைய பத்நியவர்களும் சென்னையில் விஜயம் செய்து பல ஜனசமூகங்களில் கொண்டாடப்பட்டனர். அவர்கள் தென் ஆபிரிகாவில் இந்த தேசத்திலிருந்து அங்கே சென்று வசிக்கும் இந்தியர்களை அசௌகரியப் படுத்திவந்த ஐரோப்பிய ஜாதியைச் சேர்ந்தோரின் ஜாதி வித்யாஸத்தை ஆதாரமாகக் கொண்ட அநீதமான சட்ட விதிகளை நிறுத்தி இந்தியர்களின் பேரில் அவர்களுக்குள்ள அநுதாபத்தினால் அவ்விந்தியர்களின் நிலைமையை அபிவிருத்திசெய்யக் கருதி அவர்களுக்குத் தலைவராய் நின்று அவர்களுடைய நன்மையைப் பாதுகாப்பதற்காக ஜெயிலுக்கு பலதரம் சென்றிருக்கின்றனர். அவர்களுடைய முயற்சியினால் அந்த தேசத்தில் இந்தியர்களின் நிலைமை அபிவிருத்தியடைந்தது. அவர்கள் இம்முடிவை அடைகிறதற்குச் செய்த முயற்சியானது பலாத்காரத்தை ஆதாரமாகக் கொண்டதல்ல. கலகம் செய்து கஷ்டநிஷ்டூரத்தை நிவிர்த்திக்கும் மார்க்கத்தை அவர்கள் அநுஸ

ரிக்கவில்லை. மனோ பலமும் கஷ்ட நிஷ்டூரங்களை பொறுமையுடனும் தைரியத்தோடும் பொறுக்கும் தன்மையும் ஸ்ரீமான் கந்தியவர்களாலும் அவரைப் பின்பற்றியவர்களாலும் தென் ஆபிரிக்காவில் Passive Resistance என்ற முறையை அவர்கள் தழுவினதின் மூலமாய்க் காண்பிக்கப்பட்டன. தென் ஆபிரிக்காவில் இந்தியர்களுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கத்தக்க கொடுமையான சட்டங்களையும் விதிகளையும் அப்பிரதேசங்களின் ராஜரீகத்தை வகித்த குடியேறின ஐரோப்பியஜாதியார் ஏற்படுத்தியபோது ஸ்ரீமான் கந்தியும் அவரைச் சேர்ந்த இந்தியர்களும் அவ்வித சட்டங்களையும் விதிகளையும் மாற்றுவதற்கு முயன்ற விதம் என்னவென்றால் அவ்விதம் சட்டங்களையும் விதிகளையும் அவர்கள் கீழ்ப்படியாது திரஸ்கரிப்பதின் மூலமாய் அவர்கள் நியாயஸ்தலங்களில் குற்றம் சாட்டப்பட்டார்கள். அக்குற்றங்களுக்குரிய தண்டனையை அடைந்து சிறைச்சாலைகளில் அடைக்கப்பட்டனர். அத்தண்டனைக்காலம் நீங்கி ஜெயில்களினின்று விடுவிக்கப்பட்ட பிறகு மறுபடியும் அச்சட்டங்களையும் விதிகளையும் தவிர்த்து அக்குற்றங்களுக்காக மறுபடியும்தண்டனை விதிக்கப்பட்டு சிறைச்சாலைக்குச் சென்றார்கள்.

* * *

இவ்விதம் பலதரம் புருஷர்களும் ஸ்திரீகளும் காராகிருஹம் புகுவதால் அநீதமாயுள்ள சட்டங்களும் விதிகளும் பகிரங்கமடைந்து உலகமுழுதும் பிரக்யாதியை அடைந்தன.

* * *

பிறருக்குத் துன்பத்தை உண்டு பண்ணாமல் ஒருவன் தானாகவே ஒரு சட்டம் அல்லது விதியின் அநீதத்தை எடுத்துக் காட்டும் பொருட்டு கஷ்டத்தை அநுபவிப்பதை ஒருவரும் தடை செய்யக் கூடாதன்றோ? இதுதான் பாஸிவ் ரெஸிஸ்டென்ஸ் அல்லது வணங்கி எதிர்த்தலாகும். இதற்கு





ஆதாரம் சரீரபலத்தைக் காட்டிலும் ஆத்மபலம் வெற்றியடையத்தக்கதென்ற கொள்கையாம். ஸ்ரீமான் கந்தியவர்களின் முக்கியமான குணாதிசயம் என்னவென்றால் சாதாரணமாய் கூலிவேலை செய்யும் இந்திய புருஷர்களையும் ஸ்திரீகளையும் இவ்விதங்களான கஷ்டங்களை வகித்துக்கொண்டு ஜெயில்களுக்குச் செல்லவும் மற்ற துன்பங்களைப் பொறுக்கவும் தகுதியான மனோபாவத்தையுடையவர்களாயும் தைரியத்தோடும் உற்சாகத்தோடும் கூடினவர்களாயும் செய்யத்தக்க சாமர்த்தியமாம். அவ்விதமாக ஸ்ரீமான் கந்தியவர்களை விடாமுயற்சியுடனும் உற்சாகத்துடனும் பின்பற்றி அவர் போல் பாஸிவ் ரெஸிஸ்டர்ஸ் என்று கூறப்பட்டு வணங்கிஎதிர்த்தவர்களில் அநேகர் இந்தத் தமிழ் ஜில்லாக்களிலிருந்து சென்றவர்கள்.

* * *

அவர்களில் சிலர் தஞ்சாவூர் ஜில்லா தரங்கம்பாடி முதலிய பிரதேசங்களில் இருக்கிறபடியால் அவர்களைப் பார்க்க ஸ்ரீமான் கந்தியவர்களும் அவருடைய பத்னியும் தரங்கம்பாடி சென்று அவர்களால் உபசரிக்கப் பெற்றனர்.

* * *

ஒவ்வொரு மதமும் அம்மதத்தைத் தழுவும் ஜன ஸமூஹங்களும் உலகத்தின் அபிவிருத்திக்கு ஆதாரமாகவிருக்கிற ஞானம், பக்தி, கருமம்என்று மூன்றுவிதமாக அமைக்கப்பட்டிருக்கிற சகல பிரவிர்த்திகளுக்கும், அப்பிரவிர்த்திகள் பலவிதங்களாகக் கலந்து உலகத்தில் வெளித் தோன்றுகின்ற உலக நாகரிகத்திற்கும் சிற்சில முக்கியமான அம்சங்களைக் கொடுக்கின்றன. ஸநாதந தர்மம் என்ற ஆரியமதமானது உலக விகாஸமுறையின் அமைப்பை விவரமாக வெளிக்காட்டி, அதில் ஒவ்வொரு ஜீவனின் தருமத்தையும் விகாச முறையில் அவன் மேற்செல்லும் வழியையும் காட்டி எல்லா ஜீவகோடிகளும் ஈசுவரனது அம்ச

மென்றும் ஈசுவரன் எல்லா உலகங்களையும் வியாபித்து நிற்கின்றாரென்றும் கூறுகின்றது. இதுபோல மற்ற மதங்களும், அவைகளைச் சார்ந்த நாகரிகங்களும் பிரபஞ்சத்தின் கண்ணுள்ள வெவ்வேறு தத்துவங்களை போதிக்கின்றன. இவ்வுலகத்தில் விகாஸமுறையின் தத்துவங்கள் பலவிதங்களாக ஏற்பட்டிருப்பதாலும் அவைகள் பலவழிகளாக அறியத் தக்கனவாகையாலும் ஒருவர்போல் மற்றொருவர் அத்தத்துவங்களை அறியமாட்டார். ஒரு மதத்தைப்போல மற்றொரு மதம் அத்தத்துவங்களை எடுத்துரைக்கமாட்டாது. ஒரு ஜாதியாரால் சில தத்துவங்கள் அநுஸரிக்கப்பட்டு, வேறு ஒரு ஜாதியாரால் வேறு சில தத்துவங்கள் அநுஸரிக்கப்பட்டும் ஆகையால் ஒருவன் விகாஸ முறையில் மேற்செல்லுவோனாகில் அதைச் சார்ந்த எல்லா தத்துவங்களையும் அறிந்து அவைகளில் ஒவ்வொன்றுக்குமுள்ள சம்பந்தத்தை தெரிந்துகொண்டு அவைகள் தன் மதத்தில் விவரிக்கப்பட்டாலும் அல்லது தான்ஜன்மமெடுத்த ஜாதியாருக்குள் விசேஷமாக ஏற்பட்டாலும் அல்லது பிறர் மதம் அல்லது பிற ஜாதியாரால் அவலம்பிக்கப்பட்டாலும் அவ்வித்தியாசங்களைப் பாராட்டாமல் அத்தத்துவங்களுக்குள் நேர்ந்திருக்கும் சார்பையும் அவைகள் மனோவாக்குக் காயங்கள் மூலமாய் ஒழுக்கத்திற்கு உபயோகமுள்ளனவென்பதையும் அறிவதே உண்மையான விவேகமாகும். பொதுவாகக் கூறாமல் உதாரணங்கள் மூலமாய் விவரிக்கப்புகின், கிறிஸ்தவமதமானது ஒவ்வொரு ஜீவனின் மகிமையையும், 'அது உஜ்ஜீவிக்கத் தக்க ஸ்வாதந்தர்யத்தையுடையது' என்றதத்துவத்தையும் வற்புறுத்திச் சொல்லுகின்றது. இத்தத்துவத்தை ஆங்கில பாஷையில் 'மனிதனுக்குரிய ஸ்வதந்தரங்கள்' என்றுகூறுகிறார்கள். இந்துமதமோ இதுவிஷயமாக பொதுவாக ஸமஷ்டியில் எல்லாஜீவர்களும் ஈசுவரனுடைய அம்சமென்று கூறுகின்றது.

* * *

கிறிஸ்துவ மதத்தில் மேற்கூறிய தத்துவத்தின் பிரயோகத்தை அம்மதத்தைக் கைக்கொள்பவரின் பிரவர்த்தி



களின் மூலமாய் நாம் நன்றாகப் பார்க்கலாம். ஜீவன் மானிடவர்க்கத்தில் எவ்வித அற்ப நிலையை அடைந்திருந்தாலும், அவன் தனக்குரிய ஸ்வதந்திரங்களை யடையுமாறு, அவனைக் கைதூக்கி விடவேண்டியது பிறர் கடமையென்றும், அதற்குரியமுயற்சிகளை பிறர் எடுத்துக்கொள்ளவேண்டுவது முக்கியமென்றும் அம்மதத்தைக்கைக்கொள்ளுகிறவர்கள் கருதுகிறார்கள். பாபம் செய்கின்றவர்களை அவர்கள் தள்ளிவிடுகிறதில்லை. கிறிஸ்துவ மதம் பரவும் பிரதேசங்களில் அவர்கள் தத்துவ சாஸ்திரங்களைக் கற்கிறதிலாவது அவைகளை போதிப்பதிலாவது விசேஷமாய் முயற்சிக்கிறதில்லை. கிறிஸ்துவமதத்தில் இந்துமதம்போல் தத்துவசாஸ்திர ஆராய்ச்சி அதிகமாய்க் கிடையாது. ஆனால் கிறிஸ்துவ மதம் பரவும் இடங்களில் லௌகிக வித்தைகளைக் கற்பிக்கும் பள்ளிக்கூடங்களும் வியாதிகளுக்கு சிகித்ஸை செய்யக்கூடிய ஔஷதாலயங்களும் ரணவைத்தியஸ்தானங்களும் செவிடு குருடு முதலிய அவயவக் குறையடைந்தவர்கள் படிக்கத்தக்க வித்யாசாலைகளும் பலகுற்றங்களுக்காக ராஜதண்டனையடைந்தவர்கள் சிறைச் சாலையிலிருக்கும் காலத்திலும் அவர்களை நல்வழிப் படுத்தும் போதனைகளும் அவர்கள் அச்சிறைச்சாலைகளிலிருந்து வெளிப்படும் காலத்தில் அவர்களை துர்வழிகளிலிருந்து மீட்டக்கூடிய ஏற்பாடுகளும் களவு கொள்ளை முதலிய தீச்செயல்களையே ஜாதித் தொழில்களாகக் கைக்கொண்ட ஜாதியர்களை நல்வழியிற் கொண்டுவர இரக்ஷண்ணிய சேனை என்ற ஸால்வேஷன் ஆர்மி யார்களால் ஏற்படுத்தப்பட்ட வஸதியான இடங்களும் (Criminal Settlements) மிக எளியவனும் யாசிக்காமல் கௌரவமாய்க் காலக்ஷேபம் செய்ய பழக்கிக் கொடுக்கும் கைத்தொழிற் சாலைகளும், பெற்றோர்களால் விவாக ஸம்ஸ்காரமில்லாமலும் அல்லது தாரித்திரியத்தினாலும் அல்லது குரூர மனதினாலும் அகற்றப்பட்ட குழந்தைகளை எடுத்து வளர்க்க அநாதாலயங்களும், சம்சாரத்தினின்று நழுவி விலக்கப்பட்ட ஸ்திரீகளைக் கைதூ

தேற்றசரண்யஸ்தானங்களும் Refuges for Fallen Women ஏற்படுவது சாதாரணமாய்ப் பார்க்கக்கூடியதாயிருக்கிறது. ஒவ்வொரு ஜீவனும் உலக விகாஸமுறையில் ஹீனஸ்திதியை அடைந்திருந்த போதிலும் அவன் கௌரவமானவன். அவன் அரிய பெருமைக்குரியவன். அவனை உத்தாரணம் செய்யவேண்டியது அவனைக்காட்டிலும் உயர்ந்த ஸ்திதியில் உள்ளவர்களின் கடமை என்ற தத்துவத்தைத் தெரிந்துகொண்டதின் பயனாகும். மேற்சொல்லிய ஹீன ஸ்திதியை அடைந்த பலர்கள் இந்துமதத்திலோ ஜாதியிலிருந்து விலக்கப்பெற்று அவர்கள் குற்றமற்றவழிகளை அடையாவண்ணமும் இன்னும் அதோகதிகளை அடையுமாறும் தள்ளப்படுகிறார்கள். ஆனால் ஆரியமதத்தில் கல் மண் புல் பூண்டு மிருகம் மனிதன் முதலிய எல்லா ஜீவராசிகளும் ஈசுவரனுடைய அம்சமென்று கூறுகின்ற நியாயத்தால் ஜீவகாருண்யம் மனிதவர்க்கத்திற்குமட்டும் காட்டப்படாமல் எல்லாப்பிராணி வர்க்கங்களுக்கும் காட்டப்படுகிறது. அஹிம்ஸையானது பரமதர்மமென்று கொண்டாடப்படுகின்றது. இந்துக்களில் புலால் உண்பவர்களும் விரதகாலங்களிலும் பிதுர்ப்பூசனைகாலங்களிலும், வயதுசென்று இப்புவியை விட்டுநீங்கும் காலம் நெருங்கும்பொழுதும் அவ்வுணவை மறுக்கவேண்டுமென்று நினைப்பதே, அத்தர்மம் உத்தமமானதென்று கைக்கொள்ளப் படுவதற்கு ஒரு சாக்ஷியமாகும். மேற்றிசையோன்குதிரைநாய்முதலியமிருகங்களைப்பரிபாலிப்பதற்கு முக்கிய காரணம் யாதெனில் அவைகள் நன்றாக வளர்க்கப்பட்டால் அதினால் தனக்கு ஏற்படும் லாபத்தைக் கருதுவதால்தான். ஜீவகாருண்யம் என்பது அவன் மனதில் முக்கிய காரணமாக ஏற்படுகிறதில்லை. அது கீழ்ப்படியான ஸ்தானத்தை யுடையது என்றே கருதுகிறான்.

* * *

இவ்விதமாகவே பாரஸீக மதத்தைச் சார்ந்தவர்கள் 'சுத்தம்' என்ற தத்துவத்தை முக்கியமாய்க் கைக்-



கொண்டிருக்கிறார்கள். பிருதிவி, ஜலம், காற்று முதலியவைகளைச்சுத்தமாய் வைப்பதும், மனோவாக்குக்காயங்களை சுத்தமாய் வைப்பதும், அத்தத்துவத்தை அறிந்து அப்பியஸிப்பதால் ஏற்படும் பயனாகும். இதின் மூலமாய் பல பிரயோஜனங்கள் ஏற்படுகின்றன. நதிகளிலும் தடாகங்களிலும் மற்ற நீர்நிலைகளிலும் இருக்கும் ஜலத்தைச்சுத்தமாய் வைப்பதும் பட்டணங்களிலும் கிராமங்களிலும் வீடுகளிலும் அசுத்தமான வஸ்துக்கள் இல்லாமற்செய்வதும் இத்தத்துவத்தின் காரியமாகும். சரீரத்தை ஸ்நானத்தினாலும் உட்கொள்ளும் ஸாத்விக ஆகாரம் பானம் முதலியவைகளாலும் தரிக்கும் உடைகளாலும் சுத்தமாய் வைத்திருத்தலும் அதைச் சார்ந்ததேயாகும். வாக்கை வாய்மையால் சுத்தம் செய்தலும், மனத்தை பகவத்கீதை 16-வது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிற தெய்விக ஸம்பத்துக்களாகிய பயமின்மை முதலிய தன்மைகளால் சுத்திசெய்வதும், சௌசம் என்ற தத்துவத்தின் கண்ணாக ஏற்படுகின்றன.

* * *

இவ்வாறு ஈசுவரனது விபூதிகள் பல மதங்களிலும் பல ஜாதியார்களிடத்தும் பல நாகரிகங்களிலும் பலவிதங்களில் பிரகாசிக்கின்றன. அவைகள் மஹத்தானபடியால் ஒரே மதத்திலும் ஒரே நாகரிகத்திலும் அமைக்கக் கூடியதல்ல.

அ. ரங்கஸ்வாமி ஐயர், B. A., B. L., F. T. S.

---

## ஸூக்ஷ்ம சரீரிகளான மஹோபகாரிகள்.

### உலக முழுமையிலும் அவர்களைப் பற்றிய நம்பிக்கை.*

தற்காலத்தில் பற்பல மதஸ்தர்கள், உயிர் நீங்கிய உடலைத் தழுவுவார் போல, உட்கருத்தையறியாது அநுஷ்டித்து வரும் அநேக கொள்கைகளைத் தத்துவார்த்தத்துடன் விளக்கி, உயிர்ப்பிப்பது பிரஹ்மக்ஞான தர்சநத்தின்பிரதான அம்சமாகும். மேற்கூறிய விதமான மூட பக்தியை உதறி, மனோ, வாக்கு, காயங்களின் சுத்தியையே எப்போதுங் கருத்திற்கொண்டு, யுக்தி புத்தியுடன் தம்முடைய நித்திய சரியையைச் சீர்ப்படுத்திவரும் மேன்மார்க்கத்தைக் கைக்கொண்ட தீரர்கள் கூடச் சிற்சில சந்தர்ப்பங்களில், தம்முடைய நெடுநாள் வழக்கங்கள் அகன்றமையால், ஏதோ தம்வாழ்க்கைக்கொருகுறையேற்பட்டதாகஎண்ணுகிறார்கள்.

ஆயினும், பூர்வ ஜன்ம கர்ம வசத்தால், இவர்கள் பிரஹ்மக்ஞான தர்சநத்தை அவலம்பிக்கும் பாக்கியத்தைப் பெற்றிருந்தால், இம்மார்க்கத்தைக் கைப்பற்றியதில் தம் வாழ்க்கைக்கொரு குறையும் ஏற்படவில்லையென்றும், ஆனால் முன்னினும் பன்மடங்கு பெருமை வாய்ந்ததென்றும் நன்கறிவார்கள். இவர்கள் கனவு கண்டு விழித்தவர்களைப் போல், தாம் பக்தியுடன் அநுஷ்டித்து வந்த நம்பிக்கைகளைப் பற்றித் தெளிவாய் வியவஹரிக்க இயலாதவர்களாயிராமல், பௌதிக சாஸ்திரிகள் பிரகிருதி தர்மங்களைப் பரீக்ஷித்தறிவதுபோல, ஆராய்ச்சி செய்து உட்கருத்தை வெளிப்படுத்த சக்தர்களாவர். பிரஹ்மக்ஞான தர்சநத்திற் பயிலப்பயில முன் விளங்காமலிருந்த கொள்கைகளின் உட்கருத்துக்களெல்லாம் நாளுக்குநாள் அதிகபிரகாசத்துடன் ஸ்புரிக்கும்.

பிரஹ்மக்ஞான தர்சநத்தால் விளைந்த ஓர் குறித்த நற்பயனென்னவெனின், நாஸ்திகம் பரவிய தற்கால நாகரிகம்

* இது ஸ்ரீமான் லெட்பீடரவர்களுடைய இன்விஸிபில் ஹெல்பர்ஸ் என்னும் புத்தகத்தினின்றும் எடுத்தெழுதப்பட்டது.



தலைப்படுவதற்கு முன்னர் பிரசாரமாயிருந்தும், இப்போது மங்கியுமிருக்கிற ஒரு பாரமார்த்திக உண்மையைத் திரும்ப நம்மவர்க்கு உத்போதம் செய்வதே. அவ்வுண்மையானது, ஸ்தூல உலகத்தின்நன்மைக்கு ஆதாரபூதமாயுள்ள ஸூக்ஷ்மலோகத்தைப் பற்றியதாகும். நமது ஸ்தூலப் பார்வைக்குப் புலனாகாமல் பிருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களிலும் சஞ்சரிக்கும் ஜீவவர்க்கங்களென்ன—வனங்களிலும்மலைகளிலும் பாதாளமான சுரங்கங்களிலும் வஸிக்கும் தேவகணங்களென்ன—இவைகளைப் பற்றிய நம்பிக்கையும், நாம் கேள்வியுற்றிருக்கும் அதையொட்டிய கதைகளும் மௌட்டியத்தாலான பொய்யென்று நாம் கொள்ளத்தகாதென்றும், ஆனால் அவைகள் வாஸ்தவமும் சாஸ்திரீயமுமான "உண்மைகளை ஆதாரமாக உடையனவென்றும் பிரஹ்மக்ஞாந தரிசனம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்குகின்றது. மரணத்திற்குப் பின் ஜீவனின் கதியைப் பற்றி நியாயத்திற்கும் சாஸ்திரத்திற்கும் ஒவ்வாத விபரீத அபிப்பிராயங்களையுடைய மேனாட்டாருக்கு, இறந்த பிறகு ஜீவனுடைய லோகாந்தர வாழ்க்கையைப் பற்றித்தெளிவிப்பதன் மூலமாய் விசேஷமான பிரயோஜனத்தைக் கொடுக்கின்றது. நமக்குங்கூட இப்போது மேற்சொன்ன விஷயத்தைப் பற்றி நுண்ணறிவே யில்லாமற் போயிற்று. ஆகையால் மேனாட்டாரைப் போலவே நாமும், அவ்வளவு பிரயோஜநத்தை, பிரஹ்மக்ஞான தரிசநத்தாலடைகிறோம்.

ஜீவனுடைய (அழிவற்ற அல்லது) சாசுவதமான தன்மையையும், ஸ்தூல உடல் நீங்கிய பிறகு ஜீவனுடைய லோகாந்தர வாழ்க்கையையும் பற்றி வியவஹரிப்பதில் பிரஹ்மக்ஞான தரிசனம் ஒருவாறு, மற்றைய மதஸ்தர்கள் தற்கால நிலையில் வியவஹரிக்கும் முறையினின்று முற்றிலும் வேறுபடுகிறதெனக் கூறலாம். அதாவது, பிரஹ்மக்ஞான தரிசநம் இவ்விஷயங்களெல்லாம் புராணத்திலுள்ளன, வே

தங்களிலுள்ளன, இன்னும் சிலாக்கியமான கிரந்தங்களிலுள்ளன. இவ்விஷயங்களெல்லாம் நமது முன்னோர்கள் கூறக்கேட்டிருக்கிறேன். தத்துவ சாஸ்திரமும் இவ்விஷயங்களைத் தான் நிர்ணயிக்கின்றது'' என்று மாத்திரம் சொல்லிக்கொண்டிராமல்; அவைகளை நாம் பிரத்தியக்ஷமாயறியலாமென்றும், இந்த ஸ்தூல உலக வாஸிகளாகிய நாம் ஒவ்வொருவரும் எவ்வளவு ஸ்வாநுபவத்துடன் ''காற்றை'' உணருகிறோமோ, அவ்வளவு ஸாதாரணமாய் ஸூக்ஷ்ம உலகங்களில் தொழிற்பட்டு முயன்று வருகின்ற அநேகர் பிரஹ்மஞான ஸங்கத்தில் இப்போதும் உளரென்றும் வியக்தமாய்க் கூறுகின்றது.

இன்னும் பிரபஞ்ச நியதியில் ஸ்வாபாவிகமாகவே ஏற்பட்டுள்ள, ஸூக்ஷ்மமாய்த் தொழிற்படும் மஹோபகாரிகளான ஜீவகணங்களைப் பற்றியும் பிரஹ்மஞான தரிசநம் விரித்துரைக்கின்றது. தொன்று தொட்டு, இம்மஹோபகாரிகளைப்பற்றிய நம்பிக்கை உலக முழுமையும் இருந்திருப்பதாகவே தெரியவருகிறது. இப்போதும்கூட கிறிஸ்தவ மதத்தின் ''பிராட்டெஸ்டண்ட்'' என்ற வகுப்பினரைத் தவிர மற்றெல்லா மதங்களிலும் இவ்வுண்மை பூர்ணப் பிரகாசத்துடன் விளங்காமற்போனாலும், கொஞ்ச நஞ்சமாவது உள்ளது. பிராட்டெஸ்டண்ட் வகுப்பினர் தம்முடைய மதத்தை ஏற்பாடு செய்துகொண்டதில் செய்த தவறு ஒன்றுண்டு, அஃதாவது பரிபக்குவ நிலையில் மநுஷ்யனுக்கு மேற்பட்டவும், ஈசுவரனுக்குத் தாழ்ந்தவுமான பல ஜீவ வர்க்கங்கள் பல தாரதம்மியங்களுடன் உள்ளன என்னும் ஸோபாந முறையைத் திரஸ்கரித்து விட்டு, மநுஷ்யனுடன் கடவுள் நேரான ஸம்பந்தத்தை வைத்துக்கொண்டிருக்கிறார் என்று மட்டும் கருதினர். இராஜாங்க முறையை ஆராய்ந்து பார்ப்போமானால் பிரஜைகளுடன் அரசன் நேரான ஸம்பந்தம் வைத்துக்கொண்டு ஆளுகின்றானில்லை. அரசனுக்குக்



கீழாக அநேக உத்யோகஸ்தர்கள் அநேக இலாகாக்களுக்கு அதிபர்களாயிருந்து அரசனுடன்ஒத்து உழைப்பதுஇவ்வுலகத்திய இராஜாங்க முறையின் நேர்மைக்குஅத்தியாவசியகமாயின், இதனினும் பன்மடங்குபெரியதும், ''நேர்மையே'' (harmony) உருவெடுத்ததுமான பிரபஞ்ச நியதிக்கு, ஈசுவரனுக்குத் துணைவர்களான மஹோபகாரிகள் எண்ணிறந்தவர்கள் மனுஷ்யனுக்கு மேம்பட்ட நிலையில் இருந்தே தீரவேண்டுமென்பதற்கு ஆக்ஷேபணை யென்ன? ஆகையால் ''பிராடெஸ்டண்ட்'' வகுப்பினர் ஈசுவரனுடைய பெருமையைச் சரியாய் அறிந்துகொண்டார்களிலர். மநுஷ்யர்கள், ஈசுவர ஸஹாயம் தமக்கு எவ்வாய்க்கால் வழியாக வருமோ, அதை நாடாமற் போனமையால் உதவி பெறாமலிருக்கின்றனர்.

பிரஹ்மாண்ட நாயகனாகிய ஜகதீசுவரன், நேராகவே மநுஷ்யர்களிடத்து ஸம்பந்தம் வைத்துக்கொண்டும், பிரதி மநுஷ்யனையும் தம் கருத்திற் கொண்டும், அவனவனுடைய க்ஷேம லாபங்களையும் கவனித்து வருகிறார் என்னும் கொள்கையைச் சற்று ஆலோசிக்குமிடத்து, அதன் குறைகளும் அஸம்பாவிதங்களும் நமக்கு நன்றாய் விளங்கும். அதாவது ஜகத்தைப் பரிபாலனம் செய்வதில் ''ஈசுவரன்'' பாரபக்ஷமுள்ளவரென்று நாம் கொள்ளவேண்டி வரும். ஒருவன் தன் பூர்வ கர்மங்களுக்குத் தக்கபடியே இப்போது உதவிபெறுகிறான் என்றும், அவ்வுதவியையும்நேராக ஈசுவரனிடமிருந்தே யல்லாமல், ஈசுவரனைப் போலவேயுள்ளவர்களாகிய மகான்களின் மூலமாகவே பெறுகிறான் என்றும் பிரஹ்மஞான தரிசனம் கூறுவதானது, மேற்கூறிய அஸம்பாவிதங்களுக்கு இடந்தராது. தவிரவும், ஈசுவரன் முதல் நம்முடைய பாத தூளிவரை ஸோபான முறையாக பலபடிக்கிரமமான பக்குவிகளாகிய ஜீவர்கள் உளர் என்னும்

ஸநாதனமான ஞானத்தைத் திரும்ப நம்மவர்க்கு பிரஹ்மக் ஞான தரிசனம் வற்புறுத்துகின்றது.

ஸூக்ஷ்ம லோகத்தினின்று மேற்கூறியவாறு உபகரிக்குமவர்களைப்பற்றிக் கீழ் நாடுகளில் எப்போதும் நம்பிக்கை உள்ளது. மற்றைய தேசங்களிலும் இதே நம்பிக்கையிருந்தபோதிலும், பற்பல பாஷைகளில் பற்பல பெயர்களால் அவ்வுபகாரிகள் அழைக்கப்படுகின்றனர். ஐரோப்பாக்கண்டத்திலும், "கிரீஸ்" தேசத்துக் கதைகளில் தேவர்கள், அடிக்கடி மநுஷ்யர்களுடைய பிரவிர்த்திகளிலும் உபகரிப்பதாகப் பிரஸ்தாபம் உள்ளது. "ரோமர்"களுடைய கதையிலும் "காஸ்டர்" "பொல்லக்ஸ்" என்ற இருவர்களாகிய உபகாரிகள் 'லேக்ரிஜில்லஸ்' என்னும் யுத்தத்தில், "ரோமர்கள்" ஒரு அற்பமான குடியரசா (Repuplic) யிருந்தபோது அவர்கள் ஸைந்யங்களை நடத்தினரென்றும் பிரஸ்தாபம் உள்ளது. மேல்நாட்டுச் சரித்திரத்தின் ஆதிகாலமாகிய புராணகாலத்தில் தான் இவ்வித நம்பிக்கை இருந்தது. பின்பு மறைந்ததென்று இல்லாமல், மத்ய காலத்துக் கிறிஸ்தவ பக்தர்களின் சரித்திரங்களிலும் அவர்களைப் புறச் சமயத்தார்களின் ஹிம்ஸையினின்றும் தப்புவித்த தேவதூதர்களைப் பற்றிப் பிரஸ்தாபம் உள்ளது. இவ்வுபகாரிகள் கிறிஸ்தவ சமயிகளான "பக்தர்கள்" அநேகரை அவர்கட்கபாயம் உண்டாகாமல், அவர்கள் அறியாமையால் நாடும் வழியைவிட்டு, வேறு மார்க்கத்தைப் பற்றும் படியாகத் தூண்டி வழிநடத்தியுமிருப்பதாக ஸூசனைகள் அக்கதைகளில் உள்ளன.

ஆத்மாராம்.

---

## "ஜகத்குரு வரும் வரை"
## நாம் செய்யவேண்டிய தென்ன?

---

ஜகத்குரு எப்பொழுது வரப்போகிறார் என்று நாம் எல்லோரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். நாம் சேர்ந்திருக்கிற உதயதிசை நக்ஷத்ர சங்கத்தின் முக்கிய வேலை என்னவென்றால், அவர் வந்தவுடன் உலகம் அவரை அங்கீகரிப்பதற்குற்ற ஏற்பாடுகள் செய்வதே. அவர் வரும் வழியை நன்றாகச் சுத்தப்படுத்த வேண்டியது நமது முக்கிய கடமை. ஜனங்களுக்கு அவர் வரவை அடிக்கடி நாம் தெரிவிப்பதுமன்றி நாம் அவர் வருவாரென்று எப்படி பூர்ணமாய் நம்புகிறோமோ, அப்படியே இதரர்களையும் நம்பும்படி செய்யவேண்டுவது இச்சங்கத்திலுள்ள ஒவ்வொரு மெம்பரின் பிரதான வேலையாகும். நாம் எவ்வளவுக்கெவ்வளவு அவர் வரவை எதிர் பார்த்துக்கொண்டு, அவரின்மேல் அளவிலா நேசம் செலுத்துகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு அவரும் நம்மை அதைவிடப் பன்மடங்கு நேசத்தோடும் அன்போடும் கருதுவார் என்பது திண்ணம். ஜகத்குருவானவர் தோன்றினால் "இவர் லோககுரு தானென்று நாமறிந்துகொள்வது எங்ஙனம்?" என்ற ஆவல் நமக்கு இருந்தால் அவரைத் தெரிந்து கொள்வதற்கு எவ்வழிகள் உண்டோ அவைகளையெல்லாம் அடையநாம் முயற்சிக்க வேண்டுமல்லவா? நாம் எப்படித் தெரிந்துகொள்வது? அவர் எப்படி உலகத்தில் நடந்துகொள்வாரோ அப்படி நாமும் நடக்க வேண்டியது அவசியம். பரமபுருஷன் ஒருவர் வரப்போகிறார் என்று நாம் நம்புகிறோமாகையால், அவரைப்போலவே நாமும் நடக்கவேண்டியது அவசியம். அவரிடத்தில் என்னகுணங்கள் விசேஷித்து நிறைந்திருக்கின்றனவோ அக்குணவிசேடங்கள் நம்மிடத்திலும் அணுவளவாவது இருக்கும்படி நாம் தினசரி நடபடிக்கைகளில் நடந்துகொண்டு வருவோமேயா

னால், அவர்வரும்பொழுது, அவர்நம்மைச் சீக்கிரம் அறிந்துகொள்வதும், நாமும் அவரைத் தாமஸமின்றி லோககுருதான் இவர்என்று எளிதில் நிர்ணயித்தலும் இலகுவாயிருக்கும். வருகிற ஜகத்குரு மைத்ரேய மஹரிஷியாயிருந்தாலும் அல்லது யாராயிருந்தாலும்சரி. அவருடைய குணாதிசயங்கள், கொஞ்சமேனும் நம்மிடத்திலும் அமைந்திருந்தால்தான் நாம் அவரை எளிதில் தெரிந்துகொண்டு அவரைச் சந்தோஷப்படுத்தி அவருக்கேற்றபடி நடந்துகொள்ளலாம்.

இன்னும் சிலவருஷங்களுக்கு நமக்கு இந்த வேலையே ஒழிய வேறில்லை. ஜகத்குருவின் பூர்ணசாயையுள்ள பிரதிபிம்பங்களாயிருப்பது சிரமமாயினும், அதிசயமான சம்பூர்ணகுணங்களோடு கூடிய ஜகத்குருவின் முன் மாதிரியை வைத்தே நடக்க கூடியவரையில் நாம் எவ்விதத்திலும் முயலவேண்டும். நம்மைவிடக் கீழ்ஜாதியார்களிடத்தும் பலஹீனமுள்ள ஜந்துக்களிடத்தும் விசேஷஅன்பு பாராட்டவேண்டும். கல்வியறிவு இல்லாதவர்களையும், திக்கற்றஅநாதிகளையும் விசேஷஅநுதாபத்துடன் கவனிக்க வேண்டும். பரமகுருவின் அளவிலா அன்பையும், எங்கும் நிறைகின்ற கருணைக்கடலாகிய அப்பரமருடைய இன்னும் பல மேலான குணாதிசயங்களையும் உலகத்தில் வெளிப்படக் காண்பிப்பதினால் அவரைப்போலவே நமக்கும் அபாரமான அன்பின்சக்தியானது பெருகுமன்றோ? அவர் அன்பிற்கும் கருணைக்கும் அளவு சங்கியையே இல்லை. உலகமுழுமைக்குமே தம் கருணைவெள்ளமானது பூர்ணமாய்ப்பிரவகித்துத் தம்மினும் மெலியாராகிய அகில ஜீவகோடிகளையும் உஜ்ஜீவிக்கச் செய்யும் மாண்புடைய அன்பிற் பூரணமான் அந்தக்கரணத்தோடு அம்மஹான் விளங்குகின்றனரன்றோ! அவரது அன்பில் எள்ளளவாகிலும் நம்மிடத்திலிருந்தால் அவர் வரும்பொழுது சீக்கிரம் அவரைத் தெரிந்து கொள்ளலாமல்லவா? நாம் அப்படி அவரை எதிர் பார்த்துக்கொண்டு அவர்போல நடப்பது



ற்கு அடிக்கடி விடாமுயற்சி செய்யவேண்டும். அவருடைய ஞானத்தில் கொஞ்சமாகிலும் நமக்கு இருக்குமேயானால், அவரது பெருமையான குணங்களைக் கண்டு, அவர் போகும் வழியே நாமும் செல்வதற்கு அஃதொரு அஸாதகமாயிருக்கும். மஹா புருஷர்களிடத்தில் பூரணமாயிருக்கிற குணாதிசயங்களை நம்மிடத்தில்அமைப்பெறுமாறு முயலவேண்டியது அவசியமென்று அறியுங்கள். மூர்க்கத்தனமாகவாவது அல்லது கோபமாகவாவது பேசாமல், பிறரிடத்தில் வெகு சாந்தமாய் நடந்துகொள்ள நாம் எவ்விதத்திலும் பிரையாசைப்படவேண்டும். அப்படி மூர்க்கமாகவோ அல்லது கோபமாகவோ பேசினால் என்னஎன்று அலக்ஷியமாய் இருந்துவிடக்கூடாது. எப்படி இக்கெட்டகுணங்கள் கொஞ்சமேனும் நம்மிடமிருந்தால், அவைகள் நாம் செல்லுகிற வழியைத் தடுக்குமோ, அப்படியே இவைகள் நம்மிடமில்லாமற் போனால், நாம் நடக்க முயல்கிற வழிக்கு மிக்க ஸாதகமாயிருக்குமல்லவா? நம்முடைய தினஸரி நடபடிக்கைகளில் நேரும் இத்தகைய அற்பக் குற்றங்கள்தான் நம் அபிவிருத்தியை மிகக் குறைத்துவிடுகின்றன. ஜலமுள்ள ஒரு பாத்திரத்தில் ஏதாவது ஒரு சிறுதுவாரம் இருந்தால், அத்துவாரத்தின் வழியாய்ச் சற்று நேரத்திற்குள் ஜலம் முழுவதும் கீழே போய்விடுவது போலவே, துர்க்குணங்களினால் நம்முடைய சீலமுழுவதும் கெட்டுப்போகுமல்லவா? கரையான்கள் எவ்வளவு சிறிய பிராணிகள்! அவைகளெல்லாம் ஒன்றுகூடி, ஒருகட்டை எவ்வளவு பெரிதாயிருந்தாலும் அதைப் பிரதிநிமிஷமும் கொஞ்சங்கொஞ்சமாக அரித்துக் கடைசியில் ஒன்றுமில்லாமல் செய்கிறதை எல்லோரும் பார்த்திருக்கிறோம். அச்சிறுஜந்துக்கள் சிறிது நேரத்தில் ஒன்றுகூடி ஒரு பெரிய புற்றையும் கட்டிவிடுகின்றன. அதுமாதிரியே நம் துர்க்குணங்களும் நற்குணங்களும் நம்மைத் தாழ்த்துவதற்கும் உயர்த்துவதற்கும் கூடும். ஆகையால் ஒவ்வொரு மெம்பரும் அவரைப் போலவே நடக்க முயல்வதுமன்றி நம்

ஞானம், அன்பு, இரக்கம் முதலிய நற்குணங்கள் கெட்ட குணங்களால் ஒழிந்து போகாதபடிக்கும் காத்துக்கொண்டு வருவது மிக அவசியமாகும். பெரிய விஷயங்களில் நாம் அரிய குணங்களைக் கைக்கொண்டு, கொடிய தோஷங்களை (பாபச் செயல்களை) மந உறுதியுடன் விலக்கிவிடக் கூடிய தீரர்களாயிருப்பினும், அதைப் பார்க்கிலும் அற்ப கார்யங்களிலேயே நாம் அதிக கவனமாயிருந்தல் வேண்டும். ஏனெனில் ஸதாகாலமும் அற்ப கார்யங்களுடனேயே நாம் போராட வேண்டியவர்கள். மகத்தான கார்யங்களோ வெகு அபூர்வமாகத் தான் ஸம்பவிக்கும்.

ஆகையால் நீங்கள் கவனிக்கவேண்டிய விஷயமொன்றுண்டு. ஜகத்குருவின் அவதார காலத்திற்குள் நீங்கள் செய்யவேண்டிய யத்நங்களுள், அவர் வருங்காலத்தில் அவரை யறிந்துகொள்ளும் சக்தியுடையவர்களாவதும் ஒன்றெனக்கருதுவீர்களாயின், அவரிடம் விளங்கும் நற்குணங்களை உங்களுடைய சீலத்திலும் அமையப் பெறும் பொருட்டு, இப்போது முதற்கொண்டே நீங்கள் இடையறாத விடாமுயற்சியுடன் யத்தனிக்கவேண்டும். அதனால் உங்கள் ஸ்வபாவத்தில் உள்ள அற்பக்குறைகளை வேரோடு களைதல் வேண்டும். ஏனெனில் நீங்கள் இதுவரை சேகரித்திருக்கும் அன்பும் ஞானமும் அற்பக் குறைகளாகிய துவாரங்களின் வழியாய் வீணாய் ஒழுகிப்போகின்றன. இந்நஷ்டத்தைக்கூட உணருகிறீர்களில்லை.

அதைர்யங் கொள்ளாதீர்கள். அதைர்யங் கொள்ளுதல், ரோம ராஜ்யத்தின் பூர்வீகர்கள் கருதிவந்தபடி, எல்லாக் குற்றங்களிலும் மிக இழிவானது. நமக்குள்ளிருக்கும் ஈசுவர சைதந்யம் எவ்வித இடையூறையும் விலக்கி, எவ்வித் தவறுகளையும் மேற்கொண்டு நம்மை ஸந்மார்க்கத்தில் உன்னத பதவியை யடைவதற்காளாக்கி விடுகின்றது என்பதில் சந்தேகம் வேண்டாம்.



ஆகையால் உங்களிடத்திலேயே முதலில் தைர்யங்கொள்ளுங்கள். ஏனெனில் உங்கள் ஹிருதயத்தில் வஸிக்கின்ற ஆத்மா, பரமாத்மாவின் ஒரு பொறியாகும். அப்படிப்பட்ட ஆத்மா துன்பங்கள் எவ்வளவு வந்தாலும் அவ்வளவையும் ஜயிக்கத்தக்க வல்லமையுடையது. மஹான்களிடத்திலும் சலியாத பக்தியை நாம் கொள்ளவேண்டும். ஏனெனில் ஈசுவரத் தன்மை அவர்களிடம் நம்மைப் பார்க்கிலும் அதிகமாகப் பிரகாசிக்கின்றது. கடைசியாக "மநுஷ்யனால் ஸாதிக்கக்கூடாத கார்யமொன்றுமில்லை. மநுஷ்யனே ஈசுவராம்சம் பொருந்தியவன்" என்னும் பரம இரஹஸ்யத்திலும் உறுதியான நம்பிக்கை வேண்டும். ஏனெனில் நமக்குள் வஸிக்கும் ஈசுவர சைதந்யம் பரமேசுவரனது பாதாரவிந்தங்களுக்கே நம்மைச் சேர்ப்பிக்கின்றதன்றோ!

R. சேஷாசாரி.

---

## நன்மொழி.

பாராதி யண்டமெலாம் படர்காணற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரெதுதா னின்ற
தாராலு மறியாத சத்தன்றோ அதுவாய்
அங்கிருநீ யெங்கிருந்தும் அதுவாவை கண்டாய்
பூராய மாகவுநீ மற்றொன்றை விரித்துப்
புலம்பாதே சஞ்சலமாய்ப் புத்திபைநாட் டாதே
ஓராதே ஒன்றையுநீ முன்னிலைவை யாதே
உள்ளபடி முடியுமெலாம் உள்ளபடி காணே.

# ஸ்ரீ மருகுருதோத்திர சோடச கலாமாலை.

## எழுசீர் ஆசிரியவிருத்தம்

---

மங்கள மிலங்கி யோங்கிடு மிமய
வரைமருங் கொளிருமோ ரமலத்
துங்கமார் வெள்ளி யம்பலப் பதியிற்
றொல்தவப் பயனெலாந் திரண்டு
சிங்கவா தனத்தி லமர்ந்துசின் முத்திரை
திகழ்ந்திடச் சீடர்சூழ்ந் தேற்றும்
புங்கவா வடியார் போற்றுமெய்ப் பொருளே
பூரண மருகுரு மணியே. (க)

பூரண பிரம சச்சிதா னந்தப்
பொருளதே போதக குருவாய்த்
தாரணி யுய்வான் வந்தத் துவமே
சாற்றுமெற் குளமனு வதனைப்
பூரணப் பொருளா யேற்றுவந் தன்பு
பொருந்திநல் லபயமு நல்கிக்
காரண மென்கண் ணுய்ந்திடா தருளாய்
கருத்தனே மருகுரு மணியே. (உ)

கருத்தனே யகர்த்த வன்னிதா கருத்த
வாண்டவா கணக்கில்பல் பிறப்பில்
வருத்தமுற் றடியேன் மயங்குத லுனது
மாண்புறு மருட்பெருக் கினுக்குப்
பொருத்தமோ சொல்லாய் பொய்யனு மென்னைப்
பூரண னுக்கினை யாயின்
அருத்தமா மன்னி தாகருத் துவமென்
றறையலா மருகுரு மணியே. (ங)

அன்னிய மில்லா வென்னையாட் கொள்ள
வளவிலா வருணிதி யிருந்தும்



என்னினை வுற்றுப் கொல்லெனை யொப்பா
ரில்லரோ விசைந்தனர் நின்பால்
அன்னவ ரைக்ய மானதெம் முறையோ
வாய்ந்துணர்ந் தன்புபூண் டடியேன்
பன்னிய வழக்கு மோர்ந்தருள் புரிவாய்
பரிசுத்த மருகுரு மணியே. (ச)

பரிசுத்த மனமும் பண்புறு தொண்டர்
பணிகளு மன்னவ ருறவைத்
தரிசித்து வாழுஞ் செல்வமு நல்கித்
தரணிகா மாதிக ளுடனே
விரிசித்தி கீர்த்தி புகழ்களை விரும்பா
வித்தக ரடைந்தசிற் சுகமே
புரிசித்தி யாவுஞ் சூழ்கவீற் றிருக்கும்
பொற்புறு மருகுரு மணியே. (ரு)

பொற்புறு மெண்ணெண் கலைகளி னெஞ்சம்
பொருந்திடா தறிவையோர்ந் தறிந்து
மற்பவெண் சித்தி யட்டயோ கங்க
ளனைத்தையு மருவருத் ததற
நற்பய னளிக்கு மைத்திரி யாதி
நான்குட னுங்குசா தனங்க
ளெற்கருள் புரியின் றடுப்பவ ருளரோ
வீசனே மருகுரு மணியே. (சு)

ஈசன்வே றியாம்வே றென்றிரு மாக்கு
மியல்பின ரினமகன் றகண்ட
பூசனை புரியுந் தொண்டர்கட் கன்பு
பூண்டவர் களிக்கவென் மனத்தில்
நேசமுற் றன்னோ ரருளிய ஞேய
நிலையையா னம்பிமுற் சனன
வாசனை யவற்று ளல்லவை யகற்றும்
வசமருள் மருகுரு மணியே. (எ)

---

வரங்கள்பற் பலவா நின்புறத் துள்ள
வலிமையை யுணர்ந்தமெய் யன்பர்
குரங்கெனக் குதிக்கு நெஞ்சமு மொருவிக்
குரூரமெய் வருந்திநின் மருங்கிற்
றிரம்பெற விருந்த சீரையு முணராத்
தீயபுந் தியிற்சிறந் தோங்குங்
கரங்குநோர் மனத்த ராயினுங் காக்கக்
கடனுள மருகுரு மணியே. (அ)

கடந்தவர் கருதும் பெரியநின் கடனென்
கடந்துள பற்பல சனனந்
தொடர்ந்துநீ யென்முன் றொன்றுமக் காலந்
தொக்குட லாவியும் பொருளு
மடர்ந்தென திடத்தே யங்கையி லேற்று
யற்புத வதற்குநீ சாட்சி
படர்ந்தவெவ் வினையும் பார்வையா லோட்டும்
பாவக மருகுரு மணியே. (கூ)

சாட்சியுண் டனந்தஞ் சிற்சத்தி சாட்சி
சாமவே தமுமொரு சாட்சி
சாட்சியான் அடியார் சாட்சியா தலினுற்
சாமியென் புறத்துள நீதி
சூட்சிமேற் கூறுஞ் சிறியனிவ் வெளிய
தொண்டனென் றுன்னியாட் கொண்டு
மாட்சியுற் றுய்ந்த வடியர்பாற் கூட்டும்
வாழ்வருள் மருகுரு மணியே. (ம)

அருளுடை யானென் றறைதரு மறைக
ளாதியு மன்புசீர் சாலத்
தெருளுடை யாரு முரைத்ததை வினவிச்
சிந்தையிற் களிப்பெழுந் தெனது
மருளுடைந் தறிதற் கரியசிற் சுகத்தின்
வாழ்க்கையை யடைந்துய வெல்லாப்



பொருளுடை யாய்நீ யென்றுவக் தனனுற்
புரிந்திடாய் மருகுரு மணியே. (மக)

பாலனுக் காகப் பாற்கட லீந்த
பண்பையும் பக்தனைப் புரக்கக்
காலனைக் காய்ந்த கருணையு மாதர்
கருப்பையுட் கட்டுண்டு கிடந்த
பாலனை யூட்டி யீர்த்தவல் லபமும்
பகர்ந்தசொற் சுவையெலா மறந்த
பாலனைத் தேற்றி யாளவல் லாயோ
மாசிலா மருகுரு மணியே. (மஉ)

மாதவப் பேற்றை யடைந்தநின் றொண்டர்
மார்க்கத்தை யடைந்துயா தந்தோ
பாதகச் செயற்கே யுறைவிட மான
பாவைய ராதிமோ கத்திற்
சாதகத் தொழில்செய் சழக்கரைக் கூடித்
தளர்ந்தவத் தருணத்தில் வந்து
போதனை புகட்டிப் புனிதனு வமைத்த
புண்ணியா மருகுரு மணியே. (மங)

புண்ணிய பாவ மின்னதென் றுணராப்
புல்லரைப் போல்பல பிறப்பிற்
பண்ணிய பாவங்க ளெண்ணரி ததனைப்
பரிகரித் தாந்தவ முயற்சி
யெண்ணியான் றுணியின் மனமிணங் காம
விடர்ப்படும் பொழுதிவ னுற்றுக்
கண்ணினு திகளாற் றீக்கைகற் பித்த
கருணையே மருகுரு மணியே. (மச)

கற்பனை தந்தா யன்னையாம் பரம
காரண குருவடி வாகப்

பொற்புற வமைந்த புண்ணியப் பேற்றைப்
புகழ்வனோ வொவ்வொரு காலஞ்
சற்குரு மணியாத் தோன்றியாட் கொண்ட
தன்மையைப் புகழ்வனோ வின்னுள்
சற்ஜன ருறவைத் தந்ததைப் புகழத்
தக்கனோ மருகுரு மணியே. (௰௫)

தக்கநா னுணர்தற் கேற்றபுத் திகளோ
சாலவு மிலையிந்தக் காய
மிக்கணத் திருந்த தினிவருங் கணத்தி
லிருக்குமோ மரிக்குமோ வறியேன்
பொக்கமே தொழிலா யுளவெனைப் புரந்து
பூரண வாழ்வையு மளிப்பாய்
சக்கரன் முதலோ ரேற்றுமங் களவென்
சாமியே மருகுரு மணியே.

முற்றும்.

ஓம் தத் ஸத்

M. வேதநாயகஸ்வாமிகள்,
தக்ஷிணாமூர்த்தி ஆச்சிரமம்,
சிந்து பூந்துறை.

---

## நன்மொழி.

---

சற்குணம் வாய்மை தயாவிவேகந் தண்மை
சற்குரு பாதமே சாயைபோ னீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்த
லற்புத மேதோன்ற லாகுஞ் சற்சீடனே.

## ஆசை ஒழிமின்.

---

நாம் அநுஷ்டிக்கவேண்டிய ஒழுக்கநெறிகளை எப்படி நம்முடைய நாட்டில் மஹரிஷிகள் வரையறைசெய்து ஸம்ஸ்கிருத பாஷையில் தர்மசூத்திரங்களாக ஏற்படுத்திவைத்திருக்கிறார்களோ, அப்படியே தேசாந்தரங்களிலும்காலாந்தரங்களிலுமிருந்த அநேக ஸித்தபுருஷர்கள் வேறுபாஷைகளிலும் அவ்விதமான நூல்களை இயற்றி வைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட பிராசீன கிரந்தங்களில் "Light on the path" என்பது ஒன்று. அது இந்தப் பத்திரிகையின் முன் பத்திராதிபராயிருந்து காலஞ்சென்ற பிரஹ்மஸ்ரீ ப. நாராயணஐயரவர்களால் "சன்மார்க்க தீபம்" என்னும் பெயருடன் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அதில் பல அருமையான ஒழுக்கமுறைகள் சிறு சூத்திரங்கள் ரூபமாக வெளியிடப்பட்டிருக்கின்றன. அவைகளில் "ஆசை ஒழிமின்'' என்னும் மேலேகண்ட வாக்கியமானது முதலாவது சூத்திரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆசையாவது என்ன, அதை ஏன் ஒழிக்கவேண்டும், அதை ஒழிப்பதென்றால் எப்படி என்பதைப்பற்றிச் சுருக்கமாக விசாரிப்போம்.

ஒரு பிராணி, பொருள், பதவி முதலான ஏதாவது ஒரு ஸம்பத்தை நாம் அடையவேண்டும் என்று கொள்ளும் விருப்பத்துக்கு ஆசை என்று பெயர். அதுதான் லௌகிகமான விஷயங்களில் நம்மைப் பிரவிர்த்திக்கும்படி செய்கிறது. அப்படிப்பட்ட பிரவிர்த்தியினால் நாம் சுகதுக்கங்களை அநுபவிக்கவும், காரியம் இன்னது அகாரியம் இன்னது என்ற விவேகத்தை அடையவும்இடம் உண்டாகிறது.

அப்படியானால் ஆசையை ஏன் ஒழிக்கவேண்டும்என்றால்,ஆசையால் தூண்டப்பட்டு ஸ்வயாயத்தைக்கருதிநாம்

விஷயங்களில் பிரவிர்த்திக்கிறேம். நம்முடைய ஆசை நிறைவேறுமல் போனல் நமக்குக் கோபம் உண்டாகிறது. நாம் ஆசைப்படும் பொருளை நம்மிலும் அதிகமாக உடைய வர்களைக் கண்டால் நமக்கும் பொறுமை உண்டாகிறது. நம்மைக் காட்டிலும் குறைவாயுள்ளவர்களைக் கண்டு நமக் குக் கர்வமும் மதமும் உண்டாகிறது. நாம் ஆசைப்பட்ட பொருள் அழிந்துபோனல் நமக்குத்துக்கம் உண்டாகிறது. நாம் ஆசைப்பட்ட பொருள் கிடைத்தாலும் அத்துடன் திருப்தி அடையாமல் இன்னும் வேண்டும் என்ற பேராசை உண்டாகிறது. இப்படிப் பலவாறுகக் குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் முதலானவைகளுக்கு ஆளாகி அவைகளால்விளையும்துன்பங்களில் அகப்பட்டு அவதிப்படுகி றேம்அப்படிப்பட்டதுன்பங்களுக்குக்காரணம்நம்முடைய ஆசையேதவிர வேறில்லை. ஆகையால் எவ்விதமான துன்ப ங்களுக்கும் உள்ளாகாமல் நாம் நிரந்தரமான ஆனந்தத் தையே அடைய வேண்டுமானல் ஆசையை ஒழித்தாலன்றி வேறு எந்த வழியாலும் ஸாத்தியமாகாது. இந்த உண்மை யைத் தான் திருக்குறளில்

"இன்பம் இடையருு தீண்டும் அவாவென்றும்
துன்பத்துட் டுன்பங்கெடின்" என்று சொல்லப்பட் டிருக்கிறது.

ஆசையை ஒழிப்பதென்றுல் எப்படி? எல்லாவிதமான பிரவிர்த்திகளையும் விட்டு அசேதன வஸ்துக்களைப் போல் ஒரு வேலையும் செய்யாமலிருப்பது என்று கருத்தல்ல. அப்படிக்கிருந்தால் வித்துக்குள் விருக்ஷம் போல நமக்குள் மறைந்திருக்கும் குணங்களும் சக்திகளும் விகாஸமடைவ தும், மேன் மேலும் நாம் உயர் நலம் அமைந்து ஈசுவர ஸா யுஜ்யம் பெறுவதும் இயலாது. ஆகையால் ஆசையை ஒழி



ப்பதென்றுல் ஸ்வயநயத்தை லக்ஷ்யமாகக் கொண்ட ஆசை களை மட்டும் விட்டு உலக நன்மையை லக்ஷ்யமாகக் கொ ண்ட காரியங்களைச் செய்ய வேண்டும் என்பது கருத்து.

அந்தக் கருத்தையே மேற்கூறிய முதலாவது சூத்திர த்தின் விரியுரையாகக் கொள்ளத்தக்க நான்காவது சூத்தி ரத்தில் "But work as those work who are ambitious" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது "ஆனல் ஆசை பிடித்தவர்கள் ஸ்வயநயத்தைக் கருதி எவ்வளவு ஊக்கத்து டனும் உத்ஸாஹமாகவும் வேலைகளைச் செய்கிறர்களோ அவ்வளவு ஊக்கத்துடனும் உத்ஸாகமாகவும் வேலைகளைச் செய்யுங்கள்" என்பதாம்.

ஆகையால் அஹங்கையும் மமதையும் அற்று வைரா க்கியத்தை அடைந்த விவேகிகளும் கூட நமக்கு ஆக வே ண்டிய தொன்றுமில்லையென்று நினைத்து உதாஸீனர்களா யிருக்கலாகாது. தங்களைக் காட்டிலும் கீழ்ப்பட்டவர்க ளுக்கு உபகாரமாகத் தங்களுடைய உடைமைகளைத் தங் களால் இயன்ற மட்டும் உபயோகப்படுத்த வேண்டும்.

ஈசுவரன் ஒரு வெள்ளம் போலும், ஆசை ஒழித்தவர் கள் அந்த வெள்ளத்து நீரைத் தேவையான நிலங்களுக்கு ப்பாய்ச்சும் கால்வாய்கள் போலும். கால்வாயானதுமேலி ருந்து வந்த ஜலத்தைத் தன்னிடம் நிறுத்திக் கொள்ளா மல் கீழே உள்ள நிலங்களுக்கு அனுப்பி விடுகிறது. அப்ப டிச் செய்வதனல் அந்தக் கால்வாய்க்கு மேலிருந்து புதிய ஜலம் வந்து கொண்டே யிருக்கிறது.

அப்படிக்கில்லாமல் அந்தக்கால் வாயானது தனக்கு க்கிடைத்த ஜலத்தைக் கீழே போகவிடாமல் தன்னிடம் அடைத்துக்கொண்டால் உடனே ஜலம் தேங்கிவிடுகிறது. அந்தக்கால்வாய்க்கு மேலிருந்து புது ஜலம் வருகிறதில்லை,

அடைபடாத வேறு கால்வாய்கள் வழியே போய்விடுகிறது அதனிடம் தேங்கின ஜலமும் இருக்க இருக்கக் கெட்டுப் போகிறது.

அதுபோல நம்முடைய அறிவையும் அன்பையும் பொருளையும் சக்திகளையும் நம்மிலும் தாழ்ந்தவர்களுக்கு அர்ப்பணம் செய்து உதவி புரிந்தோமானால் மேன்மேலும் அறிவும் அன்பும் பொருளும் சக்திகளும் கிடைக்கப்பெறுவோம். அவைகளைக் கொண்டு மேன்மேலும் உலக நன்மையை நாடி உழைக்க நமக்கு யோக்கியதை உண்டாகும்.

ஆகையால் நாம் ஸ்வநயத்தைத் தேடும் ஆசைகளை ஒழித்து உலகத்தின் யோக க்ஷேமத்தையே நம்முடைய யோக க்ஷேமமாகக் கொண்டு வேலைகளைச் செய்யவேண்டும்.

இதே தத்துவத்தைத்தான் பகவத் கீதை 3-வது அத்தியாயத்தில்.

"ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத।
குர்யாத்வித்வாம்ஸ்ததாஸக்த: சிகீர்ஷுர்லோகஸங்க்ர
ஹம் ॥

அதாவது" எப்படி அவிவேகிகள் ஆசையுடன் வேலைகளைச் செய்கிறார்களோ, அப்படியே விவேகிகளும் செய்யவேண்டியது. ஆனால் ஆசையை ஒழித்து உலக நன்மையைக் கருதிச் செய்யவேண்டியது" என்று அர்ஜுனமஹாராஜனுக்கு ஸ்ரீகிருஷ்ண பகவானால் உபதேசிக்கப்பட்டது.

வி. விசுவநாதையர், B. A., B. L.,

---

## சமாசாரம்.

---

வெண்டாமரை நாட் கொண்டாட்டம்:—1915௵ மேமீ 8௳யில் வெண்டாமரை நாள், வழக்கப்படி மதுரையில் விமர்சையாய்க் கொண்டாடப்பட்டது. மாலை 3மணி முதல் சாயங்காலம் 6 மணி வரை சுமார் 400 ஏழைகளுக்குப் பசியாற, அன்னமளிக்கப்பட்டது. 6-30 மணி முதல் 8-மணி வரை சில மெம்பர்களும் வைதீகர்கள்சிலரும் சேர்ந்துமுதலில்உபநிஷத்தும் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரமும் ஒருங்கே பாராயணம் செய்த பிறகு, பகவத்கீதை, ஸர் எட்வின் ஆர்னல்ட் என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய புத்தசரித்ரம், பைபில்ஜைனஸூத்ரம். ஸெண்ட் அவெஸ்டா, தேவாரம், தாயுமானவர் பாடல். திருவாய்மொழி இவைகளும் பலரால் படிக்கப்பட்டன. அன்று இம்மந்திரத்தில் நடந்த உற்சவமானது வந்திருந்த பல அய்யர்களுக்கும் மன எழுச்சியையும், பக்தியையும், உற்சாஹத்தையும் கொடுத்தது. பள்ளிக்கூடத்து மாணக்கர் ஒருவர் ஸ்ரீஹெலி நாம்பான் அம்மையாரைப்பற்றி ஆங்கிலத்தில் பாசுரம் ஒன்று கவநம் செய்து படித்தனர். கடைசியாக பிரஸிடெண்டு மக-ள-ா-ஸ்ரீ அ. ரங்கஸ்வாமி ஐயரவர்கள், நமது பிரஹ்மஞான ஸபை உலக விகாஸத்தை எவ்விதம் த்வரிதப்படுத்துகின்றது என்பதையும், இத்தகைய மாட்சியை யுடைய மஹாஸங்கம் ஏற்படுத்திய மஹான்களின் சிஷ்யையாகிய ஸ்ரீஹெலிநாம்பானம்மையாரின் ஞாபகார்த்தம் நாம் கொள்ளவேண்டிய கடமையையும் கன் கெடுத்துரைத்தார். (மதுரை)

---

ஆத்தங்குடி பிரஹ்மஞான சபையில் 1915-௵ மேமீ 8௳ மாலை 5மணி முதல் 7மணி வரை சுமார் நானூறு ஏழைகளுக்கதிகமாக அன்னமளிக்கப்பட்டது. இரவு 8முதல் 9-மணிவரை ஷை சங்கத்து மெம்பர்களால் மாது ஸ்ரீஹெலிநாம்பான் அம்மையார் சரிதமும், பகவான் கௌதம புத்தர் சரிதமும், பகவத் கீதையில் 16வது அத்தியாயமும் படிக்கப்பட்டது. தற்சமயம் ஷை சபையில் அம்மையாரவர்களின் ஞாபகார்த்தமாய் வெண்டாமரைகள் பல விடத்தும் விளங்கின. (ஆத்தங்குடி).

---

பொன்னாச்சி லாட்ஜில் 8—5—15-ல் வெண்தாமரை மஹோற்சவம்:—வெகு விமரிசையாய் கொண்டாடப்பட்டது. அன்றைய தினத்தில் சுமார் 1000 ஏழைகளுக்கு மேல் அன்னமளிக்கப்பட்டது. அநேக மெம்பர்களும் அபிமானிகளும் அவ்விடத்தில் அநேக பணிவிடைகளைச் செய்தனர். சாயந்திரம் 7-மணிக்குதியாசபிகல் ஹாலில் மெம்பர்களும் அபிமானிகளும் மகாஜனங்களும் கூடினர்கள். மாதா ஸ்ரீ. ஹெலினாம்பாளின் சரித்திரத்தை முதலில் சொல்லிவிட்டு பகவத்கீதை 12அத்தியாயத்தை லாட்ஜ் சிக்ரிடெரி வெங்கிடாச்சாரியார் படித்து தமிழில் சொன்னர். Light of Asia வில் Mr. திருநீலகண்டம் பிள்ளை அவர்களாலும் உள்ளூர்ப் பாடசாலைத்தலைமை உபாத்யாயர்அவர்களாலும் சிலசில பாகங்கள் படிக்கப்பட்டதை அன்றையதினத்தில் சகல காரியங்களும் மிகுந்த சிரத்தையுடனும்பக்தியுடனும் எல்லாராலும் நடத்தப்பட்டன. அதற்காகமெம்பர்களுக்கும் அபிமானிகளும்லாட்ஜ் சிக்ரிடெரி தன் மனப்பூர்வமான வந்தனத்தைச் செலுத்துகிறர். (பொள்ளாச்சி)

——

இங்கே லாட்ஜு மீட்டிங்குகள் பிரதி வியாழக்கிழமை ஞாயிற்றுக்கிழமை ஆகவாரம் இரண்டுமுறைகள் ஒருவாறு உபயோககரமாய் நடந்து வருகின்றன. சென்றமீ இங்கே வில்லேஜ் பஞ்சாயத்து ஏற்பட்டு நடைபெறுகிறது. இம்மாதம் மூன்ரும் தேதி முதல் T. S. எலிமெண்டரி பெண்பாடசாலை யொன்றுதிறக்கப்பட்டிருக்கிறது. நேற்று நமது "வெண்டாமரை"த் திருவிழாகொண்டாடப் பெற்றது. சிறுவர்களும் வயோதியர்களுமா யுள்ள சுமார் இருநூறு தாழ்ந்த வகுப்பு ஏழைகட்கு அன்னமளிக்கப் பட்டது, எலிமெண்டரி பாடசாலைப்பிள்ளைகளுக்கு சிற்றுணவு அளித்து உற்சாக மூட்டப்பெற்றது (மேலக்கடம்பூர்)

——

மாதா ஸ்ரீபிளாவட்ஸ்கி அம்மையவர்கள் மண்ணுலகில்ஸ்தூல சரீரத்தை நீத்து விண்ணுலகுக் கேகிய தினமாகிய வெண்டாமரைத்திருநாள், நாளது 1915-ளு மேமீ 8-ம்உ அன்று பெரியகுளம் பிரஹ்மஞ்ஞான மந்திரத்தில் ஷை சபையோர்களால் வெகுவிமரிசையாகக் கொண்டாடப்பட்டது. (யோகி சுந்தராஜம்.)

——

## சிறுவர்க்குரிய விஷயம்.

### வாக்களித்தலை மிகச் சிரத்தையுடன் நிறைவேற்றவேண்டும்.*

அன்புள்ள ஸ்வர்ண மணிகளே!

ஒரு நாள் இராமன் மிகக் கவலைகொண்டிருந்தான். ஏனெனில் தன் ஸ்நேகிதர் ஒருவருக்கு வாக்குத் தத்தமொன்று செய்துவிட்டு, அதன்படி நடக்காமலிருந்தான். இராமனையோ, அடிக்கடி அவன் தாயார், எச்சரித்திருக்கிறன். "நாம் செய்வதாக ஒப்புக்கொள்ளும் கார்யங்கள் எல்லாவற்றையும் அவசியம் செய்தே தீரவேண்டும். நம்முடைய வாக்குத் தத்தங்களில் நாம் மிகச் சிரத்தை வைக்கவேண்டும்." என்று திரும்பத் திரும்ப அவனுக்கு புத்திமதி சொல்லியிருக்கிறள். நம்முடைய வாக்குத் தத்தங்கள், ஒரு காசுச் சர்க்கரைமிட்டாய் மாதிரி, அரை நிமிஷத்திற்குள் உடைபலாகாது. "இவன்மேல் நம்பிக்கைவைத்தல் தகாது" என்று பிறர் எண்ணுவதைக் காட்டிலும், ஒருவனுக்கு இழிவான அவமானம் வேறு வேண்டாம். ஒருதரம் ஒன்று செய்வதாக ஒப்புக்கொண்டோமாயின், அதை எப்பாடுபட்டாயினும் செய்து முடிக்கவேண்டும். யோசனையில்லாமல் ஒருபோதும் வாக்களிக்கலாகாது. அப்படி வாக்களித்தோமானல், அதைச் செய்து முடிப்பதில் தவறலாகாது. அறிவீனத்தால் அல்லது கோபம், துவேஷத்தால் தீய கார்யங்களைச் செய்வதாக நாம் தீர்மானித்து, பிறகு அவை குற்றமென்று உணருவோமானல் மட்டும் அம்மாதிரி வாக்குத் தத்தங்களை நிறைவேற்றுமல் ஒழிக்கவேண்டும்.

---

* ஸ்வர்ண மணிகளுக்கு என்று ஏற்பட்டு ஆங்கில பாஷையில் நியூஸிலண்டு தேசத்தில் நடைபெறுகிற லோடஸ் பட்ஸ் ஜர்னல் என்னும் பத்திரிகையினின்று எடுத்தெழுதப் பட்டது.

ஆனால், நம்முடைய வாக்குத் தத்தங்களைக்கொண்டு செலுத்த இயலாமல் அசௌகர்யங்கள் நேரும்போது, பிறர் நம்மை நம்பி, அவர்கள் அசௌகர்யத்தையும் அதிருப்தியையும் அடையாவண்ணம், அவர்களுக்கு நம் இயலாமையைத் தெரிவிக்கவேண்டும். இதை அநேகர் முக்கியமென உணருகிறார்களில்லை; சொன்னபடி செய்யத் தவறுவோமானால், நாம் நற்குணசீலம் அடைந்தவர்களல்லர் என்பதும் நிச்சயமாகின்றது.

வீடொன்று கட்டப்படவேண்டுமானால், கொற்றன் முதலில்வந்து இந்த தினத்திற்குள் இன்ன மாதிரிப் பிரகாரம், இவ்வளவு தொகைக்குள் கட்டிடத்தை முடித்துக் கொடுப்பதாக ஒப்புக்கொள்ளுகிறான். ஒப்பந்தப்படி வேலையை முடித்துக் கொடுத்து பிறகு அவன் பணம் பெற்றுக் கொள்ளுகிறான். சொந்தக்காரரும் கொற்றனும், இருவருள் ஒருவரும் பிறழாதபடி ஒப்பந்தப் பத்திரம் ஒன்று எழுதி, அதில் இருவரும் கையெழுத்துப் போடுகிறார்கள், இதில் பிறழுபவர்களை சர்க்கார் அதிகாரிகள் தண்டிப்பார்கள். சட்டத்தின் பிரகாரம் ஒப்பந்தத்தினின்று விலகுதல் உதவாது.

முற்றிலும் நாணயக்காரர்களான உத்தமர்கள், சர்க்கார்ச் சட்டத்தின் நிர்ப்பந்தம் இல்லாதபோதுங்கூட, தாம் கொடுத்த வாக்கிற்கு இரண்டாக நடக்கமாட்டார்கள். உண்மையான தைர்யமுள்ள பையனாகட்டும் பெண்ணாகட்டும் தம் வாக்கை நிறைவேற்றாமலிரார். இவ்விதந் தவறுவது மிக அவமானமாகும். ஓரூரில் ஒரு பெண் இருந்தாள். அவள் தமையனார் தம் சொந்த ஊரை விட்டு அயலூருக்குப் போய் அங்கேயுள்ள பள்ளிக்கூடம் ஒன்றில் படித்து வந்தார். அவர் அயலூருக்குப்பிரயாணமாகு முன் அச்சிறு பெண் தன்வீட்டு சமாசாரங்களைக் கிரமமாய் வாராவாரம் தன் அண்ணனுக்குக் கடிதமெழுதித் தெரிவித்து



வருவதாயும், அவர் எழுதும் கடிதங்களுக்கும் உடனுக்குடன் பதில் அனுப்புவதாயும் ஒப்புக்கொண்டாள். பிறகு அவ்வாக்குத் தத்தத்தின்படியும் நடந்தாள். அவளுடைய தமையனாருக்கும் அவளிடம் அளவிறந்த ஸந்தோஷம் ஏற்பட்டது. இதைப்படிக்கும் ஒவ்வொருவரும் எவ்வளவு இலகுவாய் வாக்களிக்கிறார்களோ, அதைவிட இலகுவாய் அதைச்செய்து முடிக்கவேண்டும். சில வேளைகளில் வாக்குத் தத்தம் செய்வோர்கள் மறதியால் நிறைவேற்றத் தவறுகிறார்கள். ஆனால் யாவருக்கு வாக்குக் கொடுத்தோமோ அவர்கள் மறவாமல் எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். கடைசியாக மறதியினால் ஸ்நேஹம் போய், மனஸ்தாபம் உண்டாகிறது. இவ்வித மறதி ஏற்படாதபடி நாம் பிறருக்கு நிறைவேற்றவேண்டிய வாக்குத் தத்தங்களைக் கடிதத்தில் எழுதிக் குறித்துக்கொள்ளவேண்டும்.

நீங்கள் யாராவது செய்தவாக்குத் தத்தங்களை நிறைவேற்றாமலிருக்கிறீர்களா? அல்லது யாருக்காவது கடிதமெழுதவேண்டியிருக்கிறதா? அப்படியிருக்குமானால் உடனே அக்கார்யங்களைச் செய்துவிட்டு, தாமஸத்தை மன்னிக்கும்படியும் கேட்டுக்கொள்ளுங்கள். இவ்விதச் சிறுகாரியங்களிலெல்லாம் நாம் ஒழுங்காயிருந்தால்தான் நம்முடைய சீலம் விருத்தியடைந்து, பெரிய காரியங்களிலும் நாம் தவறாதவர்களாயிருப்போம்.

இப்போது ஐரோப்பாவில் கோரமான யுத்தம் நடக்கின்றதே காரணமென்ன? ஜெர்மனி தேசத்தார் பெல்ஜியம் தேசத்தாரைக் காப்பாற்றுவதாகச் சொன்ன வாக்குத் தத்தத்தை மீறியதனாலல்லவா? இதனால் நேரும் கொடிய உயிர்ச் சேதங்களுக்கு அளவு சங்கியை யுண்டோ! அந்தோ, பரிதாபம்!

நம்முடைய ஸ்வர்ணமணி மாலைச் சங்கத்துச் சிறுவர்கள், சிறுமிகள் பலர் தம் அப்ளிகேஷன் கார்டுகளில் வாக்களித்திருக்கின்றதைச் சற்று நினைத்துப் பார்க்கக் கடவர். அவர்கள் நிறைவேற்ற வேண்டிய வாக்குத் தத்தங்கள் எல்லாம் இப்பத்திரிகையின் அட்டையில் எழுதப்பட்டிருக்கின்றன.

அவைகளில் முதன்மையானது, ஸ்வர்ணமணியாலைச் சங்கத்தின் உறுதிமொழியாகிய நான்கு, வசனங்களையும் திரும்பத் திரும்ப நம் மநத்தில் ஞாபகமூட்டிக்கொள்ளும் பொருட்டு பிரதி காலையிலும் படித்துவரவேண்டும். எல்லா உயிர்ப்பிராணிகளிடத்தும் இரக்கம் கொள்வதும் மெலியார்க்குபரோபகாரம் செய்வதும், எப்போதும்நல்லஎண்ணங்களையும், நல்ல வார்த்தைகளையும், கார்யங்களையுமே பின்பற்றுவதும், மற்றைய ஸ்வர்ணமணிகளும் உறுதியுள்ளவர்களாக விருக்கவேண்டும் என்று வேண்டிக்கொள்வதுமே ஸ்வர்ணமணிகள் நிறைவேற்றவேண்டிய இரண்டாவது வாக்குத்தத்தம்.

ஆகையால் ஒவ்வொரு ஸ்வர்ணமணியும் இவ்வாக்குத் தத்தங்களை உண்மையாய்க் கொண்டுசெலுத்துவார்களென்று நம்புகிறேன். அப்போதுதான் நமக்கும் பிறருக்கும் சந்தோஷமும் சுகமும் ஏற்படும்

வஸந்தானந்தன்.

---

## தியானக்கிரம விஷயம்.

---

### ஏப்ரல் மாசம்.

10. மேன் மார்க்கத்தில் செல்ல இச்சிப்பவன், ஒவ்வொரு காரியத்தையும் தனக்குத்தானே ஆலோசித்து நிதானிக்கப் பயிலவேண்டும்; ஏனென்றால். இவ்வுலகத்திலுள்ள பெருங் கெடுதிகளிலும், பந்தங்களிலும் மித்தியாசாரமொன்று மிகக் கொடியது. அதினின்று உன்னை நீ முழுதும் விடுவித்துக் கொள்ளவேண்டும்.

11. மற்றவர்களைப் பற்றி உன் அபிப்பிராயம் உண்மையானதாக விருக்கவேண்டும். அவர்கள் விஷயமாய் உனக்குத் தெரியாத சங்கதிகளில் நீ அபிப்பிராயங்கொள்ளக் கூடாது. அவர்களெப்பொழுதும் உன்னைக்குறித்து நினைத்துக் கொண்டிருப்பதாக நீ சங்கியாதே.

12. யாரேனுமொருவன் உன்னிடத்தில் கோபமாய்ப் பேசினால் "எனக்கு அவன் விரோதி, எனக்குக் கெடுதி செய்ய விரும்புகிறான்" என்று நினையாதே. அநேகமாய் வேறு யாராவதொருவன், அல்லது வேறு ஏதாவது ஒரு விஷயம் அவனைக் கோபமூட்டியிருக்கலாம். நீ அவனுக் கெதிர்ப்பட்ட காரணத்தினால் அக்கோபத்தை உன்னிடம் அவன் காட்டலாம். அவனுடைய செய்கை மூடத்தனம்.கோபம் எப்பொழுதும் மூடத்தனம் தானே; ஆகையினால் அவனைப் பற்றி நீ அசத்தியமாய் நினைக்கவேண்டாம்.

13. சிஷ்யன் குருநாதனோடு ஒருமைப்பட்டவன்; அவன் தனதெண்ணத்தை குருநாதனெண்ணத்தோடு,சேர்த்து மாத்திரம் பார்க்கவேண்டியது, அது ஒரு மைப்பட்டதா படாததா என்பது உடனே தெரியும். ஒரு மைப்படாவிடில், அவ்வெண்ணம் தப்பெண்ணம். அவன் அதை

உடனே மாற்றிக் கொள்கிறன். ஏனெனில் சர்வக்ஞதையால் அவரது எண்ணம் குற்றமற்றது.

14. அடிக்கடி உன் எண்ணங்களை நிதானித்துப் பார். "குருநாதன் இதைக் குறித்து என்ன நினைப்பார், இவ்வித சந்தர்ப்பங்களில் அவர் என்ன சொல்வார், செய்வர் என்ற விதமாயாலோசிக்க வேண்டும். எதை குருநாதன் செய்யமாட்டார், சொல்லமாட்டார், நினைக்கமாட்டார் என்று நீ நினைக்கிறயோ, அதை நீ எப்பொழுதும் செய்யவும் கூடாது, சொல்லவும் கூடாது, நினைக்கவும் கூடாது.

15. அநித்தியத்தினின்று நித்தியத்திற்கு வழி காட்டும்.

அந்தகாரத்தினின்று பிரகாசத்துக்கு வழி நடத்தும்.

மரணத்தினின்று தப்புவித்து அமிருதத்துவத்திற்குக் கொண்டு சேர்ப்பியும்.

16. இவ்விரண்டையும் (நித்யத்தையும் அநித்யத்தையும்) பகுத்தறியும் வரை, ஈசுவரன் வழியே நிற்காதவர்களாகிறர்கள். ஆகையால் மேற் சொல்லிய பகுத்தறிவே முதற்படி.

17. இது நீதி, இது அநீதி யென்றறிவது பிரயாசமில்லை. ஏனெனில் குருநாதனைப் பின்பற்ற விரும்புமவர்கள், எது எப்படி நேரிட்டாலும் நீதி வழியே செல்ல முன்னமேயே தீர்மானித்தவர்களாவார்கள்.

18. குப்த வித்தையில் நீதிக்கும் அநீதிக்கும் மத்தியில் யாதொரு படியும் ஏற்படவில்லை. நீதி எதுவோ அது உன்னால் எவ்வகையிலும் செய்யப்படவேண்டும். அநீதி எதுவோ, அது உன்னால் எவ்வகையிலும் தவிர்க்கப்பட



வேண்டும். இவ்விஷயத்தில் அறியாதவர்கள் என்ன நினைப்பினும், என்ன சொல்லினும், அவர்களுடைய அபிப்பிராயம் கவனிக்கத் தக்கதில்லை.

19. முக்யமிது, அமுக்யமிது, என்பதை நீ தெரிந்து கொள்ள வேண்டும். அநீதியை ஒழித்து நீதி தவருது நடப்பதில் நீ மலைபோல் உறுதியாய் நில். எப்போதும் அற்ப விஷயங்களில் நீ இதரர்களுக்கு இணங்கியே நட.

20. ஈசுவர நியதியின் குப்தமான விதிகளை நீ ஆழ்ந்து ஆராய்ந்து தெரிந்து கொள்ளவேண்டும். நீ அவைகளை யறிந்துகொண்டு, அவைகளுக் கேற்ப உனது வாழ்நாட்களை, உனது விவேகத்தையும் அநுபவ ஞானத்தையும் கொண்டு ஒழுங்காக்கிக் கொள்ள வேண்டும்.

21. ஈசுவர சைதந்யம் உன்னிடத்தும் உன் சகோதரனிடத்தும் பொதுவாயிருப்பதால், அதன் வழியே அவனுக்கு நீ உதவலாம், அச்சைதந்யத்தை அவனிடத்து மலரச் செய்வதன் மூலமாய், அவனுக்குதவி அவனைக் குற்றத்தினின்று விடுவிப்பாய்.

22. உனது சரீரங்களையே நீ (ஆத்மா) என்று தவறி எண்ணுதே. ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள் நீ அல்ல. அவைகளில் ஒவ்வொன்றும் தனக்கு வேண்டியதைப் பெறுதற் பொருட்டே, நீ (ஆத்மா) என நடிக்கும். ஆனல் நீ அவைகளல்ல வென்று அறிய வேண்டும். நீ அவைகளின் யஜமானன்.

23. உன் சரீரம் ஒன்றை விரும்புகையில் உனக்கு அது யதார்த்தமாய்த் தேவையா என்று நின்று நிதானி. ஏனெனில் நீ ஈசுவரனே. ஈசுவர ஸங்கல்பம் போலவேதான் நீயும் இச்சிப்பா யென்றுலும், உனக்குள்ளிருக்கும் ஈசுவ

ரனை நீ அறிய, உனக்குள்ளேயே அந்தர் முகப்பட்டு, அவரது சப்தத்தை உற்றுக் கேள். அது உனது தொனியே தான்.

24. உன் காமசரீரம் அதற்குரிய ஆசைகளுடன் கூடியது. உன்னைக் கோபங்கொள்ளும்படியாகவும், கொடிய வசனங்களைப் பேசும்படியாகவும், பணத்தில் பேராசை கொள்ளும்படியாகவும, பிறர் பொருளைக் கண்டு அசூயை அடையும்படியாகவும் நீ மநக்கிலேசத்திற்குட்படும்படியாகவும் அது விரும்பும். இவை போன்ற அநேகங்கள் அதற்குத் தேவை. இவைகள் ஒன்றும் உனக்கு அவசியமில்லை. இவ்விதம் உனக்கு அவசியங்களின்னவை, உனது சரீரத்தின் அவசியங்களின்னவைபென்று நீ பகுத்தறிய வேண்டும்

25. இம்மேன் மார்க்கத்தில் நீ அறிய வேண்டியது அதிகமிருக்கிறது. இதிலும் உனக்குப் பகுத்தறிவு வேண்டும். அறிந்து கொள்ளத் தகுதியானது இன்னதென்று நீ ஆழ்ந்து நிதானிக்க வேண்டும். எல்லா அறிவும் பிரயோஜனகரம் தான். காலாந்தரத்தில் ஸர்வ ஞானமும் உனக்கேற்படும் என்றாலும், நீ சொற்ப ஞானமுள்ளவனாகவிருக்கும் வரை, எவ்வறிவினால் அதிக உபயோகமுள்ள விதமாகப் பிறர்க்குதவி செய்யலாம் என்றறிந்து, அதைக் கற்க ஆரம்பித்தல் வேண்டும்.

26. செய்கையில் உண்மையாயிரு. வேஷம் போடாதே.

27. சுயநயம், பரோபகாரம் இவைகளையும் நீ திட்டமாய்ப் பகுத்தறிய வேண்டும். சுயநயம் பல ரூபங்களை உடையது. அது ஒரு ரூபத்தோடு தோன்றும் போது, நீ, அதைக் கொன்றுவிட்டு, அது முற்ற ஒழிந்தது என்று எண்ணிக் கொண்டிருக்கும்போதே, இன்னொரு ரூபத்தோடு முன் பலத்துடனேயே கிளம்பி நிற்கும்.



28. நிராதாரமாகவும், விவரமின்றியும், ஒன்றிருக்கப் பத்தாகவும் நீ ஒருபோதும் பேசாதே. பிறர் செய்கைகளுக்கு நீயாகக் காரணங்கள் கல்பிக்காதே. எவரைப் பற்றியாவது கெட்ட கதை யாரிடமிருந்து நீ கேள்விப்பட்டாலும், நீ அதை மறுபடியும் உன் வாக்கினால் சொல்லிப் பறை சாற்றாதே. எவ்விதத்தவறும் ஏற்படா வண்ணம் நிதானித்து ஆலோசனையுடனே பேசு.

29. உபயோகமிது, உபயோகமற்றதிது என்று நீ அறிந்து கொண்டால் மட்டும் போதாது. உபயோகமுள்ளவைகளிலேயே தாரதம்யத்தையும் (அதாவது எது அற்ப உபயோகமுள்ளது, எது மிகுந்த உபயோகமுள்ளது என்று) நீ அறிய வேண்டும்.

ஏழைகளுக்கு அன்னமிடுவது மேன்மை பொருந்திய நல்ல உபகாரச் செயல். ஆனால் அவர்கள் சரீரங்களைப் போஷிப்பதைவிட அவர்களுடைய ஜீவன்களை விருத்திக்குக் கொண்டு வருவது மிக்க உபயோகமுள்ள மேலான காரியம்.

பணமுள்ள எவனும் சரீரத்திற்கு உணவளிக்கக் கூடும். ஆனால் ஞானமுள்ளவர்கள் தான் ஜீவனைப் போஷிக்கத் திராணியுள்ளவர்கள்.

30. எக்காரியத்தைச் செய்தல் சிரேஷ்டம் என்பதைத் தெரிந்து கொள்ள முயலுவாய். நீ கவனிக்க வேண்டியது, காரியம் பெரிது, சிறியது என்பதல்ல. நீ கவனிக்கவேண்டியது, உலகம் நல்லதென்று புகழும் ஒரு பெருங்கார்யத்தைவிட குருநாதனது பிரவிர்த்திக்கு நேரே அநுகூலமாயிருக்கும் ஒரு சிறு கார்யம் மிகவும் மேன்மை என்பதேயாம்,

## மேமாசம்.

மாசாந்தர அப்பியாசம்:—உனக்கு சொந்தம் என்ற பாவனையை நீ ஒழித்துவிடவேண்டும்; நீ அதிகமாக விரும்பும் வஸ்துக்களையும், நீ மிகவும் அருமையாக நேசிக்கும் ஜனங்களையுங்கூட. கர்மவிதி உன்னைவிட்டு நீக்கி விடலாம், அப்பொழுதுங்கூட நீ சந்துஷ்டனாயிருத்தல் வேண்டும். எந்தவஸ்துவையும், விடுவதற்குச் சித்தமாயிரு.

### வாரஅப்பியாசம்

1வது வாரம்:—நேரே ஸத்குரு தரிசன பாக்கியம் கிடைப்பதற்கு முந்தியே, நீ அப்யாஸத்தால் ஆசையின்மையை அடையலாம்

2வது வாரம்:—அடையும்பொருள் எவ்வளவு பெருமையுள்ளதாக விருக்கினும், ஸ்வயநன்மையை விரும்பிய எல்லா இச்சைகளும் பந்தப்படுத்து மென்பதை நீ ஞாபகத்தில் வைத்துக்கொள். இது போனாலன்றி நீ குருநாதனேவலுக்குட்பட்டு நடக்க முழுதும் சுதந்திரனல்லன்.

3வது வாரம்;—பலனைப் பார்க்க வேண்டுமென்ற உத்தேசத்தின்பேரில் வேலையைச் செய்யாதே. ஒரு வேலையைச் செய்தால் அதின் பலன் தன்படியே உண்டாகும். வேலையைச் செய்வது, வேலையை உத்தேசித்தே தவிர பலனை உத்தேசித்தல்ல-(இவ்விடத்தில் கீதை 2-ம் அத். 47-வது சுலோகம் கவனிக்கத்தக்கது.)

3வது வாரம்:-சமர்த்தனைக் காட்டிக்கொள்ளவேண்டுமென்றாவது உலகத்தார் மெச்சப் பிரகாசிக்க வேண்டுமென்றாவது இச்சிக்காதே. பேச ஆசைப்படாதே.

4வது வாரம்:—இன்னொரு மனிதன் என்ன செய்தாலென்ன? என்ன சொன்னாலென்ன? எவ்வித அபிப்பிராயமுள்ளவனானாலென்ன? இவைகள் உன்னுடைய காரியங்களல்ல. அவைகளில் ஒரு விதத்திலும் சம்பந்தப்படாமல் நீ இருக்கப் பயிலவேண்டும்.



5வது வாரம்:—ஸித்திகளுக் காசைப்படாதே; உனக்கவைகள் வேண்டியது நன்மையென்று குருநாதன் அறியுங்காலத்தில் அவைகளுனக்கு வரும்.

### தினசரி அப்பியாசம்.

1. நேரே ஸத்குரு தரிசன பாக்கியம் கிடைப்பதற்கு முந்தியே நீ அப்யாஸத்தால், ஆசையின்மையை அடையலாம்.

2. அநேகருக்கு ஆசையின்மையென்றசாதனம் கஷ்டமுள்ளதாயிருக்கின்றது; ஏனெனில், தங்களுடைய இச்சைகளையே அவர்கள்தாங்கள் என்று நினைத்திருக்கின்றார்கள். தங்களிடத்திலுள்ள வேறு, வேறான இச்சைகளும், விருப்பு வெறுப்புக்களும் போய்விடாமல், தங்களுடைய (ஆத்மாவின்) இருப்பே போய்விட்டதாக எண்ணுகின்றார்கள்.

3. இவ்விதமுள்ளவர்கள் குருநாதனைத் தரிசியாதவர்கள், அவர் சந்நிதானத்தின் பரிசுத்தவொளியில், அவரைப்போலாக வேண்டுமென்ற இச்சை ஒன்று தவிர மற்றெல்லா இச்சைகளும் நசிக்கின்றன.

4. பலர் இச்சிக்கும் திரவியம், அதிகாரம் முதலிய வஸ்துக்கள் அடையத்தக்கன வல்லவென்பது முந்தியே நீ பகுத்தறிவினால் (நித்யாநித்யவஸ்து விவேகத்தால்) தெரிந்துகொண்ட விஷயம், இதை வாக்கினால் சொல்வதுமட்டும் போதாது. யதார்த்தமாய் மனத்திலுணரவேண்டும். அப்பொழுது அவைகளிடமுள்ள எல்லா இச்சைகளும போய்விடும்.

5. சிலர் ஸ்வர்க்கானுபவத்தையடைய விரும்பியாவது, அல்லது, பந்த நிவிர்த்தியைத் தாங்கள்மாத்திரமேபெற இஷ்டப்பட்டாவது, இவ்வுலக வியாபாரங்களை விடுகிறார்கள். இத்தவறுதலுக்கு நீ உட்படவேண்டாம்.

6. நீ முற்றிலும் தன்னை மறந்திருந்தால்; எப்பொழுது பந்த நிவர்த்தியாகும்; எவ்வித சுவர்க்கம் கிடைக்குமென்பதை எப்படி நீ ஆலோசித்துக் கொண்டிருக்கக்கூடும்?

7. நீ அதிகமாய் விரும்பும் வஸ்துக்களையும், நீ மிகவும் அருமையாய் நேசிக்கும் ஜனங்களையும் கூட கர்மவிதி உன்னை விட்டு ஒரு வேளை நீக்கிவிடும். அப்பொழுதுங்கூட நீ சந்துஷ்டனாயிரு. எந்த வஸ்துவையும் எவ்வித வஸ்துவையும், விடுவதற்குச் சித்தமாயிரு.

8. அடையும் பொருள் எவ்வளவு பெருமையுள்ளதாக விருப்பினும், ஸ்வய நன்மையை விரும்பிய எல்லா இச்சைகளும் பந்தப்படுத்து மென்பதை நீ ஞாபகத்தில் வை. இது போனாலன்றி நீ குருநாதனேவலுக்குட்பட்டு நடக்க முழுதும் சுதந்திரனல்ல.

9. சுய நன்மையை நாடிய இச்சைகளெல்லாம் போனாலுங்கூட உனது பிரவர்த்தியின் பலனைப் பார்க்க நீ யிச்சிப்பாய். அதுவும் தகாது.

10. யாருக்காவது நீ உதவி செய்தால் அவ்வுதவி எவ்வளவு பயன் பெற்றது என்றறிய நீ விரும்பாதே. அதை அவனுமறிய வேண்டும் என்றும் உன்னிடத்தில் அவன் நன்றி செலுத்தவும் வேண்டும் என்றும் நீ இச்சிக்கலாகாது.

(இன்னும் வரும்)

கே. எஸ். இராமசந்திர ஐயர்

---




# பூர்ணசந்திரோதயம்.

தொகுதி 6 } 1915ளு ஜூன்மீ
ராக்ஷஸ ளு ஆனிமீ { பகுதி 2

## தற்கால நிலைமை.

தியஸாபிகல் எடுகேஷனல் டிரஸ்டு என்ற பிரஹ்மக்ஞான வித்தியாபிவிர்த்தி ஸபையின் முதல் வருஷத்து ரிப்போர்ட்டானது அச்சபையின் காரியதரிசியால் பிரசுரம்செய்யப்பட்டிருக்கிறது. அந்த பிரஹ்மக்ஞான வித்தியாபிவிர்த்தி சபையானது 1913ளு ஏப்ரல்மீ 25உயில் சட்டப்பிரகாரம் ரிஜிஸ்தர் செய்யப்பட்டது. இந்தியாதேசத்தில் பலமத வேறுபாடுகளைக் கொண்டாடுகிற பல வகுப்பினர்களிருப்பதால், இவர்கள் எல்லோரிடத்திலும் நடுநிலைமை பொருந்திய இராஜாங்கத்தாரால் மதவிஷயங்களில் மாணாக்கர்களுக்கு கல்விகற்றுக்கொடுப்பது சாத்தியமன்று. உலகத்தின் கண்ணுள்ள முக்கிய மதங்களின் கொள்கைகளும் தத்துவங்களும் ஸமரஸமாயுள்ளனவென்று வற்புறுத்துகின்ற பிரஹ்மக்ஞான ஸபையானது இந்தியாவில் லௌகிகக் கல்விப்பயிற்சியுடன் மதவிஷயங்களிலும் கல்வி கற்றுக்கொடுக்கத் தகுதியுள்ளதாயிருக்கின்

றது நமது தேசமானது உயர்ந்த நிலைமையை யடைந்து இகபர ஸம்பத்துக்களுடன் கூடினதாய்ச் செய்ய நமது வாலிபர்கள் விவேகாபிவிருத்தியை மட்டும் கவனித்தல் போதுமானதன்று. சீலம், தைரியம், மனோதிடம், ஊக்கம், ஆர்ஜவம், பக்தி, விடாமுயற்சி முதலிய தெய்வஸம்பத்துக்களோடு கூடினவர்களாய்ச் செய்ய, குருகுலங்கள் போல வித்யாசாலைகள் அமையவேண்டும். அவ்வித வித்யாசாலைகளை ஸ்தாபித்தலையே ஒரு ஸங்கல்பமாகக்கொண்டு பிரஹ்மக்ஞான வித்தியாபிவிர்த்தி ஸபையானது சென்ற இரண்டு வருஷங்களாக அவ்வித வித்யாசாலைகளை நூதனமாக ஸ்தாபித்து நடாத்தியும் சில பழைய வித்யாசாலைகளைக் கைக்கொண்டு மேற்சொல்லிய கருத்துக்கிசைய அவைகளில் தக்க மாறுதல்களைச் செய்தும் வந்திருக்கிறது.

***

இப்பொழுது அச்சபையின்கீழ் 15 வித்யாசாலைகள் நடைபெற்று வருகின்றன. அவைகள் இந்தியாவின் வடபாகத்தில் பாங்கிபூர், கான்பூர், காசி, முதலிய இடங்களிலும் மேல்பாகத்தில் பவநகர் என்ற இடத்திலும் தென்னிந்தியாவில் பல்லாரி, கும்பகோணம், மதனபள்ளி, மதுரை, பழனி, புரோதட்டூர், வாயல்பாட், முதலிய இடங்களிலும் இருக்கின்றன. அவைகளில் நாலு பள்ளிக்கூடங்கள் பெண்பிள்ளைகளுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவ் வித்தியாசாலைகளில் மொத்தமாக 2603 வித்தியார்த்திகள் கற்றுவருகிறார்கள். 122 உபாத்தியாயர்கள் கல்வி கற்றுக் கொடுக்கிறார்கள்.

***

மதனபள்ளியில் ஸ்தாபிக்கப்பட்டு நடந்து வருகிற ஹைஸ்கூல் என்ற வித்யாசாலையானது மதராஸ் சர்வ கலாசாலையைச் சார்ந்த ஒரு காலேஜாக அடுத்த



ஜூலை 15உ முதல் ஏற்படப்போகின்றது. அதற்கு மதனபள்ளி பிரஹ்மக்ஞான காலேஜ்(Madanapalle Theosophical College) என்று பெயர். மதனபள்ளி என்பது வடஆற்காடு அல்லது சித்தூர் ஜில்லாவில் உள்ள ஒரு ஊர். அது சமுத்திர நீர்மட்டத்திற்கு மேல் 2500 அடி உயரத்தில் மலைப்பிரதேசத்திலிருப்பதால் சீதோஷ்ணம் ஸமமாய் தேகத்திற்குஆரோக்கியமான பிரதேசம். இந்து மாணுக்கர்களுக்குஸநாதனதர்மத்திலும், மகம்மதியகிறிஸ்துவமாணுக்கர்களுக்கு அவரவர்களுக்குரிய சமயநூல்களிலிருந்தும் மதவிஷயமாய்க்கற்பிப்பதற்கு ஏற்பாடுகள்செய்யப்பட்டிருக்கின்றன. தத்தம் சமயங்களில்முக்கியமானபொதுவிஷயங்கள் மாத்திரம்மாணுக்கர்கட்குப்போதிக்கப்படக்கூடியதேதவிர சச்சரவையும் வைஷம்யத்தையும் உண்டாக்கக்கூடிய சமயபேதங்கள் வற்புறுத்தப்படமாட்டா. அன்பையும், பக்தியையும், பரோபகாரஞ் செய்யுங் குணத்தையும் அவரவர் மதங்களின் ஆதாரத்தைக்கொண்டே விருத்திசெய்ய முயற்சிக்கப்படுகின்றது. மற்ற விவரங்கள் எல்லாம் அவ்வித்தியாசாலை அதிகாரிகளால் பிரசுரம்செய்யப்பட்ட அறிக்கைப்பத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றன. ஸ்ரீமான் ஜினராஜதாஸர் கூறியிருக்கிற பிரகாரம் அது தென்னிந்தியாவில் ஒருபிரதான வித்யாசாலையாக விருத்தியடைவதில் ஐயமில்லை.

***

இராமநாதபுரம்ஜில்லாவில் விருதுபட்டியிலுள்ள க்ஷத்திரிய வித்யாசாலை என்ற நாடார்க் கல்விச்சாலையின் மேல்பார்வையானது திருப்தியான நிலைமையில் இல்லையென்றும் அந்தக்காரணத்தால் அவ்வித்தியாசாலையின் உபயோகம் தடைபடக்கூடியதென்றும் வெளியாகின்றது. அப்பட்டணத்தில் அவ்வகுப்பினர் செல்வாக்குடன் கூடினவர்களாயும் அவ்வித்யாசாலைக்குத் தகுந்ததிரவியஸகாயமிருப்

பதாலும் அங்குள்ளவர்கள் ஐக்கியத்தோடு பொதுநன்மையை நாடி ஒன்றுகூடி அப்பள்ளிக்கூடத்தை உயர்ந்த ஸ்திதிக்குக் கொண்டுவருவது பிரயாசமல்ல.

***

சென்ற டிஸம்பர் மாதத்தில் அடையாற்றில் கூடின உதயநக்ஷத்திர சங்கத்தில் உபந்யாசம் செய்த அச்சங்கத்தின் ரக்ஷகராகிய (Protector) மாது ஸ்ரீ அன்னிபெஸண்டு அம்மையாரவர்கள் அச்சபையின் ஒவ்வொரு அங்கத்தினரும் இவ்வருஷத்தில் கருத்திற்கொண்டு ஆசரணையில் உபயோகிக்கத்தக்க ஒரு வாக்கியத்தை வெளியிட்டனர். அவ்வாக்கியமானது 'ஜகத்குருவானவர் அதிசீக்கிரத்தில் அவதரிக்கின்றனர்' "Behold I come quickly" என்பதாம். ஜகத்குருவென்றால் தேவர் மனிதர் முதலிய எல்லா ஜீவராசிகளின் விகாஸமுறைக்கும் அத்தியக்ஷராக விருந்து ஆசாரிய ஸ்தானத்தை வகிக்கின்றவர். அது ஒரு அதிகார புருஷரின் ஸ்தானமாகும். அந்தஸ்தானத்தை கல்பந்தோறும் வகிக்கின்றவர் மாறுவர். இப்போது அந்த ஸ்தானத்தை நம்முடைய புராணங்களில் கூறப்படுகின்ற **மைத்திரேயர்** என்ற ரிஷி வகிக்கின்றார். அவருடைய நாமத்தினாலே அவர் **அன்பின் உறைவிடம்** என்பது வெளியாகின்றது.

***

உலகத்தில் ஔபசாரிகமாக வழங்கிவரும், ஜகத்குரு என்னும் நாமம் உண்மையில் அவருடையதே. மனிதன் உஜ்ஜீவிக்கும்பொருட்டு ஸ்தாபிக்கப்பட்டு உலகத்தில் தழுவப்படும் உயர்ந்த மதங்கள் யாவும் அவரால் நேராகவாவது அல்லது அவரது ஆதரவின்மீது அவரது சிஷ்யர்களாலாவது ஸ்தாபிக்கப்பட்டவை. மனிதர்களுடைய அவிவேகத்தினாலும் மௌட்டியத்தினாலும் இம்மதங்களில் பல



விபரீத வேறுபாடுகள் கலக்கப்பட்டபோதிலும் அவைகளின் அந்தரங்க தத்துவங்கள் ஒன்றோடொன்று தழுவியே நிற்கின்றன. அவர் திரிலோக சம்பந்தமாகவும் பரமாசாரியராக விருப்பதால், இப்பூலோக சம்பந்தமான ஸ்தூல சரீரத்தையும் மற்ற மனிதர்களைப்போல தரித்துக் கொண்டும், அவர் அதிகாரத்திற்குரிய தர்மமானது பெரும்பாலும் சூக்ஷ்மலோகங்களிலிருந்து செய்யப்படுவதால் பெரும்பாலும் மனிதர்கள் அணுகாத இடத்தில் வஸித்துக்கொண்டும் யோகவலிமையாலும் ஸ்தூலசரீரத்திற்கு ஜரைமுதலியவற்றை தடுக்கின்ற மநச்சஞ்சலமின்மைமுதலிய குணங்களாலும் நெடுங்காலம் ஒரேஸ்தூல சரீரத்திலிருந்துகொண்டும் உலகத்தில் முக்கியமானபலகாலங்களில் ஜனஸமூகங்களிற்றோன்றி, அதர்மம் ஒன்றுகூடி விகாஸமுறையில் உலகத்தோர் முன் தடையாக நிற்பதை அப்புறப்படுத்தியும் மானிடர்கள் மேற் செல்லுமாறு அவர்களுக்கு உதவி புரிகின்றனர்.

***

தற்காலமானது அவ்வித காலங்களில் ஒன்றாயிருக்கிறது. அவைகளின் விசேஷகுணம் யாதெனில் நெடுநாளாக ஜனசமூகங்களின் அபிவிருத்திக்கு ஆதாரமாகக் கொண்டாடப்பட்ட கொள்கைகள் அந்தந்தகாலதர்மத்திற்கு ஒவ்வாதனபோல் காணப்படுவதும், அவைகளில் தக்க மாறுதல்கள் செய்யப்படுவது அவசியமென்று ஏற்படுவதும்தான். இவ்வித மாறுதல்களை திடீரென்று ஏற்றுக் கொள்ளுதல் விகாஸமுறையில் தாமஸகுணத்தோடு மெல்லமெல்லச் செல்ல விரும்பும் மனித இயற்கைக்கு விரோதமாயிருத்தலால் அதை விரைவுசெய்வதற்கு உலகத்தில் சமாதான மின்மையும் குழப்பமும் உண்டாவதற் கேதுவாகிய யுத்தம் நிகழ்வதும் அதன் முடிவில் உலகத்தின் விகாஸ முறைக்குரிய சரித்திரத்தின் ஒரு நூதன அத்தியாயம் துவக்குவதும் இயல்பாக விருக்கின்றது.

ஈசுவரன் அவதரிக்குமுன்னர் உலகத்தில் அதர்மம் ஒன்றுகூடி ஹிரண்யகசிபு, இராவணன், கம்சன் முதலானோர்களாக ரூபம் தரித்ததாகவும், அவ்வதர்மங்களை நாசம் செய்து தர்மத்தை நிலைநிறுத்த அவதாரம் செய்ததாகவும் புராணங்கள் கூறுகின்றன. ஈசுவரனின் கீழுள்ள அவதாரபுருஷர்கள் அவதரிக்கும் காலத்திலும், அவைபோன்ற விக்கினங்கள் குறைந்த அளவில் தோன்றக்கூடியதே. ஒரு கல்பகாலத்திற்குரிய தர்மங்கள் மற்றொரு கல்பகாலத்திற் கொவ்வா. இடைஞ்சலை உண்டுபண்ணுவதால் அவைகள் அதர்மங்களை யொக்கும். ஆகையால் தர்மங்களைக் கால இயற்கைக்குத் தக்கவாறு மாற்றுதலே அதர்மத்தை நாசஞ்செய்தலாகும். இவ்விதம் தர்மமானது யுகாந்தரங்களில் மாறுகிறது என்றும் அவைகள் கால இயற்கையில் சிறுகச்சிறுக மாறுவதோடு ரிஷிகளும் மாற்றுகிறார்களென்றும் நம்முடைய சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

***

நமது இந்துமதத்தின் மாறுதல்களைக் கவனித்துப் பார்க்கின் வேதத்தின் கர்ம காண்டத்தின் விதிகளையும் ஸ்மிருதிகளில் ஆக்ஞாபிக்கப்பட்ட முறைகளையும் கைக்கொண்டு அவைகளினின்று வழுவாமல் ஒருவன் ஒழுகுவானாகில் அவன் வாழ்நாள் முழுவதும் அநேக நுட்பமான கிரியைகளால் நிரம்பப்பட்டதாய்விடும். அவைகள் மனத்தையும் சரீரத்தையும் அடக்கி சித்தசுத்தியை உண்டுபண்ணுவதற்கு முக்கிய ஸாதனமாயிருப்பினும், காலகதியில் அவைகளை அனுஸரிப்பதற்குரிய சௌகரியங்கள் குறைந்து அவைகளின் பிரயோஜனத்தையும் கருத்தையும் பரியாலோசனை செய்யக்கூடிய மனதின் சூக்ஷ்மம் அதிகரிக்க, அக்கர்மங்களில் கால இயற்கைக்குத் தகாதவைகள் கைவிடப்பட்டு, மாற்றத்தக்கவைகள் விவேகம், ஞானம் இவைகளால் மாற்றத் தக்கவைகளாய்விடுகின்றன. இது பிரதானமாய் ஞானமார்க்கத்தில் கைக்கொள்ளப் படுகிறது. இம்மார்க்கம் ஸ்ரீ சங்கராசாரியராலும் கௌதம புத்தராலும் வற்புறுத்தப்பட்டது. புத்தியினால் புத்திக்கு அதீதமான விஷயங்களை கிரஹிக்க முயற்சிப்பதில் புத்தி தத்தளித்து விபரீதமான வழிகளில் செல்லும் சமயங்களில், ஜீவனானவன் தன்னுடைய சக்தியின்மையை அறிந்து ஈசுவரனைச் சரணமடைந்து பக்தி பரவசத்தால் தன்னை மறக்கக்கூடிய நிலைமையில் தனக்கு சக்தியும் ஞானமும் ஸித்தித்திருக்கிறதை பக்திமார்க்கத்தில் அறிகிறான். பக்திமார்க்கத்தை போதித்த ஆசாரியர்களாகிய ஸ்ரீராமாநுஜர் சைதன்னியர் முதலானோர் இதை வற்புறுத்தி யிருக்கிறார்கள்.



***

ஆகையால் இத்தேசத்திலே பல காலங்களில் பெரியோர்கள் தோன்றி ஸநாதன தர்மத்திலும் அதை அநுசரித்து நிற்கின்ற ஆசாரங்களிலும் அந்தந்தக் காலங்களுக்கு ஏற்ப அவசியமானபாகத்தை வற்புறுத்தியும், நூதனமுறைகளை ஏற்படுத்தியுமிருக்கின்றனர்.

***

பல தேசங்களிலும் பல மதஸ்தர்களுள்ளும் புராதனமாய் ஏற்பட்ட விதிகளும் முறைகளும் வழக்கங்களும் தற்காலத்தில் அந்தந்த தேசங்களிலும் மதஸ்தர்களுள்ளும் தோன்றும் நூதன நிலைமைகளில் பலவாறு ஒவ்வாதவைகளாயிருக்கின்றன. அவைகளை இன்னும் அதிகமாக ஒவ்வாமல்செய்ய இந்த யுத்தத்தின்மூலமாய் ஏற்படும் நூதன சம்பவங்கள் காரணமாயிருக்கின்றன. இந்தியாவில் அநேக ஆயிர வருஷங்களாக இந்துஜனஸமூகங்களின் சம்பந்தங்களை ஒழுங்குபடுத்தி வந்த வருணங்களும் ஆசிரமங்களும்

அவைகளைக் காப்பாற்றிவந்த தர்மங்களினின்றும் வேறுபடுவதால் பழைய வழிகளில் நிலைநிற்பது சாத்தியமிராது போலக் காண்கிறது. ஒவ்வொரு ஜாதியாரும் மற்ற ஜாதியாரைவிட்டு பிரத்தியேகமாயிருந்துகொண்டு அவரவர்களுக்கு ஏற்பட்ட கொள்கை, வழக்கம், வழிபாடு, ஆசாரம் முதலியவைகளைக் கைக்கொண்டு வந்ததுபோல் இனிமேல் தனித்து நிற்கமுடியாது. உலகமுழுவதும் அச்சிடப்பட்ட கிரந்தங்கள் மூலமாயும், பத்திரிகைகள் மூலமாயும், சுலபமாய் சஞ்சரிக்க ஸாதனமாயிருக்கின்ற ரயில்,புகைக்கப்பல் முதலிய யந்திரங்கள் மூலமாயும், ஒருவரோடு ஒருவர் சம்பாஷணைசெய்ய ஸாதகமாயிருக்கும் ஆங்கிலேயமுதலிய உலக வியாப்தியையுடைய பாஷைகளாலும், உலகமுழுவதும் இளைஞர்களுக்கு கல்விச்சாலைகளில் போதிக்கப்படும் பொதுவானகல்விமுறைகளாலும், இவ்விதமாகப்பலவாறாக தற்காலங்களில் மனிதர்களை ஒன்றுசேர்க்கும் காரணங்கள் அதிகரித்து வருவதாலும், ஒவ்வொரு தேசத்திலும் பிராசீன முறைகளை அப்பியசிப்பது சுலபமன்று. துவேஷத்தின்பேரில் யுத்தம் ஏற்பட்டு அந்த யுத்தம் முடியும்வரை துவேஷத்தையே ஆதாரமாகக் கொண்டிருப்பினும்,யுத்தம் முடிந்தபிறகு அதுவே ஐக்கியபாவம் அதிகரிப்பதற்கு பலமான காரணமாகின்றது. யுத்தத்தில் முன் பிரிந்துநின்ற பலஜாதியார்கள் ஒன்று சேருகிறார்கள். அவர்களுள் ஏற்படும் துவேஷம் அவரவர்களது சொந்த விஷயங்களைப்பற்றாது பொது ராஜவிஷயங்களைப் பற்றியதால் நீடித்து நிற்கமாட்டாது. ஆகையால் விபரீதமாய்த் தோன்றினும் இப்போது நிகழும் யுத்தமானது இனிமேல் உலகத்தில்யுத்தம் நிகழாவண்ணம் செய்யக் கூடுமென்றும், உலகத்து ஜனங்களுள் ஐக்கிய பாவத்தை உண்டுபண்ணத் தக்கதென்றும் ஐரோப்பா கண்டத்திலுள்ள தேசங்கள் ஒன்று சேர்ந்து ஐக்கிய மாகாணங்களாக (United States of Europe)



கூடுமென்றும் ஆழ்ந்த ஆராய்ச்சியுள்ளவர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள்.

***

ஐரோப்பா கண்டத்தில் யுத்தம் நின்றபின்னர் அநேகமாயிரம் மனிதர்கள் யுத்தத்தில் மரித்துப்போவதினால் யுவதிகளாயுள்ள ஸ்திரீகள் புவாக்களைக்காட்டிலும் அதிகரித்து இருப்பார்களென்றும் கல்யாணம் செய்து கொள்வதற்கு இடமின்றி அநேகம்பெண்கள் இருப்பார்களென்றும் இவ்விதமான நிலைமை இப்போதிய நிலைமையைக் காட்டிலும் வேறாயுள்ளதென்றும் அந்தநிலைமைக்குத்தக்கவாறு பரிகாரங்கள் தேடவேண்டி வருமென்றும் சிலர் ஊகிக்கிறார்கள். இப்பொழுதே பிரான்சு, பெல்ஜியம்,இங்கிலாந்து முதலிய தேசங்களில் யுத்த நிலைமையால் உண்டு பண்ணப்பட்ட விசேஷ காரணங்களால் விவாக ஸம்ஸ்காரத்திற்கு புறம்பாய் அநேக குழந்தைகள் ஜனித்துக்கொண்டு வருகிறார்களென்றும் அவர்களுக்கு எவ்விதமான அந்தஸ்து சட்டப்பிரகாரம் கொடுக்கத் தக்கதென்றும் பொதுவிஷயங்களைக் கருதும் பத்திராதிபர்கள் முதலானோர் பரியாலோசனைபண்ணுகிறார்கள். டென்மார்க்கு தேசத்தில் இப்போதே ஸ்திரீகளும் புமான்களும் ராஜ்யத்தில் உத்தியோகங்கள், வோட்டுக் கொடுக்கும் ஸ்வதந்திரங்கள் முதலியவைகளில் சமானர்களென்று நூதனமாகச்சட்டத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ருஷியா தேசத்தில் சாதாரண ஜனங்கள் பானம் செய்து கொண்டுவந்தசாராயத்தைப்பானம் செய்யக்கூடாதென்று இராஜாங்கத்தார் தடுத்துவிட்டார்கள். இங்கிலாந்து தேசத்தில் யுத்தத்தினால் உண்டான நிலைமையினால் முன் ஆங்கிலேய இராஜாங்கத்தாரால் கைக்கொள்ளப்பட்ட ராஜமுறைகளுக்கு மாறுதலாய் ஜனங்களின் ஜீவனத்திற்கு அவசியமான சாமான்களின் விலைகளை இராஜாங்

அவைகளைக் காப்பாற்றிவந்த தர்மங்களினின்றும் வேறுபடுவதால் பழைய வழிகளில் நிலைநிற்பது சாத்தியமிராது போலக் காண்கிறது. ஒவ்வொரு ஜாதியாரும் மற்ற ஜாதியாரைவிட்டு பிரத்தியேகமா யிருந்துகொண்டு அவரவர்களுக்கு ஏற்பட்ட கொள்கை, வழக்கம், வழிபாடு, ஆசாரம் முதலியவைகளைக் கைக்கொண்டு வந்ததுபோல் இனிமேல் தனித்து நிற்கமுடியாது. உலகமுழுவதும் அச்சிடப்பட்ட கிரந்தங்கள் மூலமாயும், பத்திரிகைகள் மூலமாயும், சுலபமாய் சஞ்சரிக்க ஸாதனமாயிருக்கின்ற ரயில்,புகைக்கப்பல் முதலிய யந்திரங்கள் மூலமாயும், ஒருவரோடு ஒருவர் சம்பாஷணைசெய்ய ஸாதகமாயிருக்கும் ஆங்கிலேயமுதலிய உலக வியாப்தியையுடைய பாஷைகளாலும், உலகமுழுவதும் இளைஞர்களுக்கு கல்விச்சாலைகளில் போதிக்கப்படும் பொதுவானகல்விமுறைகளாலும், இவ்விதமாகப்பலவாறாக தற்காலங்களில் மனிதர்களை ஒன்றுசேர்க்கும் காரணங்கள் அதிகரித்து வருவதாலும், ஒவ்வொரு தேசத்திலும் பிராசீன முறைகளை அப்பியசிப்பது சுலபமன்று. துவேஷத்தின்பேரில் யுத்தம் ஏற்பட்டு அந்த யுத்தம் முடியும்வரை துவேஷத்தையே ஆதாரமாகக் கொண்டிருப்பினும்,யுத்தம் முடிந்தபிறகு அதுவே ஐக்கியபாவம் அதிகரிப்பதற்கு பலமான காரணமாகின்றது. யுத்தத்தில் முன் பிரிந்துநின்ற பலஜாதியார்கள் ஒன்று சேருகிறார்கள். அவர்களுள் ஏற்படும் துவேஷம் அவரவர்களது சொந்த விஷயங்களைப்பற்றாது பொது ராஜவிஷயங்களைப் பற்றியதால் நீடித்து நிற்கமாட்டாது. ஆகையால் விபரீதமாய்த் தோன்றினும் இப்போது நிகழும் யுத்தமானது இனிமேல் உலகத்தில்யுத்தம் நிகழாவண்ணம் செய்யக் கூடுமென்றும், உலகத்து ஜனங்களுள் ஐக்கிய பாவத்தை உண்டுபண்ணத் தக்கதென்றும் ஐரோப்பா கண்டத்திலுள்ள தேசங்கள் ஒன்று சேர்ந்து ஐக்கிய மாகாணங்களாக (United States of Europe)



கூடுமென்றும் ஆழ்ந்த ஆராய்ச்சியுள்ளவர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள்.

***

ஐரோப்பா கண்டத்தில் யுத்தம் நின்றபின்னர் அநேகமாயிரம் மனிதர்கள் யுத்தத்தில் மரித்துப்போவதினால் யுவதிகளாயுள்ள ஸ்திரீகள் யுவாக்களைக்காட்டிலும் அதிகரித்திருப்பார்களென்றும் கல்யாணம் செய்து கொள்வதற்கு இடமின்றி அநேகம்பெண்கள் இருப்பார்களென்றும் இவ்விதமான நிலைமை இப்போதிய நிலைமையைக் காட்டிலும் வேறாயுள்ளதென்றும் அந்தநிலைமைக்குத்தக்கவாறு பரிகாரங்கள் தேடவேண்டி வருமென்றும் சிலர் ஊகிக்கிறார்கள். இப்பொழுதே பிரான்சு, பெல்ஜியம்,இங்கிலாந்து முதலிய தேசங்களில் யுத்த நிலைமையால் உண்டு பண்ணப்பட்ட விசேஷ காரணங்களால் விவாக ஸம்ஸ்காரத்திற்கு புறம்பாய் அநேக குழந்தைகள் ஜனித்துக்கொண்டு வருகிறார்களென்றும் அவர்களுக்கு எவ்விதமான அந்தஸ்து சட்டப்பிரகாரம் கொடுக்கத் தக்கதென்றும் பொது விஷயங்களைக் கருதும் பத்திராதிபர்கள் முதலானோர் பரியாலோசனைபண்ணுகிறார்கள். டென்மார்க்கு தேசத்தில் இப்போதே ஸ்திரீகளும் புமான்களும் ராஜயத்தில் உத்தியோகங்கள், வோட்டுக் கொடுக்கும் ஸ்வதந்திரங்கள் முதலியவைகளில் சமானர்களென்று நூதனமாகச்சட்டத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ருஷியா தேசத்தில் சாதாரண ஜனங்கள் பானம் செய்து கொண்டுவந்தசாராயத்தைப்பானம் செய்யக்கூடாதென்று இராஜாங்கத்தார் தடுத்துவிட்டார்கள். இங்கிலாந்து தேசத்தில் யுத்தத்தினால் உண்டான நிலைமைகளால் முன் ஆங்கிலேய இராஜாங்கத்தாரால் கைக்கொள்ளப்பட்ட ராஜமுறைகளுக்கு மாறுதலாய் ஜனங்களின் ஜீவனத்திற்கு அவசியமான சாமான்களின் விலைகளை இராஜாங்

கத்தார்கள் அதிகரிக்காமல் ஒழுங்கு படுத்தலா மென்றும் ராஜ்யநன்மையின் பொருட்டு தொழிலாளிகள் ஸ்வகார்யத்திற்காக வேலைசெய்யும் நேரத்தை, ராஜ்ய நன்மைக்காக ராஜாங்கத்தார் நிர்ணயப்படுத்தலாமென்றும் ஒப்புக்கொண்டு வருகிறார்கள்.

***

ஆகையால் பலவிதங்களாய் இக்காலத்தில் இதற்கு முன் தோன்றினதைக் காட்டிலும் விசேஷ மாறுதல்கள் தோன்றுகின்றன. அவைகள் யுத்தத்தினால் அதிகரிக்கப்பட்டும் அவசியமாகச்செய்யப்பட்டும் வருகின்றன. இவைகள் எல்லாம் ஜகத்குரு வரும்சமயத்தை சூசிப்பிக்கின்றனவென்றே விவேகத்தால் கைக்கொள்ளத் தகும். இவைகளின் வெளித்தோற்றம் சிலவகையில் விபரீதமாகத் தோன்றினும் உலகை ஈசுவரனது பிரதிநிதிகளாய் ஆளும் ரிஷிகளும் தேவர்களும் பூர்ண ஞானத்துடனும் பக்தியுடனும் அன்புடனும் ஈசுவர ஸங்கற்பத்தை நிறைவேற்றுவதால் எல்லாம் நலத்தையே நாடுகின்றனவென்பது திண்ணம்.

அ. ரங்கஸ்வாமி ஐயர்.

---

## நன்மொழி.

---

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத ।
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥

தர்மம் குன்றி அதர்மம் மேலிடும்போதெல்லாம், நான் அவதரிக்கிறேன்.—பகவத்கீதை.

## ஹிந்துக்களின் தத்வசாஸ்த்ரம்.

---

1. தத்வசாஸ்த்ர மென்பது வஸ்துக்களின் தத்வம் அல்லது உண்மையை யறிவிக்கு சாஸ்த்ரமேயாம். ப்ரத்யக்ஷமாயுள்ள உலகம், மனிதன், ஜீவன், முதலான வஸ்துக்களின் அமைப்பையும், நிலைமைகளையும் கூறுவது பௌதிக சாஸ்த்ர (Physical Sciences) ங்களாகும். அவைகளின் மூல காரணங்களையும், முடிவையும் பற்றி அநுமான பூர்வமாய் ஆராய்ந்து ஸித்தாந்தம் செய்வது தத்வசாஸ்த்ரங்களின் முறையாகும்.

2. தத்வ சாஸ்த்ரப் பயிற்சியானது, ஒவ்வொரு தேசத்திலும், அதனதன் கல்வியபிவிருத்தி, செல்வ அபிவிருத்தி, ராஜாங்க முறை, நாகரிகம், முதலான நிலைமைகளுக்குத் தக்கவாறு ஒவ்வொரு நிலைமையில் உண்டாகும்.

நமது தேசத்தில் வேதகாலங்களில், கர்ம மார்க்கமே ப்ரதானமாயிருந்ததாய்த் தெரியவருகின்றது. வேதஸம்ஹிதைகளால் இதனை அறிகின்றோம்.

4. ஸம்ஹிதா காலத்துக்குப் பிறகு இரண்டு மதங்கள் (Schools) தோன்றின. அவைகளாவன:—

(1) கர்ம மார்க்கம்
(2) ஞானமார்க்கம்

கர்மமார்க்கம், (Hindu Ritualism) வேத மந்த்ரங்களுக்குப் பரம்பரையாய் உபதேசிக்கப்பட்டுவந்த கருத்துக்களையே அங்கீகரித்தும், அவ்விதிகளைப் பூர்வாநுஷ்டான முறை தவறாது அநுசரித்தும், யக்ஞ, யாகாதி க்ரியைகளை தவறாது அநுஷ்டித்தும் நடையுடை பாவனைகளிலும் பூர்விகர்களைப் போலவே ஆசரித்தும் வருவது கர்ம மார்க்

கிகளின் கொள்கை. இவ்விதிகளெல்லாம், வேத மந்த்ரங்களை ப்ரயோகிக்கும் முறைகளை யறிவிக்கும் ப்ராஹ்மணங்களிலடங்கி யிருக்கின்றன. ஆதலால் ப்ராஹ்மணங்கள் ப்ரயோக சாஸ்த்ரங்கள்(Codes of Procedure) ஆகவிளங்குகின்றன. கர்ம மார்க்கத்தைப் பற்றிய இப்பிராஹ்மணங்களே பிற்காலத்தில் பூர்வ மீமாம்ஸைகளுக்கும், பிறகு கிருஹ்ய, தர்ம ஸூத்ரங்களுக்கும் மூலக்ரந்தங்களாய் இருக்கின்றன. கர்ம மார்க்கிகள், பூமி, ஸ்வர்க்கம், என்னும் ஐஹிக பலன்களை மாத்திரம் அபேக்ஷித்தவர்கள். ஞான மார்க்கிகளால் நித்யம் என்று சொல்லப்படும் ஆமுஷ்மிகத்தையவர்கள் இச்சித்தவர்களல்லர்.

“ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்ககாமோ யஜேத”

“ஸ்வர்க்காபிலாஷையுள்ளவன் ஜ்யோதிஷ்டோமம் செய்யவேண்டும்.”

“க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி”

“புண்யம் குறைந்ததும் பூலோகம் வந்து சேருகின்றான்.”

## ஞானமார்க்கம் (Hindu Rationalism)

ஹிந்துக்களின் ஞானமார்க்கத்தைத் தற்கால யுக்திவாதி (Free thinkers)களின் கொள்கைக்கு ஒப்பிடலாம். ஆனால் ஒரு வித்யாஸம். தற்கால யுக்திவாதிகள், சப்தப்ரமாண (tradition) த்துக்கு அதிக மதிப்பு வைக்கமாட்டார்கள். அதாவது முன்னோர்களின் கொள்கைகள் தங்கள் யுக்திக்கு ஒத்து வராவிட்டால், அவைகளை ஆக்ஷேபித்து விடுவார்கள். ஆனால் பூர்வ ஹிந்து ஞானமார்க்கிகளோ, வேதங்களிலும், அவைகளின் உண்மையிலும் நம்பிக்கையுள்ளவர்கள். தங்கள் அபிப்ராயம் சரியென்று தோன்றும் பொழுது ஸ்மிருதிகளிலும் அவ்வபிப்ராய மடங்கியிருப்ப



தாகவே அவர்கள் எண்ணுவார்கள். அவர்கள் ப்ரத்யக்ஷம், அனுமான-உபமானம், சாப்தம் என மூவகை ஆதாரங்களையும் அங்கீகரித்தார்கள். ஆதியில் இம்மூவகை ஆதாரங்களும் சமமாகவே பாராட்டப்பட்டு வந்தன. ப்ரத்யக்ஷ அநுமானாதிப்ரமாணங்களால் வரும் முடிவுகள், சப்தம் அல்லது வேதப்ரமாணங்களால் நிரூபிக்க முடியாவிடினும் தங்களது முடிவு சரியென்ற எண்ணத்தால் வேத மந்திரங்களையும் அவ்வபிப்ராயத்தைக் கொடுக்கும்படி புதிதாய் அர்த்தப்படுத்தி வருவது வழக்கமாயிற்று.

இவ்வாறு பூர்வ ஞானமார்க்கிகள், வேதங்கள் அல்லது சப்தப்ரமாணங்களுக்கும் விசேஷ மதிப்பு வைத்திருந்த போதிலும், தங்கள் யுக்தியை யனுசரித்து அதன் ப்ரகாரம் முடிவுக்கு வராதிருக்கவில்லை.

கர்மமார்க்கிகளைப் போலல்லாமல் ஞான மார்க்கிகள் ப்ரபஞ்சம், மனிதன் இவைகளின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, முடிவு முதலானவைகளைப் பற்றியும், ப்ரபஞ்சத்துக்கும், மனிதனுக்குமுள்ள ஸம்பந்தங்களையும் இன்னும் இவை போன்ற எண்ணிறந்த அதிபௌதிக (Metaphysical) விஷயங்களைப் பற்றியும் அவர்கள் ஆலோசிக்க ஆரம்பித்தனர். ஒவ்வொரு காலத்திலும் அவர்கள் பல ஸித்தாந்தங்கள் செய்திருக்கின்றனர். பரிஷத் என்ற பூர்வ கல்விச் சங்கங்களில் தங்கள் அபிப்ராயங்களை நிர்ப்பயமாய் ஆக்ஷேப ஸமாதானங்களுடன் தெரிவித்திருக்கின்றனர். இப்படிப்பட்ட ஞானமார்க்க வியவஹாரங்களெல்லாம் ஆதிகாலத்தில் உத்தர மீமாம்ஸையிலும், பிற்பட்டு ஆரண்யகத்திலும் கடைசியாய் உபநிஷத்துக்களிலும் நன்றாய் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## அதியுக்திவாதம் (Extreme Rationalism)

காலம் செல்லச் செல்ல, நமது தேசத்தில், யுக்திவாதமானது விசேஷமாய்ப் பலப்படத் துவங்கிற்று. அதியுக்திவாதிகளாய் ஓர் வகுப்பினர் உண்டானார்கள். வேதம் முதலான சாப்தப்ரமாணங்களில் இவர்களுக்கு நம்பிக்கையேயில்லை. மற்ற இருவகை ப்ரமாணங்களை மாத்திரம் அவர்கள் உண்மையெனக் கைக்கொண்டார்கள். இவர்களுக்குத் தான் நாஸ்திகர்கள் என்று பெயர். இங்கு நாஸ்திகர் என்றால், வேதங்களில் நம்பிக்கை யில்லாதவர்கள் என்றர்த்தமேயொழிய தெய்வத்தில் நம்பிக்கை யில்லாதவர்கள் என்றர்த்தமல்ல. இவர்கள் அபிப்ராயங்கள் பிற்பட்டுண்டான சார்வாக (Sensualists and materialists) நூல்களிலும், பௌத்தர் (Hindu Nihilists) களின் சூன்யவாத நூல்களிலும் விவரமாய்க் காணலாம். ஸாங்க்ய மதத்தின் பிற்பட்ட க்ரந்தங்களிலும் ஈசுவரன் அவ்வளவாக ஒப்புக்கொள்ளப்படவில்லை. பரமாத்மா உண்டென்றும் அப்பரமாத்மாவை யடைந்து அத்துடன் ஸாயுஜ்யமடைவதே மனிதனுடைய பரமார்த்தம்(Supreme goal)என்றும் யோகசாஸ்த்ரம் போதிக்கின்றது. ஆனால் ஸாங்க்ய மதமோ, பரமாத்மா உண்டென்பதை நிரூபிக்க முயலாமல், ஜீவாத்மாவையும், 24 தத்துவங்களடங்கிய ப்ரக்ருதியையும் மாத்திரம் அங்கீகரிப்பதுடன், ஜடப்பொருளான ப்ரக்ருதியினின்றும் தன்னை விடுவித்துக் கொள்ளுவதே மனிதனுடைய உயர்ந்த புருஷார்த்தம் என்றும் கூறுகின்றது. இதுதான் புருஷார்த்தங்களில் நாலாவதாகிய மோக்ஷம் எனப்படும்.

ஆதலால், பூர்வ கர்ம மார்க்கம்,யோகமார்க்கம், வேதாந்தமார்க்கம் முதலான ஆஸ்திக மதங்களுக்குப்,பிற்பட்ட, சார்வாகம், பௌத்தம் முதலான நாஸ்திக மதங்களுக்கும்



நடுநிலைமையாயிருப்பதே ஸாங்க்யமதமாகும். ஆஸ்திக மதங்களைப்போல வேதங்களில் ஸாங்க்ய மதக்காரருக்கும் நம்பிக்கையுண்டு. ஆனால், பரமாத்மா உண்டென்று நிரூபிக்கவுமில்லை.

இக்காரணங்களால் ஸாங்க்ய மதமானது தற்காலத்திய அக்ஞேய (Agnosticism) மதத்துக்குச் சமமென்று சொல்லலாம்.

ஆதலால், முன்னொருகாலத்தில் ஹிந்து தத்வசாஸ்த்ரங்களில், மூன்று முக்யமான பிரிவுகளிருந்தனவென்று சொல்லலாம் அவையாவன:—

(1) கர்மமார்க்கம(Ritualism) மூவ்வகை ப்ரமாணங்களிலும் வேதப்ரமாணமே முக்யமானதென்றும் வைதிக மார்க்கத்தில் மிகச்சிரத்தை யுள்ளவர்களுமான ப்ராமண, க்ஷத்ரியர் முதலானவர்களால் அனுஸரிக்கப்பட்டது.

(2) ஞானமார்க்கம் மிதவாதம் (Moderate Rationalism) இம்மார்க்கத்தை யனுஸரித்தவர்கள், வேதப்ரமாணமுள்பட மூவ்வகை ப்ரமாணங்களிலும் நம்பிக்கையுள்ளவர்கள்.

ஸேசுவரவாதிகள் இவ்வகுப்பினர் முறையே இருபிரிவினராயுள்ளவர்கள். உலக ஸ்ருஷ்டி கர்த்தாவாகவும், அதியந்த மற்றவராகவும் கடவுள் ஒருவர் உண்டென்றும், அது வேதப்ரமாணங்களாலும் உபநிஷத்துகளாலும் நிரூபிக்கப்பெற்றுள்ளதென்றும், யுக்தி வாதத்துக்கும் பொருந்தியிருக்கின்றதென்றும் சொல்லுபவர்கள் ஓர் பிரிவினர். இவர்கள் ஸேசுவரவாதிகள்

அக்ஞேயவாதிகள் (Agnosts) இவர்கள் ஈசுவரன் அல்லது பரமாத்மா உண்டென்றாவது இல்லையென்றாவது நி

ரூபிக்க முயலவில்லை. ஈசுவரன் உண்டென்பது நிரூபிக்க முடியாதென்றும், அதை அறியச்செய்யும் முயற்சி வீணென்றும் இவர்கள் கூறுவார்கள். ஸாங்கியமதம் முற்றின பருவத்தில் இக்கொள்கை விசேஷமாய் கைக்கொள்ளப் பட்டது. இச்சந்தேகக் கொள்கையானது பிற்பட்ட நிரீசுவரவாதிகள் ஈசுவரனே இல்லையென்று வாதிக்க இசைவான ஓர் வழியாய் விட்டது.

(8) ஞானமார்க்கம் அதியுக்தி வாதம் (Extreme Rationalism) இவர்கள் வேதப்ரமாணங்களை நம்பவேயில்லை. ப்ரத்யக்ஷ, அனுமானாதி இருவகை ப்ரமாணங்களே முக்யமானவைகள் என்பது இவர்கள்கொள்கை. சார்வாகர்கள் லோகாயதிகர்கள், பௌத்தர்கள் முதலானவர்கள் இவ்வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

(இன்னும் வரும்.)

R. S. நாராயணஸ்வாமி ஐயர் B.A., B.L.,

---



# பூர்ணசந்திரோதயம்.

தொகுதி 6 } 1915 ஞு ஜூலை மீ ராக்ஷஸ ஞு ஆடி மீ { பகுதி 3.

## தற்கால நிலைமை.

நாளிது ஜூலை மீ 19உயில் சென்னை ராஜதானியின் கவர்னராகிய லார்ட் பெண்ட்லாண்டு அவர்கள் சித்தூர் ஜில்லா மதனபள்ளி என்னும் ஊரில் மதனபள்ளி தியஸாபிகல் காலேஜ் என்ற ப்ரஹ்மஞான வித்தியாசாலையைப் பகிரங்கப்படுத்தி அது மதராஸ் யூநிவெர்ஸிடி என்ற சென்னை சர்வகலாசாலையோடு, பரீக்ஷைகளின்பொருட்டு சேர்க்கப்பட்டிருக்கிறதென்று வெளியிட்டனர். அச்சமயத்தில் மாதுஸ்ரீ அன்னிபெஸண்டு அம்மையாரவர்கள் அவ்வித்தியாசாலையின் நோக்கங்களை வற்புறுத்தினர். அவ்வித்யாசாலையானது முதல்முதல் 1888ம் வருஷத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. 1911ம் வருஷத்தில் ஸ்ரீமான் எர்நஸ்டு உட் என்பவர் அதை மேல்பார்க்கச் சென்றார். அவ்வித்தியாசாலையின் மாணாக்கர்களுக்கு அவர்களது விவேகாபிவிர்த்திக்கு ஸாதகமான

கல்வியைக் கற்பிப்பதோடு அவர்களுக்கு நன்னடக்கையும் நற்குணமும் உண்டாகும் வண்ணம் அவைகளுக்கு ஆதாரமான மதவிஷயங்களும் போதிக்கப்பட்டு வருகின்றன. இந்து மாணுக்கர்களுக்கு ஸநாதன தர்மத்திலும், கிறிஸ்துவர்களுக்கு அவர்களின் மதத்திலும், மஹமதியர்களுக்கு அவர்களது சமயத்திலும் கல்வி கற்றுக்கொடுக்கப்பட்டு வருகின்றது. அவ்வித்தியாசாலையில் கற்கும் வித்தியார்த்திகளின் விவேகம்,சீலம் இவைகளின் அபிவிருத்திக்காக மேற்சொல்லியபிரகாரம்கல்விகற்றுக்கொடுக்கப்படுவதோடு, அவர்களதுசரீரப்பயிற்சியும்மிக கவனிக்கப்படுகிறதென்றும்தெரிகிறது. அவ்வித்தியாசாலையின் மாணுக்கர்கள் ஈசுவர பக்தியிலும், சிரத்தையிலும், ஒழுக்கத்திலும் உறுதியடைந்து சரீர பலத்துடனும் தெளிவான புத்தியுடனும் அவர்களது ஜன்மதேசத்திற்கு கைங்கர்யம் புரிவோர்களாயும், ராஜபக்தியுள்ள ராஜ்யமண்டல வாஸிகளாயும் வளர்வதே அவ்வித்தியாசாலையின் கருத்தென்று அம்மையாரவர்கள் சொன்னதை கனம்தங்கிய கவர்னரவர்களும் ஆமோதித்துக் கூறினர்.

***

மதனபள்ளி பிரஹ்மக்ஞான வித்தியாசாலை, பிரஹ்மக்ஞான வித்தியாபிவிர்த்தி சபையென்ற தியஸாபிகல் எடுகேஷனல் டிரஸ்டு சங்கத்தாரால் இந்தியாவில் முதன்முதல் ஸ்தாபிக்கப்பட்ட, காலேஜ் என்ற வித்தியாசாலையாகவிருக்கின்றது. இந்துமதத்தில், எல்லா சமயங்களும் ஈசுவரனை அடைவதற்குஏற்படுத்தப்பட்ட பல மார்க்கங்கள் என்பதுபண்டைக்காலமுதல்வற்புறுத்தப்பட்டதத்துவமாகும். அத்தத்துவம்இத்தேசத்தில்பெரும் பாலும்எல்லோருக்கும் தெரிந்திருந்த போதிலும், அதை ஒழுக்கத்தில் அனுசரித்து பல மதஸ்தர்களுக்குள் மத வித்தியாசங்களால் ஏற்ப



டும் துவேஷத்தை குறைத்தும், அன்பையும் அன்னியோன்ய பாவத்தையும் அதிகரித்தும், அத்தத்துவத்தின் அர்த்தத்தை உண்மையில் அறிவது துர்லபமாயிருக்கிறது. ஜாதி மத வருணவித்தியாசங்களுக்குப் புறம்பாகவிருக்கிற தத்துவமாகிய மனிதர்களது சகோதரபாவத்தை பிரஹ்மக்ஞான சபையானது பிரதமமான கொள்கையாகக் கைக்கொண்டு நிற்கின்றது. வைவஸ்வத மனுவினது ஆக்ஞையின்பேரில் ஆரியர்கள் இமயமலைக்கு வடபாரிசத்திலுள்ள பிரதேசங்களிலிருந்து இந்துதேசத்திற்குள் அநேகமாயிரம் வருஷங்களுக்கு முன்னர் வந்தபோது அவர்களது ஐக்கியமானது பலமாயிருந்ததென்றே நாம் ஊஹிக்கலாம்.

***

இத்தேசத்தின்கண் பாம்பரையாக ஸநாதன தர்மமானது தழைத்தோங்கி, பிரஹ்மராஜரிஷிகளின் ஆளுகையானது இப்பாரதவருஷம் முழுவதும் பரவி நின்றபோது மதர், கொள்கை, ஆசாரம் முதலியவைகளில் இத்தேச ஜனங்களுக்குள் அக்காலங்களில் தற்கால வித்யாசங்கள் தோன்ருத காரணத்தால் ஐக்கிய பாவம் அதிகரித்திருந்ததென்றே நாம் சொல்லத்தகும். பௌத்த ஜைனர்களுக்கும் இந்துக்களுக்கும் பிற்காலங்களில் மத துவேஷம் ஏற்பட்டு, அதற்குப்பிறகு மகமதியர் இந்தியாவிற்கு வந்தபிறகு மத துவேஷம் அதிகரித்தது. கிறிஸ்துவர்கள் இத்தேசத்தில் உண்டானபிறகு மத வித்தியாசங்களுக்கு இன்னும் ஒரு காரணம் நூதனமாய்த் தோன்றிற்று. ஆதலால் முற்காலங்களைக்காட்டிலும் ஐக்கிய பாவமானது குன்ற நூதன வித்தியாசங்கள் அதிகரித்துக்கொண்டு வருகின்றன. முன் இத்தேசமானது இந்துக்களது தேசமென்று சொல்லத்தகும். இப்பொழுதோ உலகத்திலுள்ள எல்லா முக்கிய மதங்களைச் சார்ந்தவர்களும் இத்தேசத்தை ஜனன பூமியாகத்

கொண்டாடுகிறார்கள். இந்நிலைமையில் இவர்களுக்குள் ஸமரச ஞானத்தைப் புகட்டவேண்டியது அவசியமாயிருக்கிறது. அந்த ஸமரச உணர்வை இருவிதமாகக் கைக்கொள்ளலாம். எல்லா மதங்களையும் விலக்கி நாஸ்திக கொள்கைகளைக் கைப்பற்றி, கேவலம் புத்தியை தீக்ஷ்ணமாகச் செய்கின்ற கல்வியைமட்டும் கற்று எல்லா மதங்களையும் உதாஸீனத்தின் பேரில் உண்டாகும் ஸமபாவனையுடன் கவனியாது நின்றுவிடலாம்; அல்லது உலகத்தில் பரவிநிற்கும் முக்கிய மதங்களின் தத்துவார்த்தங்களை அறிந்து அவைகள் ஒன்றோடொன்று ஒத்திருக்கின்றனவென்று தெரிந்து, அவைகளை துவேஷமின்றி சமமாக பாவிக்கலாம். இரண்டாவதாகச் சொல்லப்படுகிற ஸம புத்திதான் பிரஹ்மஞானசபையால் வற்புறுத்தப்படுகிறது. அது பிரஹ்மஞான சபையோரால் ஸ்தாபிக்கப்படுகிற வித்தியாசாலைகளின் மாணாக்கர்களுக்குப் போதிக்கப்பட்டு அவர்களால் கவனிக்கப்படுகிறது. அதின் வாயிலாக, இப்போது பல வித்தியாசங்களோடு கூடிநிற்கின்ற இத்தேசத்து ஜனங்களுக்குள் ஐக்கிய பாவம் அதிகரிக்க இயலும்.

***

ஜீவன் நித்தியனென்றும், அவனுக்கு இவ்வுலகத்தில் பல ஜன்மங்கள் ஏற்படுகின்றனவென்றும் நமது தேசத்திலுள்ள எல்லா இந்துக்களும் அறிந்திருந்தாலும் அந்தத் தத்துவஞானம் எவ்வளவு அநுபவத்திற்குக் கொண்டுவரத் தக்கதோ அவ்வளவு கொண்டு வரப்படவில்லை. அந்தத் தத்துவஞானம் நன்றாக அப்பியாசத்திற்குக் கொண்டுவரப்படின் நமது பாடசாலைகளில் வழங்கிவரும் கல்வி முறையானது முற்றிலும் மாற்றப்படவேண்டும். ஒவ்வொரு ஜீவனும் இவ்வுலகத்தி லவதரித்து வாலிப சரீரத்தை யடைந்த



போதிலும் அஜ்ஜீவனது வயது பாலியமல்ல. அநேக ஜன்மங்களாய் முதிர்ச்சி யடைந்திருக்கிறான். முன் ஜன்மங்களில் அவன் வெளியிட்ட நற்குணங்களையும் தீக்குணங்களையும் வாசனாரூபமாகத் தன்னிடத்தில் இந்த ஜன்மத்தில் மறைத்து உள்ளடக்கிக் கொண்டிருக்கிறான். எவ்வாறு வித்துக்கள் அவைகள் விழும் க்ஷேத்திரத்தினது தன்மையின் வேறுபாடுகளால் முளைத்துச் செழித்து வளர்ந்து ஓங்குவதும் அல்லது க்ஷீணதசையை அடைவதும் சுபாவமோ அதுபோல அஜ்ஜீவனானவன் ஒரு ஜன்மத்தில் இளமைப் பருவமுள்ள சரீரத்தை அடைந்திருக்குங்கால், அவனைச் சூழ்ந்துநிற்கும் குடும்ப சம்பந்தங்களும் அவன் கூடும் சகவாசங்களும் அவன் கற்கும் கல்வியும் அவைகளுக்குத் தக்கவாறு அவனுடைய பூர்வஜன்ம வாசனைகளை விகஸிக்கச் செய்கின்றன. முன்ஜன்மத்தின் துர்வாசனைகள் விகஸிக்காவண்ணம் அவைகளை நசித்துப்போகும்படி செய்யவும், நல்ல வாசனைகள் வெளித்தோன்றி பலமடையும் வண்ணம் அவைகளுக்கு வேண்டிய சாதனங்களை யமைக்கவும் வேண்டுவது அந்த ஜீவனுக்கு இந்த ஜன்மத்தில் பெற்றோர்களாயும் உபாத்தியாயர்களாயும் ஏற்பட்டவர்களுடைய கடமையாகுமன்றோ! இவைகளைக் கவனித்து பெற்றோர்களும் உபாத்தியாயர்களும் நடப்பார்களாகில் அவர்கள் புனர்ஜன்மம் என்ற தத்துவத்தின் அர்த்தத்தை அறிந்தவர்களாவார்கள்.

***

மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் வருஷமஹோற்சவமானது சென்ற ஜூன்மீ 12-13உ களில் மதுரை சேதுபதி ஹைஸ்கூலில் கனம் யல். டி. ஸ்வாமிக்கண்ணு பிள்ளையவர்களின் அக்கிராசனத்தின் கீழ் கொண்டாடப்பட்டது. அச்சமயத்தில் பல தமிழ் வித்வான்களாலும் அபிமானிக

ளாலும் பல வியாசங்கள் வாசிக்கப்பட்டு உபந்நியாசங்களும் செய்யப்பட்டன. திராவிட பாஷைகளில் முதன்மையானதும், தற்காலத்திலும்கூட அதினுடையஎழுத்துக்களாலும் சொற்களாலும் பாஷையின் அமைப்பாலும் வடமொழியினின்றுவேறுபட்டமொழியென்று காட்டுகின்றதுமானதமிழ்ஒரு புராதனபாஷை என்பதும்,வடமொழி ஆரியர்களுடன் இத்தேசத்திற்குவருமுன்,இந்நாட்டில்வழங்கிவந்த மொழியின்பிற்காலதிரிபே தற்காலத் தமிழ் எனலும் தகும்.வடமொழியில்இயற்றப்பட்டபலகிரந்தங்களை அநுசரித்துதென்மொழியிலும் பல நூல்கள் ஆரியர்களாலும்திராவிடர்களாலும் இயற்றப்பட்டு அந்த பாஷையானது சிறப்பிக்கப்பட்டிருக்கின்றது. தமிழ் பாஷையின் சரித்திர ஆராய்ச்சியும் தமிழ் பாஷையிலுள்ள நூல்களுடையவும் நூலாசிரியர்களுடையவும் காலநிர்ணயமும் தமிழ் நாட்டின் சரித்திரமும் இன்னும் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யப்படவில்லை. அவ்விதம் செய்வது மதுரைத் தமிழ்ச் சங்கத்தைப்பொறுத்து நிற்கின்றதென்று நாம்சொல்லுகிறோம். அச்சங்கத்தின் மூலமாய் பல நூல்கள் வெளிப்பட்டிருக்கின்றன. மேற்றிசை சாஸ்திரிகளால் கொண்டாடப்படுகின்ற கிரிடிகல் ஸ்காலர் ஷிப் என்ற, பரிசோதிக்கும் இயல்போடுகூடிய வித்தையானது சங்கத்தாரால் அபிவிருத்திக்குக் கொண்டுவரத்தக்கது. அது பாவுமாகில் சங்கத்தின் வருஷ மஹோற்சவங்களில் வாசிக்கப்படும் சில வியாசங்களில் ஆரியத்திற்கும் திராவிடத்திற்கும் ஏற்படுத்தப்படும் மேல் கீழ் என்ற வேறுபாடுகளுடன்கூடிய துவேஷத்தைச் சார்ந்தகோட்பாடுகள் மறைந்துபோகும்.

***

வங்காளத் துதித்து உலக முழுவதும் கீர்த்திபெற்ற, இந்திய பௌதிகசாஸ்திரி புரோபஸர் ஜகதீச சந்திரபோஸ்



என்பவர் தமிழ்ச்சங்கத்தார் முன்னிலையில் அவருடைய சாஸ்திர ஆராய்ச்சியைப்பற்றி ஜூன் மீ 14உயில் ஒரு உபந்நியாசம் செய்தனர். பௌதிகசாஸ்திர பரிசோதனையில் அவர் சித்தாந்தப்படுத்தியது, மனிதசரீரம், பிராணிகள் சரீரம், புல், பூண்டு, கல் ஆகிய ஸ்தாவரஜங்கம வர்க்கங்களிலெல்லாம் தோன்றும் பிராணன் ஒன்றே என்ற தத்துவமாம். இவைகளில் தோன்றும் பிராணன் ஒன்று தான் என்று, இச்சரீரங்களில் சில சிகித்ஸைகளால் உண்டு பண்ணப்படும் சேஷ்டைகளை வெளித் தோன்றும்படி செய்கின்ற அதிநுட்பமாகிய யந்திரங்களால் ஸ்தாபிக்கின்றனர். இப்பூலோகத்தில் மனிதர்களால் அறியப்படும் பிராணன் ஒன்று தான் என்பது அத்வைத, விசிஷ்டாத்வைத மதங்களின் சார்பு என்றே சொல்லல் தகும். நமது தேசத்து மதாசார்யர்கள் அவர்களுடைய மதசித்தாந்தங்களைச்சுருதி யுக்திமுதலிய பிரமாணங்களால்ஸ்தாபித்திருக்கின்றனர். பௌதிகசாஸ்திர முறைகளால் ஐம்புலன்களுக்கும் கோசரமாகும் வண்ணம் ஓரே பிராணன் எல்லா ஜீவராசிகளிடத்தும் நிற்கின்றது என்று ஒரு இந்தியபௌதிக சாஸ்திரியால் நிரூபிக்கப்பட்டிருப்பது இந்துதேசத்திற்கு ஒரு கௌரவத்தை உண்டாக்கியிருக்கின்றது. அவருடைய பௌதிக சாஸ்திர ஆராய்ச்சியால் வைத்தியம் விவசாயம், மநஸ்தத்துவ சாஸ்திரம் ஸைகாலஜி முதலியவைகளில் நூதன அபிவிருத்திகள் ஏற்படக்கூடியதென்றும் அந்த வழிகளில் நந்தேச மாணாக்கர்கள் பயிற்சியடையவேண்டுமென்றும் அவர் வெளியிட்டனர்.

***

பிரஹ்மக்ஞான சபையின் உப அக்கிராசனாதிபதி ஸ்ரீமான் ஏ. பி. ஸின்னெட் என்பவர் "ரிஷிகளும் தற்கால யுத்தமும்" என்ற விஷயத்தைப்பற்றி ஒரு சிறிய கிரந்தம்

எழுதியிருக்கின்றனர். ஈசுவரனுக்குக்கீழ் இவ்வுலகத்தை ஸநத்குமாரர், மநு முதலிய ரிஷிகள் ஆண்டு ரக்ஷித்து வருகின்றார்களென்பது சநாதன தர்மத்தின் பூர்வீக கொள்கைகளில் ஒன்றாகும். நாரதர் முதலிய பிரஹ்மரிஷிகளின் சம்பந்தத்துடன் இவ்வுலகத்தில் யுத்தம் நிகழ்வதை நாம் மகாபாரதத்தில் காண்கிறோம். இப்போது நிகழும் யுத்தம் உலகசரித்திரத்தில் சம்பவித்த யுத்தங்களில் அதிகோரமான யுத்தமென்று சொல்லப்படுகின்றது. யுத்தத்தில் சேர்ந்திருக்கும் ஜனத்தொகுதியாலும், நாசத்தை யுண்டு பண்ணும், ஆயுதங்களின் கொடுமையாலும், யுத்தம் வியாபித்திருக்கும் பிரதேசங்களின் விஸ்தாரத்தாலும், யுத்தத்தின் முடிவில் உலகத்தில் நேரும் பயன்களாலும் அதின் தன்மை நன்கு விளங்குகின்றது. முற்காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடந்ததென்று நம்முடைய பிராசீன கிரந்தங்கள் கூறுகின்றன. ஸீக்ரேட் டாக்டரின் என்ற குப்தவித்தை எனும் நூலில் தைத்தியர்கள் என்று சொல்லப்பட்டவர்கள் முன் செய்த கொடும்போர் போல தற்காலங்களிலும் உலகத்தின் விகாஸ முறையைத் தடைசெய்வோர்களாய் இவ்விதமே போர்புரிகின்றனர் என்று நமது அக்கிராசனாதிபதியும் உப அக்கிராசனாதிபதியும் கூறுகின்றனர். இப்போது யுத்தம் புரியும் இருதிறத்தவர்களில் விகாஸமுறையைச் செலுத்துவோர்கள் யாவர், விகாஸமுறைக்குத் தடையாக நிறபவர் எவர் என்பதை எவர் தர்மத்தை அனுசரிக்கின்ற பக்கத்தில் நிற்கின்றார். எவர் அநீதியான நோக்கங்களைக் கருதியிருக்கின்றனர் என்ற விஷயத்தை விசாரிப்பதின் மூலமாய் அறிய இயலும். குற்றமற்ற பெல்ஜியம் தேசத்தைப் படையெடுத்து வெற்றியடைய வேண்டுமென்பதை மட்டும் நாடி, அதை நாடுவதில் சாதனங்கள் தீதாயிருப்பினும் கைப்பற்றிக் குரூரத்தில் யாதொரு அருவருப்புமின்றி யுத்த சம்பந்தமில்லாத



பிரயாணிகள் செல்லும் லூஸிடானியா முதலிய புகைக்கப்பற்களைத் தாக்கியுடைத்து நிராயுதபாணிகள் ஸ்திரீகள், குழந்தைகள் முதலியவர்களை ஹிம்ஸிக்கும் ஜெர்மானியர்களே அசுரசுபாவத்தையுடையவர்கள். அவர்களும் அவர்கள் பக்கத்தைச் சார்ந்தவர்களும் உலகத்தின் விகாசமுறைக்குத் தடையாய் இப்போது நிற்கின்றார்கள். அவரை எதிர்க்கின்றவர்கள் விகாஸமுறையை இப்போது செலுத்தும் கருவிகளாகிறார்கள். உலகத்தில் ஒரு நூதன கல்பம் துவக்கப்போகின்றது. உலகத்தில் அதர்மம் அதிகரித்து தர்மம் குறையும் காலத்தில் ஈசுவரன் அவதரித்து அதர்மத்தை நாசம் செய்து தர்மத்தை ரக்ஷிக்கின்றாரென்று கீதாசாஸ்திரம் முதலியவற்றில் கூறப்பட்டுள்ள பிரகாரமே கலியுகம் 5,000ம் வருஷங்களுக்குப்பின்னர் சிறு உபகல்பம் ஆரம்பிக்கும் இச்சமயத்தில் தற்கால நாகரிகத்தின் அதர்மங்களும் துர்க்குணங்களும் ஒன்றுகூடி ரூபமெடுத்தாற்போல போர்புரியும் ஜெர்மானியரையும் இவர்கள் பக்கமிருப்பவர்களையும் தோற்கச்செய்வதால், நமது நாகரிகத்தின் துர்க்குணங்கள் நீங்கி அது புனிதமாகி அபிவிர்த்தியடைய, ஜகத்குருவின் அவதாரத்தை இந்த யுத்தமானது த்வரிதப்படுத்துகின்றது.

***

கொள்ளேகாலம் என்ற ஊரில் நாளிதுமீ 10, 11 தேதிகளில் பிரஹ்மஸ்ரீ டி. இராமச்சந்திரராவ் பி. ஏ., பி. எல் அவர்களுடைய அக்கிராஸநத்தின் கீழ், பிரஹ்மஞான மஹாசபை ஒன்று கூடியது. மைஸூர் இராஜ்யத்தின் பற்பல பாகங்களினின்று பலர் சென்றிருந்தனர். உள்ளூர்க் கிளைச்சபைக் காரியதரிசியவர்கள் அயலூர்களி

லிருந்து வந்த எல்லோருக்கும் ஒரு உபசாரப் பத்திரம் வாசித்தார். அன்று சாயங்காலம் அக்கிராசனாதிபதியவர்கள் ஆங்கில பாஷையில் "தியாஸபியும் ஹிந்து மதமும்" என்ற விஷயத்தைப்பற்றிப் பேசினார்கள். மறுநாட் காலையில் அக்கிராசனாதிபதியவர்கள் "உதயதிசை நக்ஷத்திர ஸங்க"த்தைப் பற்றிப் பேசினார்கள் அன்றுசாயங்காலம் மைசூர் மகாராஜா காலேஜ் உபாத்தியாயர் ஸ்ரீமான் வெங்கடேசஐயர் அவர்கள் கன்னடபாஷையில் "எண்ணங்களின் சக்தி" என்னும் விஷயத்தை உபந்யஸித்தார். அக்ராஸனர் அவர்களின் முடிவுரை பஞ்சயக்ஞத்தைப் பற்றி நிகழ்ந்தது.

அ· ரங்கஸ்வாமி ஐயர்.

---

## நன்மொழி.

---

உடுத்த துகிலவிழ்த்து விரித்தொருதரை யிற்றனித்தே யுன்னுது முன்னியுளத்துறு கலக்கத்தோடே; படுத்தயர்ந்த சிறியேன்றனருகணைந்து மகனே பயமுனக் கென்னென் றென்னைப் பரிந்து திருக்கரத்தா, லடுத்தணைத்துக் கொண்டெடுத்துப் போய்ப் பிறிதோரிடத்தே யமர்த்தி நகைத்தருளிய வென்னாண்டவனே—யரசே, தொடுத்தணியென் மொழி மாலை யணிந்து கொண்டென்னுளத்தே சுத்த நடம்புரிகின்ற வித்தகசிகாமணியே.—திருஅருட்பா.

---

## குப்த வித்யை.

---

குப்த வித்யையை ஆங்கிலத்தில் ஆக்கல்டிஸம் என்று சொல்வதுண்டு. இந்த ஆக்கல்டிஸம் என்ற பதத்தின் தேர்ந்த பொருளை யறியாமல், பலர் பல பல விதமாக அர்த்தம் கொள்கின்றனர். இப்போதுங்கூடப் பலர் அதை மாந்திரிகமென்றும் அதன் மாணாக்கர்கள் அனைவரும் ஏவல், சூந்யங்களிற் பயில்கின்றவர்களென்றும், மயானம் போன்றவிடங்களில் சஞ்சரித்துப் பேய் பிசாசுகளை வசப்படுத்தி, கருவை ஸம்பாதிப்பவர்களென்றும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். படிப்பில்லாதவர்கள் தான் இவ்விதம் எண்ணுகிறார்கள் என்றாலோ, தற்காலக் கல்விப் பயிற்சியுடையவர்களுங்கூட குப்தவித்யை என்பது என்னவென்று வியக்தமாய் அறிந்திலர். அதன் பத அர்த்தத்தை விசாரிக்குமளவிலேயே, "ஸூக்ஷ்மமாய், மறைந்திருக்கும் விஷயங்களைத் தெளிவுறுத்தும் கல்விமுறை" என்று, படித்தவர் யாவரும் உணர்வர், ஆயினும் அநேகர், குப்த வித்யையினுள் அடங்கியுள்ள பரம ரஹஸ்யங்களை உணராது, ஸ்வப்நங்களைப் பற்றிய உண்மையையும், ஸாமர்த்யமாய்க் குறிசொல்வதையும், பேய் பிசாசு பிடித்தலையும், காய கற்பங்கள் தேடி, ரஸமணியைப் பெற்று, அதனால் ஜராமரணங்களை நீக்கிக் கொள்வதையும் அஸம்பாவிதமென மறுக்கிறார்கள். இவர்களைப் பார்க்கிலும் அறிந்தவர்களாகப் பாவனை செய்துகொள்ளும் வேறு சிலரோ, குப்தவித்யையானது வெகு ஜனங்களுக்குத் தெரியாமலிருப்பதின் காரணம், இதன் குருக்கள் பிறரிடம் கொண்ட

* இது ஸ்ரீமான் C. W. லெட்பீடரவர்களுடைய ஆங்கில கிரந்தம் ஒன்றினின்று எடுத்தெழுதப்பட்டது.

அசூயையால் சிஷ்ய பரம்பரையை ஒழித்துவிட்டார்களெனக்கொள்கிறார்கள். அவ்விதமின்றி, குப்தவித்யை எல்லோருக்கும் கற்றுக்கொடுக்கப்படவேண்டுமென்பது இவர்கள் கருத்து. ஆனால் உண்மையென்னவெனில், எவ்விஷயமும் நமக்கு மறைவாகவே இல்லை. நம்முடைய பார்வைக் குறைவே யொழிய, வேறு மறைவு என்பதே கிடையாது. நாம் பார்க்கலாகாதென, வேண்டுமென்றே மறைத்துவைப்பவர் ஒருவருமில்லை. ஒவ்வொருவரும் மேன்மேலும் பரிபக்குவமடைந்து, அவரவர் திருஷ்டியானது அதிகரிக்க அதிகரிக்க அவரவர் தொழிற்படும் உலகமும் அவரவர்க்கு அதிக விசாலமாகின்றது.

ஏனெனில் பக்குவமாக ஆக உலக வமைப்பின் அழகையும்பெருமையையும் அதிக விமரிசையாய் அறிய இயலுகின்றோமல்லவா?

ஸன்மார்க்க முறையிற் செல்லுகின்றவன் அவனது அபிவிருத்தி முறையில் அடையும் சிற்சில பக்குவ நிலைகளில் சிற்சில ஞான தீக்ஷைகளைப் பெறுவான். அதாவது, இதுவரை அறிந்திராத பல புதிய விஷயங்களைக் கற்றுக்கொள்ளத் தொடங்குவான். எவ்வளவு மட்டில் ஒருவன் அறிந்துகொள்ளும், தகைமையுடைய வனாயிருக்கிறானோ, அவ்வளவுமட்டில் அவனுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்டால் மட்டும், அவ்வுபதேசம் பிரயோஜனமுள்ளதாகும், இல்லாவிடில் பயனற்றதாகும். அஃதெப்படியெனில், பெருக்கல் வாய்ப்பாடுகூடத் தெரியாத சிறுபிள்ளைகளுக்கு, பி. ஏ. வகுப்பில் கற்றுக்கொடுக்கவேண்டிய கணிதத்தின் ஸூக்ஷமங்களை போதிக்க யத்தனிப்பது மதியீனமாகுமன்றோ. அவ்விதமே குப்தவித்யா ரஹஸ்யங்கள் மநுஷ்யவர்க்கத்தினரின் சாமான்யர்களுக்கு அறிவுக்கெட்டா விஷயங்களா



யுள்ளன. ஆகவே எச்சமயம் சிஷ்யனானவன் புதிய ஞான தீக்ஷையைப் பெறும் தகைமையுடையவனாகிறானோ, அத்தருணம் அவனுக்கு தீக்ஷை விதிக்கப்படும். இவ்வித உயர் ஞானத்தைப் பெற விரும்புவோர்கள், செய்யவேண்டியதென்னவெனில், தற்காலத்தில் தத்தம் பக்குவ நிலை எம்மட்டு என்பதைத் தெளிவாய் அறிந்து, அதற்கேற்றவாறு விவேகத்துடன் தத்தம் ஆசாரணைகளையும் அநுஷ்டானங்களையும் சீர்ப்படுத்திக் கொள்வதேயாகும்.

குப்தவித்யை என்பது பிரபஞ்ச நியதியிலுள்ள அதிஸூக்ஷ்மமான விசேஷங்களனைத்தையும் விவரிப்பதாகும். தற்காலத்திய பிரகிருதி சாஸ்திர வல்லுனர்கள் வரையறுத்திருப்பதோடுமட்டும் நில்லாமல், பிரபஞ்சநியதியின் விசேஷங்கள் முழுமையையும் ஸவிஸ்தாரமாக விளக்குவதுதான் குப்தவித்யையின் உயர்வு. விகாஸமுறையில் மநுஷ்யவர்க்கமானது தற்காலத்தில் நிற்கின்றபடியில், சாமான்யர்களான நம்போலியர்கள் பிரபஞ்சநியதியை யறியக்கூடியது மிகவற்பமேயாகின்றது. ஏனெனில் சாமானியர்களிடத்தில் ஆத்மசக்திகள் ஸம்பூர்ணமாய் விகஸிக்காமல், மிக ஏராளமாய் மறைந்துகிடக்கின்றன. வெகு சொற்பமான சக்திமட்டும் தான் தற்கால நிலையில், மனிதர்களிடத்து விகஸித்திருக்கின்றது. ஆகையால் ஸாமாந்யர்களுடைய, தத்துவ சாஸ்திரமெல்லாம், நிறைவற்ற அற்ப உண்மையையே தான் ஆதாரமாக உடையது, அவர்கள் நடபடிக்கைகளும், தத்தமக்குத் தெரிந்த மட்டில் உள்ள மிகச்சொற்பமான பிரபஞ்சநியதியின் உண்மைகளுக்கு முரண்படாமல் இருக்கக்கூடுமே ஒழிய, குறைவற்றனவாகா. ஆனால் குப்தவித்யையிற் பயிலுவோன எப்படியென்றால், பூர்ண திருஷ்டியுடன் தற்காலத்திய பௌதிக சாஸ்திரங்களைப்

போலல்லாமல், ஸூக்ஷ்ம லோகங்களினின்று பிரவகிக்கும் சக்தி விசேஷங்களையும் அறிந்து, அவற்றிற்கேற்பத் தன் சரியையைச் சீர்ப்படுத்திக் கொள்வான். பிரபஞ்சஸ்திதியின் சொற்பத்தையுங்கூட நன்குணராததால் உள்ள அரைகுறையான அறிவு போய், அதன் முழுமையையும் பற்றிய பூரண அறிவு ஏற்படுகின்றது.

குப்தவித்யையில் ஒரு சிறிதும் அறியாதவன் எவ்விதம் எல்லா வழிகளிலும் தான் மிகக் கட்டுண்டவனாயிருக்கிறான் என்பதையும், அதனால் எவ்விதம் நிர்ப்பந்தத்திற்கு உள்ளாயிருக்கிறான் என்பதையும், இலகுவாய் அறிகிறானில்லை. இதற்கோருதாரணம் எடுத்துக் கொள்வோம். பிரக்ஞா பூமிகளில் நம்மைக்காட்டிலும் குன்றிய பிரக்ஞையை உடையவர்களுக்கும் நமக்கும் எவ்வகைகளில் ஏற்றத்தாழ்ச்சிகள் உள்ளன என்பதைப் பரிசீலனை செய்வோம். மேற்கூறியபடி சிலருடைய பிரக்ஞாபூமியானது கனபதார்த்தங்களை மட்டும் அறிந்துகொள்ளும் இயல்பினதென்று வைத்துக்கொள்வோம். எப்படி மானஸிக லோகத்திலும் புவர்லோகத்திலும் உள்ள ரூபங்களும், ஸ்தூலலோகத்தில் பிராணமயமான திரவியத்தாலான ரூபங்களும் நமது பார்வைக்கு எட்டாதவைகளாயுள்ளனவோ, அப்படியே திரவ பதார்த்தங்களும், வாயு பதார்த்தங்களும், அவர்களுடைய பார்வைக்கு எட்டாதவைகளென்றும் வைத்துக்கொள்வோம். இப்போது அத்தகையர் நம் உலகத்தைப் பற்றிப் பூர்ணமாயறிதல் எவ்வளவு அஸாத்யம் என்பது நமக்குத் தெற்றெனப் புலப்படுகின்றதல்லவா? அவர்கள் பார்க்கக்கூடிய கனபதார்த்தங்கள் பலமாறுதல்களடைவதைமட்டும் கவனிப்பார்கள். ஆனால் அதன் காரணமின்னதென்றறியார்கள்.



எப்படியெனில், மழை பெய்யும்போதெல்லாம் பூமியானது ஈரித்து, கையில் சொற்ப மண்ணையெடுத்தால் மிகப் பளுவாய் உணரப்படும், முன்னைவிட அதிக மிருதுவாயுமிருக்கும், மேற்கூறியபடி, திரவ பதார்த்தங்களையும் வாயுபதார்த்தங்களையும் உணரக்கூடாதபடி கீழான பிரக்ஞாபூமிகளில் உள்ளவர்கட்கு, இன்னகாரணத்தால் மண் முன்னினும் கனமாயிருக்கிறதென்று தெரியவாராதல்லவா? மண் கனபதார்த்தமாகையால், அது முன்னினும் பளுவாயிருக்கிறதென்று மட்டும் அறிந்து கொள்வார்கள், திரவபதார்த்தத்தையுணர மாட்டார்களாகையால், மழை பெய்வதே அவர்கட்குத் தெரியாது, ஜலமே இன்னதென்றறியாதவர்கட்கு, ஜலம் கலந்திருப்பதனால் மண்ணிற்கு மிருதுத்தன்மையும் பளுவும் ஏற்பட்டிருக்கின்றனவென்பதும் தெரியவாராது. காற்றடித்து மண்ணைக் கிளப்பிவிடும்போது, மண் உயரக் கிளம்புவதை மட்டும் காணுவார்களேயொழிய வாயுவின் சலனத்தால் மண் கிளம்புகின்றது என்ற காரணத்தையறிய இயலார். இவ்விதம் கன பதார்த்தத்தைமட்டும் அறியக்கூடிய பிரக்ஞாபூமியில் உள்ளவர்கள், உலகத்தைப் பற்றிப் பூர்ணமாய் அறிவது, இயலாத காரியமென்று நாம் நன்கறிந்துகொண்டோம். நம்மைவிடப் பரிபக்குவமடைந்தவர்களுக்கும், நமக்கும், அவரவர்கள் பிரக்ஞா பூமியானது வேறுபடுகின்றதும், இதே விதியையநுசரித்துதான் என்று நாமறியற்பாலர். உதாரணமாயெடுத்துக்கொண்ட விஷயத்தை எவ்வளவு எளிதாய் அறிந்துகொண்டோமோ, அவ்வளவு இலேசாய், நம்மினும் பெரியார்களுடைய பிரக்ஞா பூமியை உத்தேசிக்க நம்முடையது எத்தனையோ மடங்கு குன்றியது என்னும் உண்மையை உணர்கிறோமில்லை.

பிரஹ்மக்ஞான தரிசநத்திற் பயிற்சியுடையவர்களுக்கு, எவ்விஷயத்திற்கும் ஸூக்ஷ்மமான பாகமொன்றிருக்கின்றது என்பது நன்ருய்த்தெரியும். நமது ஸ்தூலப்பார்வைக்குப் புலப்படுகின்றவைகளைக் காட்டினும், புலப்படாமல் மறைவாயிருந்து தொழிற் படுகின்ற பிரபஞ்ச நியதிகளுக்கு மிகப் பிரதானமாய்க் கட்டுப்படவேண்டிய தவசியம் என்பதையுமுணர்வர்.

நம்முடைய இந்த்ரியங்களின் வழியாகவே நாம் வெளிவிஷயங்களை அறிகிறோம். அவ்விந்திரியங்களின் பூர்ணசக்தியானது இன்னும் விகஸிக்காமல், அரைகுறையாகவே அவ்விந்திரியங்கள் விகஸித்திருக்கின்றன. ஆகையால் நம் அறிவும் அரைகுறையாகவே ஏற்படுகின்றது. நாம் பார்ப்பவைகளைக் காட்டினும், வேறு வஸ்துக்கள் உலகில் கிடையா என்று சொல்லமுடியாது. தன் இந்த்ரியங்கள் பூர்ணசக்தியுடன் தொழிற் படும்படி பயிலுவோன் எவனும், தான் அபிவிருத்திபெற்று வரவர, தன்னைச் சுற்றியுள்ள உலகம், முன்னினும் பன்மடங்கு பெரிதும், விசாலமுமாயிருக்கிறதென்றும், தன் வாழ்க்கைக்கொரு சேதமும் எப்போதும் சம்பவிக்காதென்றும், தன் வாழ்நாள் "நீக்கமற நிறைகின்ற பரிபூரணனந்தமே" யென்றும் நிதர்சனமாயறிந்து கொள்வான், ஏனெனில் பிரகிருதியின் அழகிலேயே விநோதிப்பவனும், ஸங்கீதப்ரியர்களும், கலாவிநோதங்களில் கூர்மையான நாட்ட முடையவர்களும், தத்தமக்குரிய துறையில் தம் இஷ்டப்படி சுகம் அநுபவிக்கத் தக்க ஒரு தனி உலகமே, நமக்கு அதிஸமீபமாயுள்ளது. அதில் பிரவேசிக்கத்தக்க யோக்யதையை மட்டும் முன்னுடியே பெறவேண்டும். எல்லோரினும் மேலாக,பரோபகாரப்ரவிர்த்தியில் உத்ஸாகங்கொண்டவனுக்கு அவ்வுலகத்தை



மற்றவர்களைவிட நன்ருய் அறியவும், அதனுல் முன்னினும் மேலானவிதமாய்ப் பலருக்கு பிரயோஜனகரமாயிருக்கவும் இயலும்.

நாம், தற்கால நிலையில் விகாஸமுறை யென்ற ஏணியில் பாதிதூரம்தான் வந்திருக்கிறோம். அதனுல் நமது புலன்களனைத்தும் அரைவாசியே மலர்ச்சி பெற்றிருக்கின்றன. இன்னும் விகாஸமுறை என்ற ஏணியில் ஏறிச்செல்லவேண்டிய பாதிதூரத்தையும் தீவ்ரமுயற்சியால்விரைவிற் கடக்கலாம். அதாவது, சாமாந்யர்கள் எல்லோரும் வெகு ஜன்மங்களுக்குப் பிறகு, எத்தகைய பரிபக்குவமுள்ள புலனறிவைப் பெற, இயலுமோ, அதை நாம் இப்போதே தீவ்ரமுயற்சியால் பெறலாம். இவ்விதம் பக்குவமடைந்தவர்களைத்தான் நாம், ரிஷிகளென்றும், தீர்க்க தரிசிகளென்றும் ஸூக்ஷ்மதரிசிகளென்றும் கூறுகிறோம்.

அத்தகையர் ஆங்கிலத்தில் க்ளேர்வாயண்ட்ஸ் என்று சொல்லப்பெறுவர். அதன்பொருள் "தெளிவாய்ப் பார்ப்பவர்" என்பதேயாம். நம் நாட்டில் நம்வீட்டுப் பெண்டிரும், மற்ற சாமான்யர்களும், ஒருபிடி அரிசிக்காக வீட்டு வாயிலில் கத்தும் குடுகுடுப்பையாண்டிகளை, குறி சொல்வதில் ஸமர்த்தர்களென்றும், அவர்கள் வாக்குப் பலிக்குமென்றும் நம்பி, முகஸ்துதிசெய்து காசு பறிக்கின்றவர்களின் வஞ்சனையிலகப்பட்டு, தமக்கநுகூலமாகச் சொல்லும் கோடாங்கிக் காரர்களுக்கு, வஸ்திரமோ, காசோ, அரிசியோ, அவர்களிஷ்டப்படி மனப்பூர்வமாய்க் கொடுத்துவிடுகிறார்களல்லவா? பிறரை ஏமாற்றுவதிலேயே பழகித் தேர்ந்த குடுகுடுப்பையர்களுக்கு, எதிராளிகளின் முகக்குறிப்பைக் கண்டே மனத்தில்இன்னதான் நினைக்கக்கூடும் என்று யூகிப்பது

ஒரு பெரிய காரியமல்ல. பதற்றமும் ஆதாரமுமே பிரதானமாயுள்ள ஸ்திரீபுத்தியை ஏமாற்றக் கேட்கவும் வேண்டுமா? இதைப்போலவே ஆங்கில நாட்டிலும் வேஷதாரிகள் உள்ளனர். இங்கே எவ்விதம் அறிவிலிகள் வேஷதாரிகளிடத்தில் மோசம் போகின்றனரோ, அப்படி அங்கும் மோசம் போகின்றவர்கள் அநேகர். நம் நாட்டுக் கடைகளில் ரேகை சாஸ்திரக்காரரும், தொடுகுறி சாஸ்திரக்காரரும் அதிருஷ்ட பலாபலன்களைக் குறிப்பிட்டு விடுவதாக ஏமாற்றுவதுபோலவே, இங்கிலாந்திலும் ஏமாற்றுகிறவர்கள் அநேகர் உளர். அந்தோ! எவ்வளவோ அரிய பிரயத்தினத்தின் மேல், மிகக்சிரமத்தின்பேரில் சித்திக்கக்கூடிய ஸூக்ஷ்ம திருஷ்டியை, இக்குடுகுடுப்பையர்கள் உடையார் என்று நம்மவர் நம்புவது அறியாமையாலல்லவோ!

இவையெல்லாம் வீண் புரட்டானவைகள். அநேகமாய், வேலைசெய்ய இஷ்டமில்லாத சோம்பேறிகளும், நயவஞ்சகர்களும் தான் இத்தகைய குறிசொல்லும்தொழிலைக் கைக்கொள்கின்றனர். வெகு அபூர்வமாய், சிற்சில கோடாங்கிகள், உண்மையாகவேயும் குறி சொல்கிறார்கள். ஒரு குறித்த கால அளவைக்குள் ஏற்படக்கூடிய வருங்கால ஸம்பவங்களை மட்டும் குறிசொல்லுதல் ஸாத்தியந்தான். அது செய்யக்கூடியது, எத்தனையோ தடவைகளில் செய்யப்பட்டு மிருக்கிறது. அக்ரமமான சூந்யக்காரர்களுக்கும் ஸூக்ஷ்ம திருஷ்டியானது சிற்சில சமயங்களில் பலிக்கின்றது. ஆனால் எப்போதும் அவர்களிடத்து இச்சக்தியானது விளங்காது, அவர்களுக்கு வேண்டும்போது, இச்சக்தியானது வித்திக்காமற் போனாலும் போகும்.

(இன்னும் வரும்.)

B. S. இராமசுப்பையர்.

---

## பரமர் வரும் வழியிற் பிரயத்தனங்கள்.

அதிக ஸமீபகாலத்தில் போதிஸத்வா வருவதற்குற்ற காரணங்கள் பல. அவர் வருவது நிச்சயம். அவருடைய எண்ணங்களைப் பூர்ணமாய் இவ்வுலகத்தில் நாம் நிறைவேற்றவேண்டுவ தவசியம். அவர் எண்ணங்களை நிறைவேற்றுவதற்கு, நாமேன் பிரயத்நம் செய்யவேண்டும்? என்று சிலர் கேட்கலாம். அவர் வந்தால் அவரே பேசிக்கொள்ளட்டுமே. அவர் வந்தால் உலக முழுவதும் எப்படி நம்பாமலிருக்கும்? அவர் ப்ரம புருஷராயிருந்தால் உலகம் அவரை எளிதில் அறிந்துகொள்ளாதா? நாம், அவர் வரப்போகின்றார் என்று, முந்தியே ஏன் இவ்வளவு கஷ்டப்பட்டுப் பிரஸித்தம் செய்யவேண்டும் என்று பலர் சொல்லக்கூடும்.

முதலில் பாலஸ்டைனில் ஜகத்குருவானவர் கிறீஸ்துவாகத் தோன்றினபொழுது, அவரை யெல்லோரும் துவேஷித்து, மூன்று வருஷங்களுக்குள் அப்பெரியாரை யூதர்கள் உயிரோடு சிலுவையிலறைந்து விட்டார்கள் என்ற விஷயம் சரித்திர ஆராய்ச்சி உடைய எவரும் அறிந்ததே. மறுபடியும் இப்பொழுது அவதரிக்கப்போகிற ஜகத்குருவும் அந்தப்படியே உயிர் துறக்கும்படியும், ஜனங்களும் பிரயோஜன மடையாதவர்களாகவும் ஏற்படலாகாதென்று நினைப்போமாயின், நாம் அவர் வரவை யெதிர்பார்த்துக்கொண்டு ஜனங்களுக்கும் அவர் வரப்போகிறாரென்ற சமாசாரத்தை முன் தூதர்களாக நின்று அறிவித்தல் வேண்டும். அவருடைய வேலைக்கு, ஏற்படக்கூடிய சிரமம், அதனால், சற்று குறையும். கிறிஸ்துவாக அவதரித்த, சமயம்போல, இச்

---

* மாதுஸ்ரீ அன்னிபெஸண்டு அம்மையாரவர்களின் பிரஸங்கத்தினின்று எடுத்தெழுதப்பட்டது.

சமயமும் துன்பப்பட வேண்டிவராதல்லவா? அவரே முன் கௌதம புத்தராக அவதரித்த மற்றொரு சமயம், அவ்வளவு கஷ்டப்படவில்லை யென்பதையும் யாவருமறிவர். கௌதமபுத்தர் வந்தபோது குழப்பம் வெகுவாயில்லை, ஏனெனில் ஜனங்கள் ஒருவாறு அவர் வரவை எதிர்பார்த்தவர்களாகவே இருந்தார்கள், அதனால் அவரை அநேகர் நன்கு மதித்து, அன்புடன் ஆதரித்தனர். தற்காலத்தியரோ, அவ்வித அன்பினால் இரக்கமுடையவரை தைர்ய மற்றவர்களெனக் கூறுகிறார்கள்! புத்தருடைய உபதேச மொழிகளையும் இலேசாய் ஏற்றுக்கொள்ளாத பலரும் அக்காலத்திலிருந்தனர். ஆயினும் அவர் 40 வருஷகாலம் இப்புவியிலிருந்து பிறகே இவ்வுலகை நீத்தனர்.

அவருக்குப் பிறகு கிறிஸ்து வந்தபொழுது, அவரை ஜனங்கள் இடையறாத வெறுப்போடு துவேஷித்து, அவரை எப்படியாவது கொன்று விடவேண்டுமென்றும் நினைத்துச் சிலுவையிலறைந்ததனால், அவர் சீக்கிரம் இவ்வுலகத்தினின்று மறையவேண்டி வந்தது. அவரும் தாம் வந்த காரியம் முடிந்ததென்று நினைத்தவுடன் தம்மிருப் பிடத்திற்கேகினார். அவர் எடுத்துக்கொண்ட சரீரத்திற்கு மட்டும் அழிவு ஏற்பட்டதேயொழிய, ஆத்மாவுக்கு ஒருநாளும் மரணமே கிடையாது என்னும் உண்மையை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியதவசியம்.

மறுபடியும் ஜகத்குரு உலகத்தில் ஜனங்களுக்கு முன்போலவே நல்ல உபதேசங்கள் செய்யக் காத்துக்கொண்டிருக்கிறார். ஸதாஸர்வ காலமும் பனியால் மூடப்பட்ட உயர்ந்த ஹிமாலய பர்வதங்களின் தாழ்வரைகளில்வசித்துக் கொண்டு விசாலமான இந்தியதேசத்துப் பள்ளத்தாக்குகளை வெகு அன்போடும் கண்ணுற்றவராய் எப்போது இந்



துதேசத்தில் நாம் அவதரிப்போம், எப்போது அதற்கேற்ற காலம் வரும் என்ற எண்ணம் கொண்டவராய் எப்போதும் தியானித்துக் கொண்டிருக்கின்றனரன்றோ!

நாநாவித ஜாதியார்களுக்குள்ளும் நாநாவித தேசங்களிலும் பரமருடைய திருவரவைப் பிரஸித்தப் படுத்தி, அவரை அன்புடன் ஆதரித்து வரவேற்கத் தக்க பலரை, ஒருங்கே சேர்த்து ஒத்துஉழைக்கும்படி செய்வதற்கே நம் உதயதிசை நக்ஷத்ரஸங்கம் வேலைசெய்து வருகின்றது! ஆதலால், இக்காலத்தில், கிறிஸ்துவின் அவதாரத்திற்போல, நம் மஹானின் சரீரத்திற்கு ஹானி ஏற்படுதல் இயலாது. அவர் இனி வருங்காலத்தில் எத்தேசம் சென்றாலும், அங்கும் அவரை ஆதரிக்கக்கூடிய சிலராவது ஏற்பட்டிருப்பரன்றோ! அவர் அவதாரமஹிமையையும், அவருடைய அவதாரத்தின் உயர் நோக்கத்தையும் அறியக்கூடியவர்கள் சிலராவது ஏற்படுவரன்றோ! அவர் மஹா கருணாமூர்த்தியாகவும், ஞானமூர்த்தியாகவும் இருப்பதனால் மட்டும் வெளியுலகத்தார், அவரைப் பரமாசார்யரென்று அறிந்துகொள்ளல் இயலும். ஆயினும், ஏற்கனவே அவருடைய கைங்கர்யத்திற்கென்று தம்மைத் தியாகஞ் செய்துகொண்டு, திடமாய் விரதங்கொண்ட சிலருக்கு மாத்திரம், ஞான அநுக்ரஹத்தால் வழிநடத்தும் அப்பரமர் இப்போதே பிரத்யக்ஷமாயிக்கிறார். அவர்கள் தான் அவரைப் பற்றிப் பிறருக்கெடுத்துச் சொல்லிப், பிறரையும் அவரிடத்துச் சேர்ப்பிக்க இயலுவார். நம் பரமாசாரியர் கிறிஸ்துவாக அவதரித்த காலத்திலும் மிகச்சொற்பம் பேர்கள்தான் அவரை உண்மையிலறிந்து கொண்டவர்கள், அப்போது அவர்கட்கு நம் மஹான் சொல்லியதென்னவெனில்:-“நான்தான் கிறிஸ்து என்று ஒருவருக்கும் சொல்லாதே” என்றதேயாம், அம்

மட்டில், இந்த புருஷன்தான் கிறிஸ்து என்பது அக்காலத்திலேயே பஹிரங்கப் படுத்தப்படவில்லை. ஆனால், அவருடைய பிரவசனங்களாலேயே அவர் தான் பரமபுருஷன் என்று, பிறர் அவரை அறிந்துகொண்டார்கள். முதன்மையில் உங்கள் ஹிருதயங்களில் அவர் தங்கியிருக்கும்படி செய்துகொள்ளுங்கள், பிறகு லோகத்தில் என்ன ரூபத்தோடு தோன்றுவார் என்பதை நிச்சயிக்க இயலுவீர்கள்.

ஆகவே அவர் வருமுன் நாம் செய்யவேண்டிய பிரயத்னங்கள் இருவகைப்படும். முதலில் நம்மையேசீர்திருத்திக்கொண்டு சித்தசுத்தி பெறவேண்டும். அதாவது, பக்தியினாலும், எங்கெங்கு உபகாரிகள் தேவையோ, அங்கங்கு போய் நம்மாலியன்றவுதவியைச் செய்வதனாலும், சுயநயமான ஆசைகளைத் துறத்தலினாலும் அது இயலும். இது முதலிற் செய்துமுடிக்கவேண்டிய பெரியபிரயத்னம். பிறகு நம் சீலத்தில் பக்தியென்னும் குணத்தை மேன்மேலும் கொஞ்சங் கொஞ்சமாய் வளர்க்கக் கடவோம். உன் ஹிருதயத்தில் மநஎழுச்சி எச்சமயம் உண்டாகின்றதோ, அச்சமயமே நீ உணருகிற பக்தியானது கொஞ்சமும் தடையின்றி உலகமுழுமையும் வியாபித்து வெளியுலாவட்டும். அப்பக்தி வெள்ளமானது பூர்ணமாகவும் தங்கு தடையின்றியும் பிரவகிக்கட்டும். அதனால் சேதம் ஒருபோதும் ஏற்படாது. நன்மையே எப்போதும் விளையும். மஹிமையையும் பெருமையையும் எங்கெங்கு பார்ப்பாயோ, அங்கெல்லாம் நீ கௌரவம் பாராட்டக் கடவாய்: இவ்விதம் பழகுவாயானால் பரமாசாரியரை அவா அவதரிக்கும்போது இலகுவாய்த் தெரிந்துகொள்ளலாம்.

இனிப் பரமர் வருந்தருணத்தை, வெளியுலகத்தாரும் எம்முடன் ஒருமித்து, எதிர்பார்க்கும்படி, நாம் எவ்விதம்



முயற்சிக்க வேண்டியவர்கள் என்பதைச் சிந்திப்போம். துவேஷபுத்தியுடன் அநாதரவு செய்யக்கூடியவர்கள் என்று தெரியுமானால்,' நம் நற்செய்தியை வீணாய் அவர்களிடம் சொல்வதின் மூலம் அதிக துவேஷத்தை விருத்திசெய்ய வேண்டாம் நீங்கள் ஒவ்வொருவரும் உங்களுக்குரிய ஸ்நேகிதர்களிடத்துமட்டும் திருவரவின் செய்தியைப் பிரசித்தப்படுத்துங்கள். உங்கள் ஸ்நேகிதர்களின் ஜாதி மதங்களுக்கு ஒத்தபடி, நீங்கள் அவர்கட்குச் சொல்லும் விதமும் வேறுபடும். இதில் நீங்கள் கொஞ்சம் விவேகத்துடன் உழைக்கவேண்டும். ஹிந்துக்களுக்கு நீங்கள் இச்செய்தியைச் சொல்வதாயிருந்தால், "தர்மம் குன்றி, அகர்மம் ஓங்கவே, யான் சீர்திருத்துவதற்கு அவதரிக்கிறேன்." என்று கீதையிற் சொல்லப்பட்டிருக்கிறதை யெடுத்துக் காட்டியும், அதற்கேற்ப ஸன்மார்க்கமுறையே தற்காலத்தில் முற்றிலும் க்ஷீணித்து இருப்பதை அவர்களுக்கு விளக்கியும் அதனால் தற்காலத்தில் ஒரு மஹானுடைய வரவு தேவையென்றும், இவ்விஷயமாக இன்னும் பல சாஸ்திர ஆதாரங்களுடன் போதியுங்கள். கிறிஸ்தவ தேசங்களிலும், அவர்கட்குரிய வேதங்களிலுள்ள ஆதாரங்களோடு, நாம் எடுத்துரைக்கவேண்டும். நம் ஸங்கத்தில் சோத பல கிறிஸ்தவர்களும் ஏற்கனவே, கிறிஸ்து இரண்டாவது தரம் தோன்றப்போவதாக அபிப்ராயப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சொற்பகாலத்திற்கு முன் இறந்துபோன, கிறிஸ்தவ போதகர் ஒருவரின், மனைவியார் தாம் கண்ட தரிசனத்தால் கிறிஸ்து என்பவர் கூடிய சீக்கிரம் வரப்போகிறார் என்று, அம்மத அதிகாரிகளுக்கு அறிவித்து, உடனே அச்செய்தியை எல்லோருக்கும் தெரிவிக்கும்படிக்கும் கேட்டுக் கொண்டனர். அத்தகைய கிறிஸ்தவர்கள் அநேகர் இப்போது உதயதிசை நக்ஷத்திர ஸங்கத்தில் சேருகின்றனர்.

ஆகையால் இவ்வொரே உண்மையைப் பற்பல விதமாய் வெவ்வேறு ஸ்வபாவஸ்தர்களுக்கு எவரெவர்களுக்கு எந்தெந்த வழியில் ருசியுள்ளதோ, அந்தந்தவழியாய் அவரவர்களுக் கூட்டவேண்டும். அப்போதுதான் உங்களுடைய பிரயத்நமானது நன்றாய் சித்திபெறும். பிறரை நல்வழிப் படுத்துவதில் முயலவேண்டியவர்கள் நீங்களேயாதலால், எளிதாகவும், மிகப் பிரயோஜனகரமாகவும் எவ்வெவ்வழிகளால் முயற்சிக்கலாம் என்பதை நீங்களே நன்கு தீர்மானிக்கக் கடவீர்கள். இவ்விதம் செய்வீர்களாகில் அவர் திடீரென்று தோன்றாமல், ஜனங்கள் முன்னடியே அவர் வரவை எதிர்பார்த்து அவரை வரவேற்கத் தயாராயிருக்கும் சமயத்தில் அவதாரம் நிகழ்வதாகவும் முடியும். ஏனெனில், இந்த ஸ்தூல உலகில் பலர் லோககுருவை எதிர் பார்க்கின்றார் எனின், ஏற்கனவே ஸூக்ஷ்மலோகத்தில் ஸம்பவித்தாய்விட்டதென்பதும், அதன் பிரதிபிம்பமே ஸ்தூல உலகில் தோன்றி அவர் எதிர் பார்க்கப்படுகின்றார் என்பதும் மறத்தற்பாற்றன்று.

இவைதான் நீங்கள் செய்யவேண்டிய அவசியமான பிரயத்நங்கள். உங்களுக்குள்ளேயும், உங்களுக்குப் புறம்பாகவும், நீங்கள் ஆயத்தம் செய்தல்வேண்டும். மேற்கூறிய வழிகளில் நீங்கள் அன்போடும், அறிவோடும் பிரவிர்த்திப்பதுடன், பிரபுவின் வருகையை எதிர்பார்க்கிறீர்கள் என்று சொல்லிக்கொள்ள வெட்கப்படாதீர்கள்.

R. சேஷாசாரியர்.

---

## ஓர் கடிதம்.

---

ஆரியர்களே!

நமது மகிமைதங்கிய இப்பாரதகண்டம் ஆசந்திரார்க்கபர்யந்தம் செழித்தோங்கி வளர்வதற்குக் கருணைகொண்டிருக்கும் மஹாபுருஷரின் உத்தரவின் பிரகாரம் பிரசுரப்படுத்தும் பாலனாகிய என் வார்த்தைகளைக் கவனித்து குணகிராஹிகளாயிருக்கிற தாங்கள் நான் எழுதும் வாக்யங்களில் சொல்நயம் முதலிய அலங்காரங்களில்லையென்றும், ஏதோ பைத்தியம் பிடித்துப் பிதற்றுகிறான் என்றும், அனாதரவு செய்யாமல், மஹானின் உத்தரவைத்தெரியப்படுத்துகிறான் என்று எண்ணி லோகாபிவிருத்தியில் எப்போதும் கவலைகொண்டிருக்கும் சாதுஜனங்களுக்கு விநயபூர்வமாய்த் தெரியப்படுத்துகிறேன்.

என் பந்துக்களுடன் ராமேசுவரம் போயிருந்தகாலத்தில் சென்ற ஆனந்த௵ தை௴ 12௳ கார்த்திகை அன்றையதினமும் அவ்விடமே யிருந்தேன். சுவாமி தர்சனம் செய்ய தனிமையாய் ராத்திரி 8மணி சுமாருக்குச் சென்று பகவத்தர்சனம் செய்து திரும்பி பெரிய நந்தியின் சமீபம் வரவும், திடீரென என்பார்வைக்கும் மனதிற்கும் பீதியான ஒரு தோற்றம் காணப்பட்டது. அப்பால் ஒரு விநாடியில் ஆச்சர்யமான காந்தியுடன்கூடிய ஒருமஹான் நிற்கக்கண்டேன். இன்னது என்று புலப்படாமல் பீதியுடனும் ஆச்சர்யத்துடனும் இருக்கும் என்னைப் பார்த்து கருணையான பார்வையுடன் பின்வருமாறு பகர்ந்தார்.

இப்பாரத கண்டத்தில் ஒவ்வொருவரும் ஸ்வதர்மாநுஷ்டானத்தைவிட்டு நழுவித் தாங்கள் கெட்டதுமன்றி மிகப்பரிசுத்தமான பிரதேசங்களையுடைய இப்பாரத பூமியையும் அசுசியானதாய்ச் செய்துவிட்டார்கள். அனா

விஷயம் சீர்ப்படுத்த கல்யப்தம் 5045 வாக்கில் அவதாரம் செய்யவேண்டியிருப்பதால், அதற்குமுன் பிரதேசங்களை பரிசுத்தமாக்க பின்வரும் கட்டளையை லோகோபகாரார்த்தமாய் உன்னால் தெரியப்படுத்த வேண்டியிருப்பது அவசியம் என்றறியவும் என மொழிந்தார்.

அதற்கு நான் அம்மஹானை நமஸ்கரித்து ஸ்வாமிந்! தற்காலமுள்ள நிலைமையில் லோகத்திலுள்ள சிலர் என்னை ஏதோ அறிவீனமாய் உளருகிறான் என்று மிகப்பரிகசிப்பார்கள். தவிரவும் வித்யா விஷயத்திலாவது மற்ற லோகோபகாரமான காரியங்களை நிர்வகிக்கத்தக்க புத்திசாலியாகவாவது ஏராளமான திரவியவானாகவாவது அனுஷ்டானாதிகளிலாவது ஒரு விதத்திலாவது யோக்யதை யல்லாத அற்பனான என்னிடம் உத்தரவு செய்வதைப் பார்க்கிலும், அவைகளை நிர்வகிக்கக்கூடிய பெரியோர்களிடமாவது ராஜாதிராஜாக்களிடமாவது உத்தரவாதகவேண்டுமென்று பயத்துடன் வணக்கமாய் அறிவித்தபொழுது, புன்சிரிப்புடன் அந்தக்கவலை நீ கொள்ளாமல் என் உத்திரவை மறுக்காமல் சொன்னபடி உன்னால் கூடுமானவரை பிரயாசப்படுவதில் பின்வாங்காதே, இதுவே உன் கடமை என்றார்.

அதாவது (தர்ம அரசாங்கமான ஆங்கில அரசாட்சிக்குட்பட்ட நமது) இந்தியாவின் வடகிழக்கு பாகத்தில் கங்காநதி தீரத்திலும் தென்கிழக்கு பாகத்தில் காவேரி நதி தீரத்திலும் தென்மேற்கு பாகத்தில் கேரள ராஜ்யத்திலும் வடமேற்கு பாகத்தில் சிந்துநதி தீரத்திலும் மத்யபாகத்தில் நர்மதா தீரத்திலும் ஆக இவ்வைந்து பிரதேசங்களிலும் செழிப்பான ஒவ்வொரு இடத்தில் மாத்திரம் விதிப்படி பஞ்சாயதனஸ்தாபம் செய்து பிராஹ்மணோத்தமர்களால் வேதோக்தமான வைபவத்துடனும் சந்தர்ப்பணைகளுடனும் நாமசங்கீர்த்தனாதி பஜனைகளுடனும் ஆராதிப்பதும் தவிர,



தர்சனார்த்தம் வரும் பக்தர்களுக்கு சகல சௌகரியங்களுடன் தர்சனம் செய்து வைக்கவேண்டுமென்றும், இப்படி நடத்தப்பட்டால் அவதரிக்க பிரதேசங்கள் பரிசுத்தமடைவதும் தவிர இவ்வுலகமானது செழிப்படைவதோடு வியாதி முதலியவைகளால் ஏற்படக்கூடிய சகல கஷ்டங்களினின்றும் விடுபட்டு மேன்மையடையும் என்றுமாக் ஞாபித்தார்.

அது முதல் பலவிதத்திலும் ஆலோசித்துக்கொண்டிருக்கும்போது அதே சுந்தரபுருஷன் சென்ற மஹாசிவராத்திரி யன்றையதினமும் இரவு $3\frac{1}{2}$ மணி சுமாருக்கு கனவு என்று நிச்சயமாய் சொல்லக்கூடாதநிலைமையில் ஹூம்கார சப்தத்துடன் என்னுக்ஞையை முடிக்க வேண்டுமென்றும், இல்லாவிடில் உலகம் கெட்டுப் போவதற்கு நீயே காரணமாவாயென்றும் சொல்லி மறைந்தார்.

சகோதரர்களே! இந்த உத்தமமான காரியம்போல், எவ்வளவோ காரியங்கள், எத்தனையோ சாதுக்களுக்கு. உத்தரவாய் அந்தப் பிரகாரம் நடத்தப்பட்டு, அந்தந்தக் காலங்களில் எவ்விதம் நம்முன்னோர்கள், க்ஷேமலாபங்களை அடைந்தார்களோ அவ்விதமாகவே லோகாபிவிருத்திக்கு ஹேதுவான இச்சிரேஷ்டமான காரியமும் இரண்டு மூன்று வருஷங்களுள் முடிவுபெற்று நம் ஆர்ய சகோதரர்கள் அனைவரும் இஹத்தில் அதிவைபவத்தையும் பரத்தில் முக்தியையு மடைவார்கள் என்பது திண்ணம். அப்படிக் கல்லாமல் மஹானின் உத்தரவுப்படி என்னால் தெரியப்படுத்தப்பட்ட வார்த்தைகளில் சந்தேகப்பட்டு அவரவர்களின் ஐஹிகாமுஷ்மிக பலன்களை இழக்காமலிருக்கும்படி விநயத்துடன் பிரார்த்திக்கிறேன்.

ஆகையால் ஆர்ய மதாபிமானிகளான சகோதரர்களே! அப்பேர்ப்பட்ட காரியத்தை ஆங்காங்குள்ள ஸ்ரீமான்களும் வித்வான்களும் பக்திமான்களும் ஒன்றுகூடி கருணாநிதியின் சர்வோபகாரமான ஆக்ஞையை நிறைவேற்ற வேண்டுமென்றும் உதாசீனமாயிருக்க வேண்டாமென்றும் பாலனாகிய நான் விநயத்துடன் மன்றாடிக்கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஓம் தத் ஸத்.

தக்ஷிணாமூர்த்தி சாஸ்திரி

(மேல்மங்கலம்.)

---

## நன்மொழி.

---

நானுரைக்கும் வார்த்தையெலாம் நாயகன்றன் வார்த்தை நம்புமினோ நமரங்காணற்றருணமிதுவே, வானுரைத்த மணிமன்றில் நடம்புரி யெம்பெருமான் வரவெதிர் கொண்டவனருளால் வரங்களெல்லாம் பெறவே, தேனுரைத்த முளமினிக்க வெழுகின்றே னீவிர்தெரிந் தடைந்தென்னுட னெழுமின் சித்திபெறலாகும், ஏனுரைத்தே னிரக்கத்தா லெடுத்துரைத்தேன் கண்டீர்யா னடையுஞ் சுகத்தினைநீர் தானடைதல் குறித்தே.

திருவருட்பா.

---

## சுதேச ஊழியர்களின் சங்கம்.

---

இந்தச் சங்கமானது:—உலகத்தில் மானிட ஜன்மம் எடுத்த ஒவ்வொருவரும் தான்பிறந்த ஜனனபூமியின் க்ஷேமத்தைக் கருதித் தம்மாலியன்ற உதவிகளைச் செய்ய கடமைப் பட்டிருக்கிறார்கள் என்பதை எல்லோருக்கும் எடுத்துச் சொல்லுவதற்கும், அவ்விஷயத்தைத் தெரிந்து கொண்டவர்களை சுதேச கைங்கர்யத்தில் உழைந்துப் பேரும் புகழும் பெற்றுப் பிரபலமடையச் செய்வதற்கும் இவை காரணமாக நம் தாய்நாடு எவ்விதத்திலும் செழித்து க்ஷேமத்தை யடைவதற்குமாகவே ஈசுவரகிருபையை முன்னிட்டு ஸ்தாபிக்கப் பெற்றதாகும்.

இந்த சங்கத்தின் அங்கத்தினராகச் சேருதற்கு உரியவர்கள் தாங்கள் நாள்தோறும் செய்யும் நற்செய்கைகளாலே, அன்னியர்களையும் சுதேச க்ஷேம அபிவிருத்திக்கு ஏற்பத் தம் கடமைகளை உற்சாகத்தோடும் செய்யும்படிக்குத் தூண்டுதல் செய்பவர்களாயும், தங்களுக்குள் பலவிதமான ஜாதி, மத பேதங்கள் இருந்தாலும், அவற்றைப் பாராட்டி ஒருவரை ஒருவர் பிரியாது, அவரவர்கொண்ட கொள்கைகளுக்கு விரோத மில்லாமலே, நாம் எல்லாரும் இந்திய மாதாவாகிய ஒரு தாய் வயிற்றிற் பிறந்தவர்கள், என்று எண்ணி நம் தாய்க்குச் செய்யவேண்டிய கடமைகளை எந்த வகுப்பினராக விருந்தாலும் மனவொற்றுமையுடன் செய்துமுடிக்கும் ஸ்வபாவமுள்ளவர்களாயும், இருத்தல் வேண்டும்.

இவ்வித அங்கத்தினர் அனைவரும் ஒன்று சேர்ந்து இந்தியாவின் பொது க்ஷேமத்தையே முன்னோக்கமாகக் கொண்டு, படிப்பறியாத சாமானிய ஜனங்களுக்கும் இவ்

வுண்மையைத் தெரிவித்து, ஜனசமூக ஒற்றுமைக்கு விரோதமான பலவித காரணங்களையும் ஒழித்து ஒற்றுமையை விருத்திசெய்து வரவேண்டும்.

### இந்நோக்கங்களை நிறைவேற்றுதற்குரிய வழிகள்.

இந்தியன் நாஷனல் காங்கிரஸ் மஹா சபையானது சென்ற டிசம்பர்மீ கூடியபொழுது சுதேசாபிமான சீலர்களாகிய சில மேதாவிகள் இந்த மஹாசபையின் நோக்கங்களெல்லாம் இப்பொழுதைப்போல ஆங்கிலங்கற்ற சிலருக்குமட்டும் தெரிந்ததாக இருக்காமல், இனிமேல் சாமானிய ஜனங்களும் தெரிந்துகொள்ளும்படி ஏற்பாடுகள் செய்யப்படவேண்டுமென்றும், அவ்வாறு தெரிந்துகொண்ட சாமானியர்களோடும் கலந்துகொண்டு படித்த வகுப்பினர்கள் கிராமங்களிலும் பொதுஜன சபைகள் ஏற்படுத்தி ஸ்வதேசத்திற்குச் செய்யவேண்டிய நன்மைகளைக் காலதேசங்களுக்கேற்பத் தீர்மானிக்க வேண்டுமென்றும், அங்ஙனம் கிராம சபைகளிலும் தீர்மானிக்கப்பட்ட தீர்மானங்களை காங்கிரஸ் மஹாசபையார் ஏற்றுக்கொண்டு அக்கிராம நகரவாசிகளையும் காங்கிரஸ் மஹாசபையில் அபிப்ராயம் கொடுக்கும் பாத்தியதையுடையவர்களாக்க வேண்டுமென்றும் இவ்வேற்பாடுகள் அடுத்த காங்கிரஸ் மஹாசபை நடைபெறுவதற்குள் செய்யப்பட வேண்டுமென்றும், அபிப்பிராயம் கொடுத்திருக்கிறார்கள்.

அவ்வபிப் பிராயத்திற்கிணங்கப் பிரவிர்த்திப்பதே நம் சங்கத்தின் கடமையாகும்.

இம்முறையில் முயலவேண்டிய முயற்சிகளுள் முதன்மையானது.



1. வாரம் ஒருமுறை ஞாயிற்றுக்கிழமைகளில் அயலூர்களுக்குச் சென்று ஜனசமூக ஒற்றுமை, கல்வியின், ஆவசியகம், ஜனங்களின் சுகாதார விளக்கம், தாங்கள் செய்யும் காரியங்களை, குறித்த காலத்தில் செய்தல், வருவாய்க்குத்தக்கசெலவு, கோர்ட்டு விவகாரங்களை விலக்குதல், ஒருவருக்கொருவர் உபகாரியாயிருத்தல், விவசாயத்தின் அபிவிருத்தி, கிராமப் பஞ்சாயத்தின் ஆவசியகம், முதலிய விஷயங்களைப் போதிப்பதோடும்,

2. இவைகளுக்குச் சாதகமாக நிழற் படக்காட்சிகளோடு கூடிய பிரசங்கங்களும், துண்டுப் பத்திரிகை அச்சிட்டு எல்லோருக்கும் இனாமாகக் கொடுத்தலும், தனித்தனி உபந்யாஸங்களும் செய்யவேண்டும்.

இச்சங்கத்தார் அப்போதைக்கப்போது செய்துவரும் காரியங்களைப் பிரசுரப்படுத்துவதற்கும், மேற் செய்கைகளில் நடைபெறும் அறிஞர்களின் உபன்யாசங்களை வெளியிடுவதற்கும் உபகாரஞ்செய்ய இப்பொழுது நடைபெற்று வரும் ஒரு தமிழ்ப் பத்திரிகை சித்தமாய்க்காத்துக்கொண்டிருக்கிறது.

நாம் மேலே விரும்பிய (மாஜிக்லாண்டனும்) புகைப்படமும் இச்சங்கத்தார் வசமிருக்கிறது.

இச்செய்கைகளுக்கு ஆரம்பமாக இச்சங்கத்தினருள் ஒருவர் பூர்ணசந்திரோதயத்திற்கு அரிய வியாஸங்கள் எழுதிக்கொண்டும் மற்றொருவர் ஞாயிற்றுக்கிழமை தோறும் சிறுவர்களுக்குநற்போதனைகள்செய்துகொண்டும் வருகிறார்கள். இன்னொருவர் நிழற்படக்காட்சியின் மூலமாய்ப்படிப்பித்து வருகிறார்.

இக்காரியத்திற்குப் பொதுவாக இந்தியர்களுடைய அபிமானமும் அதிலும் இதுபொழுது மதுரை ஜில்லாவாசி

களுடைய சகாயமும் வேண்டப்படுவதோடு அவர்கள் திரவியத்தாலோ, கல்வியாலோ, செல்வாக்காலோ, மற்று எவ்விதத்தாலும் செய்யும் உபகாரங்களும் விரும்பத்தக்கனவாகும்.

இதிற்சேர விரும்புவோர், அடியிற்கண்ட விதமாக மனுசெய்து கொள்ளவேண்டும்.

இச்சங்கத்திற்கு மாதச்சந்தா செலுத்தவேண்டிய கட்டாயமில்லை. ஆனால் பிரதிமாதமும் ஸ்வதேசத்தின் பொது க்ஷேம அபிவிருத்திக்குரிய கைங்கர்யங்களைச் செய்து தீரவேண்டும். அவரவர் தத்தம் தகைமைக்குத்தக்க பிரவிர்த்திகளைக் கொள்ளலாம்.

அப்பிரவர்த்திகளை எமக்கு இன்ன என்று தெரிவித்தல் வேண்டும்.

“நம்தாய் நாட்டின் கௌரவத்திற்குக் குறைவான எக்கார்யத்தையும் விலக்கி, நம்முடைய இந்தியஜன சமூகம் ஒற்றுமையடைதற் கேதுவான நற்காரியங்களை நாடுவேன்” என்ற உறுதிமொழியுடன் விண்ணப்பம் செய்ய வேண்டும். பதினெட்டுவயதுக்கு மேற்பட்டவர்களே இதில் மெம்பராகலாம். பெயர், வயது, விலாசம் இவைகள் குறிப்பிடவேண்டும்.

B. S. இராமசுப்பையர்.
பிரஹ்மக்ஞான மந்திரம்,
மதுரை.

## நன் மொழி.

இப்பிறவியில் நீதிநெறியிற் சென்று ஸந்தோஷமாயுள்ளவன், அவனுடைய அடுத்த ஜன்மத்தில் இன்னும் அதிக ஸந்தோஷமுள்ளவனாவான் என்பது நிச்சயம்.

# ஹிந்துக்களின் தத்வ சாஸ்த்ரம்.




## பகவத் கீதை

இந்த நிலைமையில் பகவத் கீதையெனும் உலகப்ரஸித்தமான நூல் இயற்றப்பட்டது.

ஹிந்துக்களின் தத்வ சாஸ்த்ரங்களில் பகவத்கீதையின் அமைப்பு இன்னதென்று மேற் கூறிய விவரசக்ரத்தாலும் பின் கூறப்படும் விவரங்களாலும் எளிதில் அறியலாம்.

பகவத் கீதையில் வேதப்ரமாணம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. உதாரணம்:—

𑌯𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑌃 ।
𑌨 𑌸 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌨 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

(பகவத்கீதை அத் 16 சு. 23, 24.)

சாஸ்த்ரவிதிகளையனுசரியாமல் இஷ்டப்படி எவன் நடக்கின்றானோ அவன் தன் உத்தேசமாவது, சுகமாவது, பரகதியாவது அடையமாட்டான்.

ஆகலால், செய்யவேண்டியவை இன்னவை, செய்யத் தகாதவை இன்னவை, யென்று பகுத்தறியும் விஷயத்தில் சாஸ்த்ரமே ப்ரமாணம். ஆகையால் சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்டவைகளை யறிந்து இவ்வுலகில் ஒவ்வொரு கர்மத்தையும் செய்வாயாக!

ஆனால் கர்ம மார்க்கத்தைப் போதிக்கும்பொழுது, அக்கர்மங்கள் செய்யப்படவும் வேண்டும். பலனை அபேக்ஷியாமல் செய்யப்படவும் வேண்டும்.

கஊுணெ்ுவாயிகாரஸெ்து ஊஷெஷு-ு கஜாவஞ |
ஊ கஊுஷஹெஹதூஹுஞஊுாெதஸஂெறாஸுகஊுணி|

பகவத்கீதை.

"கர்மம் செய்வதற்கு மாத்திரம் உனக்கு அதிகாரமே யொழிய பலாபேக்ஷையில் உனக்கு அதிகாரமல்ல. ஆதலால் பலாபேக்ஷயுடன் கர்மத்தைச் செய்யாதே. கர்மத்தைச் செய்யாமலும் விடாதே''

செய்யும் கர்மங்களைப் பரமாத்மாவுக்கு அர்ப்பித்துச் செய்யவேண்டுமேயொழிய சாதாரண காம்யதேவதைகளையும் ஸ்வர்க்காதி அநித்ய பலன்களையும் உத்தேசித்தும் செய்யலாகாது.

யொ஗ஸூஃ கூுரூ கஊுாணி ஸஂ஗ஂ தூகூா யநஂஜய|
ஸிஜுஸிஜுாஃஸொஹஞகூாஸஊகூஂயொ஗உசுெத|

யோக ஸ்தனாகவும் பற்றற்றவனாகவுமிருந்து கர்மத்தைச்செய். கைகூடும் கூடாதென்பதைப் பற்றி விசாரப்படாமலி(ஸமமாயி)ருக்கவேண்டும். அவ்வித ஸமநிலையே யோகம் எனப்படும்.

பகவத் கீதையில் வேதப்ரமாணங்கள் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. அக்காலத்துப்பல மதங்களின் கொள்கைகள் வரவர வேறுபடத் துவங்கின.



பகவத் கீதையில் அவ்வித்யாஸங்களை ஒருவாறு சரிப்படுத்த வேண்டிய முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. பூர்வ கர்ம மார்க்கம் அவசியமென்று ஸ்தாபிக்கப்பட்டபோதிலும், அதற்குப் புதிதாய் தத்வபரமான கருத்துக்கள் அமைக்கப்பட்டன. செய்யும் கர்மங்கள், ஆத்மலாபத்தைக் கருதி இந்திரன், வருணன், சூரியன் முதலான காம்ய தேவதைகளைக் குறித்துச் செய்யாது, அக்கர்மங்களின் பலனை அபேக்ஷிக்காமல், ஈசுவரனுக்கு அர்ப்பித்தே செய்ய வேண்டுமென்று பகவத் கீதையில் போதிக்கப்படுகின்றது.

இஃதிவ்வாறிருக்க, ஸாங்க்ய மதத்தினின்றும் சார்வாகம் லோகாயதிகம், பௌத்தம், முதலான நாஸ்திக மதமாய் முடியக்கூடிய கருத்துக்களை ஒருவாறு சீர்திருத்தி ஸாங்க்யமதத்தில் அங்கீகரிக்கப்பட்ட 24-தத்வங்களுடன் பரமாத்மா அல்லது ஈசுவரன் என்ற 25-வது தத்வமும் பகவத் கீதையில் அங்கீகரிக்கப்படுவதுடன் மற்ற24 தத்வங்களால் அமைக்கப்பட்டது இப்பிரபஞ்சம் என்றும், அலைகுளத்தில் ஒரே சந்திரன் பலபிம்பங்களாய் ப்ரதிபிம்பிப்பது போல, ஒரே பரமாத்மா நாம ரூபபேதங்களால் பல ரூபமாய் ப்ரதிபிம்பிக்கின்றது என்றும் நிரூபிக்கப்படுகின்றது.

மேலும் பலவாகத் தோன்றும் ஜீவாத்மாக்களெல்லாம், ஒரே பரமாத்மாவின் தோற்றந்தானென்றும், ப்ரக்ருதி என்பது வேறு தத்வமா (Entity) ய்த் தோன்றினும் அதுவும் பரமாத்மாவின் விகாரந்தானென்றும் கூறப்படுகின்றது.

## பௌத்தமதம்.

இவ்வாறு சார்வாகம் முதலான நாஸ்திக மதங்கள் விசேஷமாய்ப் பரவாமல், பகவத் சாஸ்த்ரத்தால், எவ்வளவோ தடுக்க முயற்சி செய்யப்பட்டும் சுமார் கி. மு. 6வது நூற்றாண்டின் இறுதியில் பௌத்தமதம் என்ற ஓர் மதம்

புதிதாய்க் கிளம்பிற்று. இம்மதம் புத்தர் என்ற பரமாசாரியரால் ஸ்தாபிக்கப்பட்டது. உலகத்திலுள்ள மதங்களிலெல்லாம் விசேஷமாய் ஆச்ரயிக்கப்பட்ட இப்பௌத்த மதம் நமது ஹிந்து மதத்தினின்றும் உதயமான ஓர் கிளைமதமென்பது நமக்கெல்லாம் மிக்க கௌரவத்தைத் தரத்தக்கதே.

## அத்வைதம்.

பௌத்தருக்குப்பிறகு சுமார் 1500 வருஷங்களுக்குப்பிறகு, புதிய கி. பி, 9 வது நூற்றாண்டின் துவக்கத்தில், லோகாசாரியரான சங்கராசாரியர் அவதரித்தார். இவர்தான் அத்வைதஸ்தாபனம் செய்தவர். உலகத்தில் இருப்பது ஒன்றே, அதுதான் பரமாத்மா அல்லது ஈசுவரன். அவருக்கு நாமரூப பேதங்களில்லை. அவர் நிர்க்குணமானவர்.

மற்ற ஜீவாத்மாக்களும் ஐம்புலன்களாலறியக்கூடிய இப்ரபஞ்சமும், ஈசுவரனுடைய மாயா விகாரமேயொழிய வேறுவேறு தத்வங்களல்ல. ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஸாயுஜ்யமடைவதே அதன் பரமார்த்தம். இவைதான் இம்மதத்தின் முக்யக் கொள்கைகள்.

## விசிஷ்டாத்வைதம்.

சுமார் 3 நூற்றாண்டுகளுக்குப் பிறகு ராமானுஜாசாரியர் அவதரித்தார். இவர்தான் விசிஷ்டாத்வைதத்தை ஸ்தாபித்தவர். பரமாத்மாவுக்கு குணங்களுண்டென்பதும், பரமாத்மா ஸகுண ரூபி என்பதும், ஜீவாத்மா, பரமாத்மாவின் விகாரமானபோதிலும், அது அவ்வாறே வேறாயிருக்கின்றதென்பதும், பரமாத்மாவுடன், ஸாலோக ,ஸாமீப ஸாரூப்ய என்ற மூன்று, பதவிகளுமடைவதே ஜீவாத்மாவின் பரமார்த்தம் (Goal) எனபதும் இம்மதத்தின் முக்யக் கொள்கைகள்.



## த்வைதம்.

பிறகு அவதரித்த மத்வாசாரியர், த்வைத மதத்தை ஸ்தாபனஞ் செய்தார். ஜீவாத்மா பரமாத்மாவைப் பார்க்கினும் வேறு என்றும், பரமாத்மாவின் ஸமீபமடைவதே. ஜீவாத்மாவின் பரமார்த்தம் என்பது இம்மதத்தின் கொள்கைகள்.

வேதாந்த த்வைதத்துக்கும், ஐரோப்பிய தத்வசாஸ்த்ர த்வைதத்துக்கும் வித்யாஸமுண்டு. ஐரோப்யத்வைதமானது, ப்ரக்ருதி (Matter) புருஷன் (Spirit) என்ற இரண்டு நித்யதத்வங்களைக் குறிக்கின்றன. இது விசேஷமாய் ஸாங்க்ய மதத்தை யொத்திருக்கும். ஆனால், வேதாந்த த்வைதமானது, ப்ரக்ருதி அல்லது ஜடப்பொருள்களால் உண்டான இப்பிரபஞ்சம், புருஷனுடைய ஸங்கல்பத்தால் உண்டானதென்றும், அவைகள் அநித்யமென்றும் கூறுகின்றது. இம்மதத்தின் ப்ரகாரம். ஈசுவரன் (அல்லது பரமாத்மாவும்) ஜீவன், ஆகிய இவ்விரண்டு இரண்டுவேறு தத்வங்கள் என்றும், அவைகள். தனியாகவும் அநித்தியமாகவும் இருக்கின்றனவென்றும் கூறப்படுகின்றது.

மேற் கூறியவைகளினின்றும், ஹிந்துக்களின் தத்வசாஸ்த்ரங்கள் பின்வருமாறு பிரிக்கப்படுகின்றன.

I ஸத்வாதம் இப்ரபஞ்சத்துக்கு ஆதிகாரணமாயும் நித்யமாயும், ஒரு பொருள் (தத்வம்) உண்டென்பதும், அதனிடமிருந்தே இப்பிரபஞ்சம் உற்பத்தியாய், அதனாலேயே விருத்தியடைந்து கடைசியாய் அதனிடமே லயமாகின்றதென்பது இம்மதங்களின் கொள்கை.

॥யதோ வா இமானி பூதானி ஜாயந்தே
யேந ஜாதானி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபிஸம்விஶந்தி ॥

II அஸத்வாதம் அதாவது, இப்பிரபஞ்சத்துக்கு ஆதாரமான வேறு தத்வமொன்று மில்லையென்பதும், சூன்யத்திலிருந்து இது உற்பத்தியானதென்பதும், ப்ரளய காலத்தில் சூன்யமாகவே முடிகின்றதென்பதும் இம்மதங்களின் கொள்கைகள்.

நாஸதாஸீந்நோஸதாஸீத்

(ஆதியில்) இல்லையென்பது மில்லை. உண்டென்பது மில்லை.

(1) ஏகதத்வவாதம்.

(2) இருதத்வவாதம்.

(1) ஏகதத்வவாதம்என்பது இப்பிரபஞ்சத்து ஆதிகாரணமும், ஆதாரமுமான தத்வம் ஒன்றென்பதே.

"ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்தி

உள்ளது ஒன்றே. (அதையே) அறிஞர் பலவாகக் கூறுகின்றனர்.

(2) இருதத்வவாதம்இப்பிரபஞ்சத்துக்குஆதாரமான தத்வங்கள் இரண்டென்பது. அவை ப்ரக்ருதி (Matter) புருஷன் (Spirit) என்பவைகளே. கௌதமரின் ந்யாயமதமும், ஹிந்து அணுவாத (Atomic Theory) ஸ்தாபகரான கணாதரின் வைசேஷிகமும், கபிலரின் ஸாங்க்யமும் இவ்வகுப்பைச் சேர்ந்தவைகள்.

ஏகதத்வவாதம்.

(i) ஆத்மவாதம்

(ii) அனாத்மவாதம்.

(i) ஆத்மவாதம்(Spiritualism) ஆத்மா அல்லது ஈசுவரன், தான், ஜகத் ஸ்ருஷ்டி, ஸ்திதி லயங்களுக்கு முக்ய



காரணம் என்பதும், ஈசுவரனைத்தவிரவேறு ஒருதத்வமும் நித்ய மில்லையென்பதும் கேவலம் கனவுபோல், அநித்யமான தோற்றங்களென்பதும் இதன் கொள்கைகள்.

(ii) அனாத்மவாதம் (Materialism)ஆத்மாவே இல்லை என்பதும், இருப்பதாக வைத்துக்கொண்டாலும் அது அநித்யமென்றும், ப்ரக்ருதி அல்லது ஜடம் (Matter)தான் நித்யமென்றும் இம்மதம் கூறுகின்றது.

ஆத்மவாதம்

(a) அத்வைதம்

(b) த்வைதம்

அத்வைதம் (Vedantic Monism) முறையேசுத்த அத்வைதம் என்றும், விசிஷ்டாத்வைதம் என்றும் இருவகைப்படும்.

த்வைதம் (Vedantic Dualism)

## அட்டவணை.




இன்னும் வரும்.

ஆர். எஸ். நாராயண ஸ்வாமி ஐயர்.

—

## மாசம்.

(11) உதவி செய்ய வேண்டுமென்று கருதி முயற்சிப் பாயாகில் நீ அறிந்தாலும் அறியாவிட்டாலும் அதற்குப் பலன் ஏற்பட்டே தீரும், ஈசுவர நியதி இவ்விதமே யென்று நீ அறி.

(12) ஆகையால், நியாயத்தை யுத்தேசித்தே நீ நியாயமாய் நடக்க வேண்டும்· அதினால் வரும் வெகுமானத்தை உத்தேசித்தல்ல; நீ வேலை செய்ய வேண்டியது வேலையை உத்தேசித்தே யல்லாது, அதன் பலனைப் பார்க்கவுத்தேசித்தல்ல: உலகத்தினிடத்தில் உனக்கு அன்பிருக்குங் காரணத்தால், உன்னை நீ அதற்கே அற்பணம் செய்து கொண்டு உலக உபகார கைங்கர்யங்களில் நீ முயலவேண்டும்:

(13) பரோபகாரத்தில் தீவ்ரமான அவா நிறைந்தவனாய் உன்னை சுற்றியிருக்கும் மனிதர்கள் மாத்திரம் மல்லாது, புல்பூண்டு மிருகம் முதலிய ஜீவ ஜந்துக்க ளெல்லாவற்றிற்கும் சமயம் பார்த்திருந்து, நீ உதவி செய்துவர வேண்டும். இவ்வுதவி ஒவ்வொரு நாளும் சிறிய விஷயங்களிலேயே ஏற்பட வேண்டும். அதனால் பரோபகார வழக்கம் ஏற்பட்டு அபூர்வமாய்ப் பெரிய காரியம் சம்பவிக்கும் பொழுது, நீ அதை விட்டு விடாது அங்கீகரிக்க இயலுவாய்.

(14) ஏனெனில் நீ ஈசுவரனோடு ஐக்கியப்பட விரும்புவது, உனது ஸ்வப்பிரயோஜனத்துக்காக அல்ல. உன் மூலமாய் ஈசுவராநுக்கிரஹ அன்பு, மற்ற உன் உடனொத்த மனிதர்களுக்கும், பெருகும்படி நீ ஒரு வாய்க்காலாக ஏற்படவேண்டும் என்பதற்கே.



## மே மாசம்.

(15) சமர்த்தனாகக் காட்டிக்கொள்ள வேண்டுமென்றுவது உலகத்தார் மெச்சப் பிரகாசிக்க வேண்டுமென்றுவது இச்சிக்காதே. பேச ஆசைப்படாதே.

(16) சொற்பப் பேச்சுடனிருப்பது நலம். நீ பேச விரும்புவது சத்தியமாயும், பிரியமாயும், ஹிதமாயு மிருக்குமென்று முற்றிலும் நிச்சயமா யிருந்தாலொழிய, மௌனமே நல்லது. நீ பேசப்போவதில், இம்மூன்று நிபந்தனைகளும் இருக்கின்றனவாவென்று நீ பேசுமுன் நன்றாயாலோசித்துப்பார். இவைகளில்லாவிடில் நீ அதைப் பேசாதே.

(17) இதுமுதலே நீ பேசும்போது ஜாக்கிரதையுடன் ஆலோசித்துப் பேசும் வழக்கத்தில் நீ ஏற்படுவது நல்லது; ஏனெனில் தத்துவோபதேச தீக்ஷை பெறவரும் சமயம் உனதுவார்த்தை ஒவ்வொன்றையும் நீ கவனிக்க வேண்டி வரும்: இல்லாவிடில் சொல்லக்கூடாததை நீ சொல்லி விடக்கூடும்.

(18) சாதாரணப் பேச்சில் அதிக காலங்கழிப்பது அநாவசியம், அது மூடத்தனமுமாம். அது வம்புப்பேச்சாய்விட்டால் பாபகரமாகிறது.

(19) ஆகையால், நீ பேசுவதைவிடக் கேட்டுப்பழகு. நேரே விரும்பினாலன்றி நீ அபிப்பிராயம் கொடாதே.

(20) அறிதல், துணிதல், (ஸங்கல்பித்தல்) தொடங்குதல், மௌனமாயிருத்தல், இவைகளைச் சாதனங்களாகச் சொல்வதும் ஒரு முறை! இந்நான்கில் கடைசியானது எல்லாவற்றிலும் கஷ்டமானது.

(21) உனக்குச் சொந்தம் என்ற பாவனையை நீ ஒழித்து விடவேண்டும்.

(22) இதர மனிதர்களுடைய காரியங்களில், அநாவசியமாய்த் தலையிடுகிறதாகிய சாதாரணமான வழக்கத்தில்

விருப்புக்கொள்ளாதே, நீ கண்டிப்பாய் இவ்வாசையை அடக்கிவிடவேண்டும்.

(23) இன்னொரு மனிதன் என்ன செய்தாலென்ன, எவ்வித அபிப்பிராயமுள்ளவனானாலென்ன, இவைகள் உன்னுடைய காரியங்களல்ல, அவைகளை அவனிஷ்டப்படி நடத்திக்கொள்ளும்படி விட்டுவிட நீ பயிலவேண்டும்.

(24) வேறொருவனோடு தலையிட்டுக்கொள்ளாதவரையில், தன்னிஷ்டப்பிரகாரம், ஒருவனுக்கு நினைக்கவும், பேசவும், செய்யவும் பூர்ணஸ்வாதீனமுண்டு, எது சரியென்று உனக்குத் தோன்றுகிறதோ, அதை ஸ்வேச்சையாய் செய்ய நீ உரிமை பாராட்டுகிறாயல்லவா? இந்த உரிமையைப் பிறருக்கும் நீ அளிக்கவேண்டும். அதை அவன் செலுத்தும்போது அவனைக் குறித்துப்பேச உனக்குப் பாத்தியமில்லை.

(25) அவன் தப்பி நடக்கிறானென்று நீ நினைத்தால், அவனைத் திருத்த நீ சமயம் பார்த்து உபாயந்தேடித் தனிமையாய் மரியாதை தவறாது, பேச முடியுமாகில், அவன் தவறுதலை நீ ஒருவேளை அவனுக்கு ரூபிக்கலாம் என்றாலும், அநேக சமயங்களில், இதுவே தகாது; தலையிடுதலாய்ப்போய்விடும்.

(26) எக்காரணத்தைக்கொண்டும், மூன்றாம் மனிதனிடம் நீ போய் எதைப்பற்றியும் பறைசாட்ட வேண்டாம். அது கெட்ட செய்கையாகவிருக்கிறது.

(27) ஒரு குழந்தையையாவது, ஒரு மிருகத்தையாவது வேறுயாராவது உபத்திரவம் செய்வதை நீ கண்டால், அதை நீ தடுக்கப் பிரவேசிப்பது உனது கடமை, எவனாவது ராஜாங்க சட்டத்திற்கு விரோதமாய் நடப்பதை நீ பார்த்தால், அதிகாரிகளிடம் நீ அதைத் தெரிவிக்க வேண்டும்.



(28) உன்னிடம் கற்க,வேறொருவன் உன்னிடம் வருவானாகில் அவனுடைய தப்பிதங்களை அவனுக்கு நீ சாந்தமாய் எடுத்துக்காட்டுவது, உன் கடமையாக ஏற்படலாம். இவ்விதங்களில் தவிர, உன் சொந்தகாரியத்தைக் கவனி, மௌனமாகிற நற்குணத்தை நீ கற்றுக்கொள்.

(29) சித்திகளுக்காசைப்படாதே. உனக்கு அவைகள் வேண்டியது நன்மையென்று குருநாதன் அறியுங்காலத்தில் அவைகள் உனக்குவரும்.

(30) பக்குவம் வருமுன் அவைகளை அடைந்தால் தீங்கை விளைவிக்கும், தவிர தந்திரமுள்ள க்ஷுத்ர தேவதைகள் இவ்வித சித்தர்களுக்குப் பலவிதங்களிலும் தப்புவழியைக் காட்டும், அல்லது அச்சித்திப் பெற்றவர்கள் கருவமடைந்து, தாங்கள் தவறக் கூடாதவர்களென்றும் நினைக்கலாம். இது எப்படியானாலும் சரி சித்திகளை அடையும் பொருட்டுச் செலவழிக்கும் காலத்தையும் பிரயத்தனத்தையும், பிறர்க் குதவி புரிவதில் உபயோகப்படுத்தலாம்.

(31) பக்குவகாலம் வரும்பொழுது சித்திகள் வரும்; வந்தே தீரும். முந்தியே அவைகளுனக்கு வருவது பிரயோஜனகரமென்று, குருநாதன் கண்டால் எவ்விதம் கெடுதியின்றி நீ அடையலாமென்பதை அவர் உனக்குப் போதிப்பார், அதுவரையில் அவைகளில்லாமலிருப்பதே உனக்கு நல்லது.

## ஜூன் மாசம்.

மாசாந்தர அப்யாஸம்:—நீ குருநாதனைச் சரணமடைந்து முற்றிலும் அவரை நம்பவேண்டும். உன்னிடத்திலேயே உனக்கு தைர்யமான நம்பிக்கையிருக்கவேண்டும்.

### வார அப்யாஸம்.

1-வது வாரம்:—க்ஷமை (பொறுமை).

எதனிடத்தும் அநுகூலமாயிரு. எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு இணங்கியேநட. எல்லாரிடத்தும் அநுகூலமாயும், சாந்தமாயும், பொறுமை யுள்ளவனுயும் இரு.

2-வது வாரம்:—சந்துஷ்டி.

நீ எப்பொழுதும் சந்துஷ்டி யுள்ளவனு யிருக்கவேண்டும். தீயது எதுவானுலும், அது நிலையில்லாததென்பதை ஞாபகத்தில் வைத்து நீ எப்பொழுதும் சந்தோஷமாயும் நிலைபெற்ற சாந்தமனத்தோடு கூடியவனுயு மிருக்கவேண்டியது உனதுகடமை.

3-வது வாரம்:—ஏகாக்கிரதை.

நீ பிரவேசித்திருக்கும் மார்க்கத்திலிருந்து உன்னை ஒரு நிமிஷங்கூட ஒன்றும் திருப்ப இயலாதிருக்கும்படி ஒரே மனத்தினனுய் இருக்கவேண்டும்.

4-வது வாரம்:—திடநிச்சயம்.

குருநாதனை நீ பார்த்துவிட்டால் உனக்கு அவரிடம் திடநம்பிக்கை யேற்பட்டு ஜன்மஜன்மங்களாக அதிகரித்துவிடும்.

5-வது வாரம்:—நிக்கிரகம்.

சுத்தமான கண்ணுடியின் வழியே சூரியப்பிரகாசம் துலங்குவது போல் ஸத்யமானது உன் வழியாக சுத்தமாய்ப் பிரகாசிக்க வேண்டும்.

## தினசரி அப்பியாசம்.

(1) எதனிடத்தும் அநுகூலமாயிரு. எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு இணங்கியேநட.

(2) எல்லாரிடத்தும் அநுகூலமாயும், சாந்தமாயும் க்ஷமையாயும் இரு. எல்லாரையும் வித்தியாசமின்றிப்பார்.

(இன்னும் வரும்)

கே. எஸ். இராமசந்திர ஐயர்.

## சிறுவர்க்குரிய விஷயம்.

### தயை *

ரந்திதேவர் என்னும் நல்ல அரசனைப் பற்றிய கதை.

அன்புள்ள ஸ்வர்ணமணிகளே!

தயை யென்பது ஸம்ஸ்கிருத பாஷையிலிருந்து வந்த வார்த்தை. அதற்குத் தமிழில் இரக்கம் என்று அர்த்தம். பிறரிடத்தில் மிக இரக்கங்கொண்டு, அதிக மேன்மையுடன் விளங்கிய ஓர் அரசனைப்பற்றி, பழைய புஸ்தகம்(புராணம்) ஒன்றில், ஓர் அழகான கதை உள்ளது. அக்கதையை நான் இச்சமயம் உங்களுக்குச் சொல்லப்போகிறேன். கவனத்துடன் கேளுங்கள். கவனமில்லாமற் செய்யும் காரியத்திற்கு நல்ல பலன் ஏற்படாதல்லவா?

முன் ஒரு காலத்தில் ரந்திதேவர் என்ற ஓர் அரசர் இருந்தார். அவர் ஸங்க்ருதி என்பவருடைய புதல்வர். ஜநங்கள் எல்லோரும் அவரை வெகு நல்ல அரசரென்று கொண்டாடினர்கள். ஏனென்றால் அவர் ஏழைகளுக்கு வேண்டியஅளவு அன்ன ஆகாரம் கொடுத்தும், காசுபணம் கொடுத்தும் உதவிவந்தார். தம்மிடமிருப்பதை யெல்லாம் இவ்விதம் ரந்திதேவர் பிறருக்கே கொடுத்து வந்தாராகையால், சில சமயங்களில் ஏழைகளாகிய பிறருடைய பசிப்பிணியைத் தீர்க்கும் பொருட்டுத் தாமும், தம் குடும்பத்தாரும் பட்டினியா யிருக்கும்படியும் நேர்ந்தது.

ஒரு சமயம், ரந்திதேவரும் அவரது குடும்பத்தார்களும் பலநாட்களாக ஆகாரமில்லாமையால்,பசியால் இளைத்துக் களைத்திருந்தனர். சிறந்த குணமுள்ள இவர்கள்

* ஸெண்ட்ரல் ஹிந்துகாலேஜ் ஸ்தாபகர்களால் ஹிந்து வாலிபர்களுடைய நன்மையை உத்தேசித்து எழுதப்பட்ட ஆங்கிலக்கதைப் புஸ்தகத்தினின்று தமிழிலெடுத்தெழுதப்பட்டது.

இவ்வருத்தமான நிலைமையில் இருப்பதைக் கண்ட ஒருவர் இவர்களுக்கிரங்கி, சொற்ப ஆகாரமும், நல்லபால் கொஞ்சமும், கொஞ்சம் நெய், வாற் கோதுமை கொஞ்சம் இவ்வளவையும் கொணர்ந்து கொடுத்தார். அவர்கள் அவ்வாகாரத்தைச் சாப்பிட உட்கார்ந்த சமயம், ஓர் பிராமண அதிதி வந்து சிறிது ஆகாரத்தை யாசித்தான். அப்பிராமணனும் மிகப் பசியுள்ளவனுயிருந்தான். உடனே ரந்திதேவர் மிருந்த பிரியத்துடன் அப்பிராமணனை உபசரித்து, அவனுக்கு முதலில் அன்னம் இட்டார்.

பிராமணன் சாப்பிட்டு முடிந்ததும், விடை பெற்றுக் கொண்டு போய்விட்டான். மீதியிருந்த ஆகாரத்தை எல்லோருக்கும் ஸமபாகமாகப் பகுந்துகொடுத்தார். தன் பாகத்தை சாப்பிடப்போகும் சமயம், சூத்திரன் ஒருவன் வந்து "ஐயா! மிகப் பசியாயிருக்கிறேன், கொஞ்சம் ஆகாரங்கொடுங்கள்'' என்று கேட்டான். இன்னும் ரந்திதேவர் தான் ஒன்றும் சாப்பிடாமற் போனுலும், 'பசி' யென்று கேட்பவனுக்கு முதலிற் கொடுக்கவேண்டுமென்ற எண்ணத்துடன், சூத்திரனுக்குச் சிறிது உணவு கொடுக்கவே, அவனும் பசியாறித் திருப்தியடைந்து போய்விட்டான்.

கடைசியாக மீதியிருந்த அற்ப சொற்பத்தையுங்கூட அவர் சாப்பிட இயலாமல், ஒரு குறவன் சில நாய்களுடன் வந்து, ஆகாரத்தை யாசித்தான். உடனே தன்னிடமிருந்த உணவு அனைத்தையும் நாய்களுக்கும் குறவனுக்குமாகப் பகுந்து கொடுத்துவிட்டார்.

பிறகு அக்குறவனும் நாய்களைக் கூட்டிக்கொண்டு புறப்பட்டுப் போனுன். கடைசியாக மீதியிருந்த ஒரு சிறு கலசம் தண்ணீரை மட்டும உட்கொண்டு, தாஹத்தைத் தீர்த்துக்கொண்டு சும்மாவிருந்து விடலாம் என்று அவர் நினைப்பதற்குள், ஒரு பறையன் வெயிலில் களைத்து, "ஐயா, எனக்கு மிகத்தாகமாயிருக்கிறது. இரக்கமுற்றுக் கொஞ்சம் தண்ணீர் கொடுக்க மாட்டீர்களா?" என்று கூவினுன். அப்பறையன் தீண்டாத ஜாதியானுயிருந்த போதிலும், அன்பின் களஞ்சியம் அல்லது தயாநிதியென்று சொல்லத்தக்க ரந்திதேவர், அவனுடைய சிரமத்தையும் பலவீனத்தையும் நன்கு உணர்ந்து அவனுக்கிரங்கி, தான் சாப்பிட எண்ணியிருந்த தீர்த்தத்தையும், அவ்வேழைப் பிச்சைக்காரனுக்குக் கொடுத்துவிட்டார். அவனுக்குத் தண்ணீர் வார்க்கும்போதே, அவனுடைய சௌக்கியத்தைக் கோரியவராய், தீவ்ரமான அன்போடு, ரந்திதேவர் பின் வருமாறு சொல்ல ஆரம்பித்தார்:—



" என்பசியும் தாஹமும் தணிந்தன. நான் கடவுளைப் பிரார்த்திப்பதெல்லாம், பிறருடைய துக்கங்களையும் கஷ்டங்களையும் என்னுடையதாக பாவித்து, அவர்களுடைய துன்பத்தைக் குறைக்க முயல்வதே என்னுடைய பாக்யமாயிருந்தால் போதும் என்பதேயாம்."

ரந்திதேவர் சரித்திரத்தால் நாம் அறிந்துகொண்ட விஷயங்கள் என்னென்னவென்று பார்ப்போம்:—

1. பிராஹ்மணர்களானுலும், சூத்திரர்களானுலும், பறையர்கள் முதலிய, தாழ்ந்த ஜாதியார்களானுலும், எந்த பிச்சைக்காரர்களானுலும், நாய்கள் முதலிய பிராணிகளானுலும், எல்லோரிடத்தும் எவ்விதம் ஒரே மாதிரியான தயையுள்ளவராக நாம்நடக்கவேண்டும் என்பதை முதலில் அறிந்துகொண்டோம்.

2. ரந்தி தேவரைப்போல நம்முடைய ஆஹாரம் அவ்வளவையும் பிறருக்கே கொடுக்க இயலாதபோதிலும், பசித்து வந்தவர்களுக்குச் சொற்பமாவது நாமும் கொடுக்க முயற்சிக்கலாம் என்பதையும் அறிவோம்.

3 இவ்விதமான உபகாரங்களைப் பெரியவர்கள்தான் செய்யக்கூடுமென்பதில்லை: சிறுவர், சிறுமிகள் எல்லோரும் கூட இவ்வித உபகாரங்களைச் செய்தல் இலகுவாம்.

4. நாம் எல்லோரிடத்தும் அன்பு, பாராட்டவேண்டியதவசியம். அன்பு, தயை, இரக்கம் எல்லாம் ஒரே அர்த்தத்தைத்தான் விளக்குகின்றது, நம்முடைய சொந்தக் குடும்பத்தார்களாயிருந்தாலும் சரி, அன்பர்களாயிருந்தாலும் சரி, பணக்காரர்களாயிருந்தாலும் சரி, ஏழையாயிருந்தாலும் சரி, பிராஹ்மணர்களாயிருந்தாலும் சரி, பறையர்களாயிருந்தாலும் சரி, எல்லோரிடத்தும் நாம் தயையுள்ளவர்களாயிருக்கவேண்டியது தான். எவனொருவன் நம்முடைய ஒத்தாசையை வேண்டுகிறானோ, அவனை நாம் நம்முடைய ஸஹோதரனாகக் கருதவேண்டும்.

மேலே சொல்லப்பட்ட விஷயங்களை எல்லாம் நாம் கூர்ந்து கவனிப்போமானால், இதுவரை வெளிவந்தமுன் கடிதங்களிலெல்லாம், எழுதப்பட்டபடி ஸ்வர்ணமணிமாலைச் சங்கத்துச் சிறுவர், சிறுமிகள் பழகித்தேரவேண்டிய குணங்களில் ரந்திதேவர் எவ்வளவு தேர்ச்சியுள்ளவராயிருந்திருக்கிறார் பார்த்தீர்களா? உங்களுக்கு ஏற்பட்டிருக்கிற ஸ்வர்ணமணிமாலைச் சங்கம், ரந்திதேவர் காலத்தில் இல்லை. ஆயினும் அவர் எவ்வள்வு தயை நிறைந்தவர்! என்பதை அடிக்கடி நீங்கள் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். ரந்திதேவரைப் போலவே நீங்கள் தயை நிறைந்தவர்களாக வேண்டும்.

உங்கள் அன்புள்ள

வஸந்தாநந்தன்.

---




# பூர்ணசந்திரோதயம்.

தொகுதி 6 | 1915ளு ஆகஸ்டுமீ ராக்ஷஸளு ஆவணிமீ | பகுதி 4

## தற்கால நிலைமை.

சென்ற ஜூலைமீ த்திலும் நிகழும் ஆகஸ்டுமீ த்திலும் பிரசுரம் செய்யப்பட்ட 'தியாஸபிஸ்டு' என்ற பிரஹ்மஞான பத்திரிகையில் ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள் இந்தியாவில் குப்தவித்தையை அப்பியஸிக்கின்ற ஒரு அந்தரங்க சபையைக் குறித்து (An Esoteric Organization in India.) வரைந்திருக்கின்றனர். சீஷர்களை ஞானயோக மார்க்கங்களில் செலுத்தி அவரவர்களுக்குரிய உபதேசங்களைச்செய்து அவர்கள் விகாஸமுறையில் மேற்செல்லுமாறு அவர்களுக்கு உதவிபுரியும் ரிஷிகளும் யோகிகளும் ஸித்தர்களும் இக்காலங்களிலும் உளரென்பது இந்துக்களிற் பெரும்பான்மையோரின் கொள்கையாகும். ஆகிலும் தற்காலத்தில் அவ்விதம் உதவிபுரிவதற்கு, ரிஷிகள் யோகிகள் ஸித்தர்கள் இவர்களது சங்கம் ஒன்று இக்காலத்திலும் இந்தியதேசத்தில் நடைபெற்று வருவதாகவும், இத்தே

முழுமையிலும் அவர்களுடைய வழியைக் கடைப்பிடித்து தழுவுவோர்களின் சங்கியை சற்றேறக்குறைய ஆயிரமுளதென்றும், அவர்களது சம்பிரதாயம் பிராசீன காலமுதல் இத்தேசத்தில் கைக்கொண்டு வரப்படுகிற தென்றும், பிரஹ்மக்ஞான சபையை ஒருவாறாகச் சார்ந்த ஈ. எஸ். என்ற குப்தஸபையின் தலைமை பூண்டவர் எவ்வாறு (White Brotherhood of Adepts) என்ற ரிஷிகளின் குழாத்தைச் சேர்ந்தவரோ, அதுபோல இப்பிராசீனசங்கத்தின் தலைமை அதிகாரிகளும் அந்த ரிஷிகளின் மன்றத்தைச் சார்ந்தவர்களென்றும் ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயரவர்களின் மேற்கூறிய இரண்டு வியாஸங்களால் தெரியவருகிறது.

***

இப்பிராசீன சங்கமானது தக்ஷிணமுகமென்றும், உத்தரமுகமென்றும் இருவகையாகப்பிரிந்து, அவைகளில் உத்தரமுகம் இந்தியாவென்ற ஆரியா வர்த்தத்தில் ஏற்பட்டிருக்கிறது; அதினுடைய முறைகள் வைதிகமாகவும் அதின் யோகவழிகள் பிராசீனக்கோட்பாடுகளைத்தழுவியும்நிற்கின்றன. அதை அப்பியஸிப்போர் அவர்களது ஆயுள்முழுவதும் அப்பியஸித்தல் வேண்டும். அவர்கள் நான்கு வகுப்புகளாகப் பிரிக்கப்படுகின்றார்கள். கீழ்வகுப்பிலுள்ளவர்கள் 'தாஸர்'களென்றும், அதற்கு அடுத்த மேல் வகுப்பினோர் 'தீர்த்தர்'களென்றும், அதற்கு மேலாயினோர் 'பிரஹ்மம்'என்றும், நாலாவது வகுப்பினோர் 'ஆனந்தர்'கள் என்றும் கூறப்படுகிறார்கள். ஏற்றுக் கொள்ளப்படும் சீஷன் ஒவ்வொரு வகுப்பிலும் 24 வருஷம் தங்கி அப்பியஸிக்க வேண்டும். அவ்விருபத்தினான்கு வருஷங்கள் ஏழுவருஷங்களடங்கிய மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவுகாலத்திலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட சீஷன் அப்பிரிவுக்குரிய முறையைத் தழுவுகிறான். கடைசி 3 வருஷத்தில் முன்கற்ற பலமுறைகளையும் ஒருங்கு சேர்த்து ஒன்றாக அப்பியஸிக்கின்றான்.



***

தேகத்தை ஹிம்ஸிக்கின்ற ஹடயோகமுறைகள் இச்சங்கத்தின் பயிற்சியில் சம்பந்தப்படா. இப்பயிற்சியானது தியானமுறையைத் தழுவி, அப்பியஸிப்போர்களின் சித்த சுத்தியையும் நல்லொழுக்கத்தையும் நற்குணத்தையும் வற்புறுத்துகின்றது: 'தாஸர்'களென்ற கடை வகுப்பினர்களுடைய முதல் $3\frac{1}{2}$ வருஷம்தவிர மற்ற காலங்களில் எல்லாம் பிரஹ்மசரிய விரதம் அநுஷ்டிக்கத் தக்கது.

***

கன்னியாகுமரி தெற்கெல்லையாயும், கோகர்ணம் மேற்கிலும்,வடகிழக்கில் வங்காளமும் அமைந்து இவைகளுக்கு மத்தியிலுள்ள சென்னை ராஜதானி உள்ளடங்கிய பிரதேசத்தில் ஆறு அதிகாரிகள் உளர். அவர்கள்மூலமாய் இச்சபையில் சேர விரும்புவோர்கள் தத்தம் யோக்கியதைக்கும் பூர்வஜன்ம விசேஷங்களுக்கும் தக்கவாறு அங்கீகரித்து கொள்ளப்படுவார்கள். அவர்களுக்கு ஏற்பட்ட முறைகளை சிரத்தையோடு அவர்கள் அநுஷ்டித்துவரின், அவர்களோடு பயிலும் சீஷர்களையும் மேல் அதிகாரிகளையும்விட்டு அகன்று எவ்வளவு தூரத்தில் பிரிந்திருப்பினும் மனோமயமாய் ஸல்லாபம் செய்யும் சக்தியை அடைகிறார்கள்.

***

அச்சீஷர்கள் மேலதிகாரிகளால் அங்கீகரிக்கப்பட்டவுடன் அவர்களுக்கேற்ற அநுஷ்டான முறைகளைக்காட்டும் 'அநுஷ்டான சந்திரிகை' என்னும் நூல் அவர்களில் ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்படுகிறது. அம்முறைகள் ராஜயோகத்தைத் தழுவி நிற்கின்றன. அவர்களால் சில

அனுஷ்டானங்கள் வைசாகபௌர்ணமி முதலிய சில காலங்களில் அக்னிமுகமாகவும், உதக பூர்வகமாகவும் நடத்தப்படவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த 'அனுஷ்டான சந்திரிகையில்' அடியில்கண்ட சுலோகம் காணப்படுகிறது.

***

"விசாலே பதரீகண்டே மஹாத்மனோ ஹிதைஷிண:
வைசாக பூர்ணிமாயாம்து குர்வந்தே ஜகன்மங்கலம்" ஆகையால், ராஜயோகிகளால் பல குப்தமான காரணங்களின் பொருட்டு கொண்டாடப்படுகிற வைகாசிமாதம் பௌர்ணமிதினம் இச்சபையோர்க்கும் விசேஷமென்று தோன்றுகிறது.

***

அச்சபையைச் சேர விரும்புவோர்களிடத்தில் ஜாதி, வர்ணம், மதம், தேசம், ஆண்பால், பெண்பால் முதலிய வித்தியாஸங்கள் அச்சபையின் அதிகாரிகளால் இடையூறுகளாகப் பாவிக்கப்பட மாட்டாவென்று சொல்லப்படுகிறது இன்னும் சுமார் 2 வருஷங்களுக்குப் பிறகு வரும் நளவருஷத்தின் முடிவில் ஒருசிறிய உபகல்பம் முடிவுபெற்று அதற்குப் பின் 24 வருஷகாலம் வரை தொடர்ந்துநிற்கும்புதிய உபகல்ப ஆரம்பத்தில் ஞானமுறையைத்தழுவவிரும்பும்மனிதர்கள் அதிகரிக்கத்தக்கதால் இக் குப்தமான சங்கமானது விளம்பரப்படுத்தப் படுகிறதென்று ஐயரவர்கள் சொல்லுகின்றனர். ஆனால் பிராசீன பாஹ்ய ஆசாரங்கள் எல்லாவற்றிலும் முழுப்பற்று வைத்து நடக்கிறவர்களின் நோக்கங்கள் இச்சபையை நோக்கிச் செல்ல மாட்டாவெனத் தோன்றுகின்றது.

***



'அனுஷ்டான சந்திரிகை' என்னும் நூலானது 4 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. முதல்பாகம் பொது விஷயங்களைப் பற்றியும் 'தாஸர்'களுக்கு விதிக்கப்பட்ட முறைகளைப் பற்றியும் கூறுகின்றன. இரண்டாவது பாகம் 'தீர்த்தர்'களின் அநுஷ்டானங்களை விவரிக்கின்றன. இந்த இரண்டு பாகங்கள் மட்டும் கிரந்தரூபமாக இருக்கின்றன. 'பிரஹ்மம்', 'ஆனந்தர்' இவர்களைச் சார்ந்தவிதிகள் வாய்மொழியாய்ச் சொல்லத்தக்கவை. 'தாஸர்'கள் சம்பந்தமான முதல்பாகத்தில் நான்கு அத்தியாயங்கள் உள. இமயமலைப் பிரதேசத்தைச் சேர்ந்த பத்ரிகாவனத்தில் கலியுக ஆரம்பத்தில் கூடின ரிஷிகளது சபையின் வர்த்தமானங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அந்த ரிஷிகளில் நாராயணர், நரர், யோகதேவி என்று மூவர் பிரதானமாய்த் தோன்றுகிறார்கள். அக்கூட்டத்தின் பயனாக இந்தக் கலியுகத்தில் வர்ணாசிரம, ஸ்திரீ புருஷர் முதலிய பேதங்களைக் கொள்ளாமல் தகுதியானோர் யோகபிரஹ்ம வித்தையை அப்பியஸிக்கலாமென்று 'சுத்ததர்மம் மண்டலம்' என்ற யோகிகளும் ரிஷிகளும்கூடியஸபையொன்றுஸ்தாபிக்கப்பட்டது.

***

அச்சபையைப் பற்றிய சில வரலாறுகள் கூறப்படுகின்றன. அச்சபையின் அதிஷ்டாதா பகவான் நாராயணர், அதின் காரியதரிசி நரர். இவ்விருவர்களோடு அச்சபைக்கு ஏழு அதிகாரி புருஷர்கள் உளர். அவர்கள்:— யோக பிரஹ்மவித்தையை உபதேசிக்கும் ஞானாசாரியராய் ஸத்ய லோக பிரதிநிதியான நாரதர், யோகபிரஹ்ம வித்தையை கீழுலகங்களில் பரவச்செய்யும் ரிஷிகளுக்கு உபதேசத்தைக் கொடுப்பவரும் தபோலோக பிரதிநிதியா யுள்ளவருமாகிய வாமதேவர், காசிபர், ஜனோலோகப் பிரதிநிதியாயிருந்துகொண்டு யோகப்பிரஹ்ம வித்தையைப் பரவச்செய்வோர்களின் அபிவிர்த்தியைக் கவனித்துக் கொண்டிருக்

கின்றனர். மகர்லோகத்தில் சந்தபாநு என்போர் நின்றுகொண்டு யோகபிரஹ்ம வித்தையின் முறை ஒழுங்கு தவறாமல் அனுஷ்டிக்கப் படுவதை மேல்பார்த்து வருகின்றனர். காலதேவர் ஸ்வர்க்கத்தின் பிரதிநிதியாக இருந்துகொண்டு யோக பிரஹ்மவித்தை அப்பியாஸிகளின் இடையூறுகளை நிவர்த்திக்கின்றனர். புவர்லோகத்திலிருக்கும் சுப்பிரமணியர் மூலமாய் யோக பிரஹ்மவித்தையை உபதேசிக்கிறவர்களும் அதை அப்பியஸிக்கிறவர்களும் அவர்களுடைய மனோமய கோசங்களை சுத்தமானவைகளாகச் செய்கிறார்கள். கடைசியாக தேவாபியானவர் பூலோகத்தில்பகவான் நாராயணருடைய பிரதிநிதியாக நின்றுகொண்டு யோகப் பிரஹ்ம வித்தையின் அப்பியாஸிகளைக் காக்கிறார்.

***

தவிரவும் மேற்சொல்லிய ஏழு அதிபர்களில் ஒவ்வொருவருக்கும் கீழாக பதினெண்மர்கள் இருக்கிறார்களென்றும், அவ்வாறு 126 பேர்களின் நாமங்கள் கூறப்படுகின்றன. அவர்களில் தேவாபி என்றவரின் கீழுள்ளவர்களில் மைத்திரேயர் ஒருவரென்று சொல்லப்படுகிறது. இவர்களோடு பகவான் நாராயணரையடுத்து 32 சித்தர்கள் இருக்கின்றனர் என்றும் அவர்கள் உலகத்தில் பல விடங்களில் ஞான மார்க்கத்தைத் தழுவுகின்ற மனிதர்களின் க்ஷேமத்தைக் கருதுகிறார்களென்றும் கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொருவருஷம் வைசாக பௌர்ணமிதினத்தில் பதரீவனத்தில் இந்த சுத்ததர்ம மண்டலத்தில் அங்கத்தினர்கள் கூடி அடுத்த வைசாக பௌர்ணமிவரையில் அவர்களால் நடத்தப்படவேண்டிய காரியாதிகளைப்பற்றி ஏற்பாடு செய்கிறார்கள் என்றும் சொல்லப்படுகின்றது.

***

ஒருவன் இம்மண்டலத்தைச் சேர்ந்த சிஷனாக அங்கீகரிக்கப் படுமுன் ஒன்பது விதிகளை அனுஸரிப்பதாக உறுதிமொழி கூறவேண்டும். அவையாவன:—



(1) உலகத்திலுள்ளோருடைய சுகதுக்கங்களை தனதாக பாவித்து உலகத்தின் க்ஷேமத்தையே கருதி எல்லா ஜீவராசிகளுக்கும் ஹிம்ஸையைச் செய்யாதிருத்தல்.

(2) நிச்சய புத்தியில்லாதவர்களுக்கும் [illegible]ர்களுக்கும் அனதிகாரிகளுக்கும் யோக பிரஹ்மவித்தையை போதிக்காமலிருத்தல்.

(3) பிறருடைய அர்த்தத்தை அபகரியாதிருத்தல் பிறர்களையும், யோக பிரஹ்ம வித்தையையும் அதின் ஆசாரியர்களையும் தூஷிக்காமலிருத்தல்.

(4) சுத்த தர்ம மண்டல ஆசார்யர்களின் முறைகளுக்கு விருத்தமான வர்ணாசிரம தர்மங்களை ஒழித்தல்.

(5) உலக க்ஷேமார்த்தமாக சாந்தமான மனோநிலைமையுடன் காலதேச நிலைமைக்குத் தக்கவாறு தர்மத்தை அபிவிருத்தி செய்து தனக்கும் பிறருக்கும் வித்தியாசம் பாராட்டாமல் சுத்த தர்ம மண்டல முறைகளை அனுசரித்தல்.

(6) சுத்தமான மனதுடன் துர்ச்சகவாஸத்தை ஒழித்து துன்மார்க்கத்தினின்று விலகி அசுசியான ஆகாரங்களை உட்கொள்ளாதிருத்தல்.

(7) இஜ்ஜன்மத்தில் எச்சுகதுக்கங்கள் நேரிடினும் அம்மண்டலத்தின் முறைகளினின்றும் வழுவாது உறுதியாய் நிற்றல்.

(8) பரப்பிரஹ்மத்தின் அடையாளமாகிய பரமுத்திரையை சிஷன் தன்தலையின் பேரில் வைத்துக்கொண்டு அதின் மூலமாய் யோக சக்தி பிரஹ்மரந்திரம் வழியாய் பிரவேசிக்கும்படி செய்தல்.

(9) ஆசாரியனின் ஆக்ஞையினின்றும் விலகாமல் அம்மண்டலத்திற்கும் சிஷனுக்கும் ஏற்பட்ட சம்பந்தம் சாசுவதமாயிருக்கும்படி செய்தல்.

மேற்சொல்லிய நிபந்தனைகளைத் தவிர சீஷன் இன்னும் சிலமுறைகளைக் கைக்கொள்ளல் வேண்டும். அவன் மண்டலத்தைச் சேர்ந்த காலமுதல் மூன்றரை வருஷங்களுக்குப்பிறகு பிரஹ்மசரிய விதியைக் கைப்பற்றவேண்டும் அந்த மூன்றரை வருஷக்காலத்திலும் அவனது ஆசாரியனால் ஏற்படுத்தப்படும் விதிகளின் பிரகாரம் அக்கிருஹஸ்தாசிரம வழியில் நிற்கவேண்டும், சீஷனானவன் அவனது மதாசாரப் பிரகாரம் காமிய கருமங்கள் செய்ய விரும்புவானாகில் சுத்த தர்ம மண்டல ஆசாரியர்களால் விதிக்கப்படும் முறைகளைத் தழுவி செய்யவேண்டும். யோக பிரஹ்ம வித்தையின் முறைகளைத் தழுவுவதினால் கிருஹஸ்தாசிர தர்மங்களை கைவிடக்கூடாது. சம்சாரம், பெற்றோர், சுற்றத்தார், குழந்தைகள், அரசன் இவர்களுக்குரியகடமைகளைச்செய்யவேண்டும். யோக பிரஹ்மவித்தைக்காக சீஷனால் ஆர்ஜிக்கப்படும் பொருளில் அரைக்கால்பாகம் தவிர மற்றதைக் கைக்கொள்ளக்கூடாது. ஸ்தானம் காலம் இவைகளுக்குரியதாய் ஆசாரியனால் அப்போதைக்கப்போது விதிக்கப்படும் விதிகளின் பிரகாரம் நடக்கவேண்டும். சுத்த தர்ம மண்டலத்தின் அபிவிருத்தியை நாடவேண்டும். இவ்விதமாகசுத்ததர்ம மண்டலம் என்ற சபை ஒன்று உளதென்றும் அதின் கொள்கைகளும் முறைகளும் மேற்கூறிய வாறு இருக்கின்றனவென்றும் ஐயரவர்கள் எழுதியிருக்கின்றனர். பிராசீன ஞானயோக முறைகளில் பற்றுள்ளவர்களால் மேற்சொல்லிய பிரகாரம் வெளியிடப்பட்ட விஷயங்கள் விசேஷமானவைகளெனக் கவனிக்கப்படுமென்பதில் ஐயமில்லை. எவர் அந்த மண்டலத்தைச் சேர விரும்புகிறார்களோ அவர்களது பேரை அம்மண்டலத்தின் அதிகாரிகளுக்குத் தெரிவிக்க ஐயரவர்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும் எழுதியிருக்கின்றனர்.

அ. ரங்கஸ்வாமி ஐயர்.

---

## மீராபாய்.

---

### நாடக பாத்திரர்கள்.

அக்பர்—டில்லி சக்ரவர்த்தி.

கும்பாஜி—மீவார்தேசத்து ராணா.

அபுல்பாஸல், அபுல்பானை—அக்பருடைய மந்திரிகள்

குணசீலர்—கும்பாஜியின் மந்திரி

ஆனந்தசாஸ்திரி—ஒரு வைதிகர்.

குமாரசிங்க், ஜயசிங்க்—மீவாரிலுள்ள கனவான்கள்.

ஏகநேத்திரன், அதிமூடன்—கொலையாளிகள்.

மீராபாய்—கும்பாஜியின் பட்டமஹிஷி.

சுந்தரீபாய்—மீராபாயின் ஸபத்நீ.

நீலா—ஒரு சேடி.

சேவகர்கள், கடைச்சாமான் வாங்குவோர்கள் முதலியவர்கள்.

### காட்சி.

கும்பாஜியின் அரண்மனையிலும், அதனருகேயுள்ள கிருஷ்ணாலயத்திலும் வனத்திலும், பிருந்தாவன க்ஷேத்திரத்திலும், அக்பருடைய அரண்மனையிலுமாம்.

### அங்கம் 1. களம் 1.

காலம்—காலை.

இடம்—அக்பருடைய அரண்மனையில் ஓரறை.

நாடக பாத்திரர்கள்:—அக்பர், அபுல்பாஸல், அபுல்பானை.

அக்பர்:— (மற்றிருவர்களையும் நோக்கி) நேயர்காள்! சகல ஜனங்களுடைய ஹிதத்தை முன்னிட்டு நாமேற்படுத்தியுள்ள டினில்லாஹி நாளுக்குநாள் விருத்தியடை

வேண்டியிருக்க, அது வரவர க்ஷீணிக்கிறதாகவல்லவோ
தோன்றுகின்றது? அதற்குக் காரணமென்ன விருக்கக்
கூடும்? நாம் ஒருங்குசேர்ந்து வெகுகாலமாய் யோசித்துக்
கடைசியில் ஏற்படுத்தினதல்லவா அது? ஜனங்களெல்லோ
ரும் அக்கொள்கையை மேற்கொள்வதில் ஆனந்திக்கவேண்
டியிருக்க, அவர்களதை நிந்திக்கிறதாகவல்லவோ தெரியவ
ருகிறது! ஜனங்களுக்கதனிடத்தில் அப்ரியமுண்டாகும்படி
க்கென்ன கெடுதல்க ளதிலிருக்கக்கூடும்? அல்லது ஜனங்க
ளுக்கு வாஸ்தவத்தில் நன்மையைக் கொடுக்கும்படியான
குணங்களதி லொன்றுமில்லையோ?

அபுல்பாசை:-மஹாராஜ், டினில்லாஹியில் நற்குணங்களி
ல்லையென்று எப்படிச்சொல்லக்கூடும்? இப்போது அக்ஞான
சாகரத்தில் மூழ்கி அதைத் தாண்ட வழி தெரியாமல் தபித்
துக்கொண்டிருக்கும் பேதைகளுக்கொருதோணிபோலுள்ள
தல்லவா அக்கொள்கை? நாமெங்கு பார்த்தாலும் ஒவ்வொரு
மதத்தினரும தங்கள் தங்கள் மதத்தைத்தவிர வேறுள்ளமத
ங்களனைத்தையும் நிந்தித்தும், எல்லாமதங்களிலேயும் குண
ங்களிருக்கின்றன என்பதைக் கவனியாமலும், பற்பல மதங்
கள் பகவானையடைய பற்பலமார்க்கங்களென்பதைமறந்தும்
நிற்கிறார்கள். அப்படியிருப்பது அவர்கட்கே கெடுதலை
விளைவிக்குமென்பதை யவர்களறியவில்லை. கருணாநிதியான
பகவான் சகல பூதங்களையும் தன்னுடைய குழந்தைகள்
போல் பாவித்து நியாயத்தைச் சரிவர நடத்துவது உண்
மையாயின் அவரை யடையும்படியான யோக்கியதை ஒரு
மதத்தி லிருக்கிறவர்களுக்கு மட்டு மேற்பட்டிருக்குமா?
இந்த உண்மையையறியாமல் ஜனங்கள் கெட்டுப்போகிறார்
களென்பதை நன்றாயுணர்ந்து, அவர்களுடைய அக்ஞான
த்தை நீக்க மனங்கொண்ட தேவரீர் சகல மதங்களிலிருக்
கும் குணங்களையெல்லா மொன்றுசேர்த்து எல்லாரு மங்கீ
காரம் பண்ணிக் கொள்ளும்படி இந்த டினில்லாஹியை



ஏற்படுத்தியிருக்கிறீர்கள். அதில்தோஷமென்பதுஎள்ளளவு
கூட இருக்க விடமில்லையே. மேலும் யாருக்காவது கெடு
தலை விளைவிக்கக் கூடியதா? இவ்விராஜ்யத்திலுள்ள எல்லா
மதஸ்தர்களும் தங்களுக்குள் மதபேதத்தினா லிருந்துகொ
ண்டிருக்கும் வைரத்தைவிட்டு சகோதரர்கள் போலொருவ
ரையொருவர் நேசிக்க வழியைக் காட்டுகிறது. அப்படியி
ருக்க ஜனங்க ளதைக்குறித்து சந்தோஷப்படாமலதை வெ
றுப்பது ஆச்சரியப் படத்தக்கதாகவே யிருக்கிறது.

அக்பர்:—இஃதிப்படி நிற்க, நேற்று ராத்திரி நான்
கண்டகனவைக் குறித்து யோசிக்குமிடத்து என் மனதுக்
கொருவிதமான சாஞ்சல்ய முண்டாகிறது.

அபுல்பாஸல்:—அஃதென்ன கனவு, மஹாராஜ்?

அக்பர்:—சகே, நான் கண்டது கனவாயிருந்தபோதிலு
மதைப்பற்றி நான் நினைக்கும்போது என்மனம் பதைக்கி
றது. அதை யுரைக்கவுமென் நாவஞ்சுகிறது. பாசல்!
வழக்கப்படி நேற்றிரவு இபாதத்கானாவிலிருந்து மதத்த
வாதங்களை நடத்திவிட்டு நானுங்களிருவருக்கும் விடை
யளித்து சயனக் கிருஹத்துக்குச்சென்று நித்திரைசெய்ய
ஆரம்பித்தேன். சீக்கிரத்தில் நித்திரையும் வந்தது. கன
வில் ஐந்து மூலைகளோடுகூடின ஒரு கட்டிடத்தைக் கண்
டேன். அதிலொருமூலையில் கிருஸ்தவர்கள் தங்களியேசு
வைக் குறித்தும், வேறொருமூலையில் பௌத்தர்கள் தங்கள்
புத்தரைக்குறித்தும், மற்றொருமூலையில் ஜோராஸ்த்திரிய
ர்களக்னி பகவானைக் குறித்தும், வேறொருமூலையில் ஹிந்து
க்கள் தங்களீச்வரனைக் குறித்தும், மீதியுள்ள மூலையில் மக
ம்மதீயர்கள் தங்கள் மகம்மதுவைக் குறித்தும் துதிக்க அக்
கட்டிடத்தின் நடுவில் நானுங்களிருவருடனே யிருந்து
அந்த ஸ்தோத்திரங்களையெல்லாம் கேட்டு அளவிலா வர்ண
ர்ந்தத்தை யநுபவித்துக் கொண்டிருந்தேன். அச்சமயத்தில்

லெனது முதற்குமாரனான சலீம் அங்குவந்து உன்னைக் கீழேதள்ளி உன்னுயிரை மாய்க்கவும் கண்டேன். அதைக் கண்டு என்மனம் பட்டபாட்டுக் களவே கிடையாது. உன்னைப் பிரிந்ததுக்கம் பொறுக்கமாட்டாமல் நானும் சீக்கிரத்திலென் பிராணனை விடுத்தேன். ஆனாலாச்சரியத்தைக் கேள்! நானிறந்தபோதிலு மெனதுகண்கள் பார்த்தன, காதுகள் கேட்டன. நானிறந்தபிறகு சலீம் அக்கட்டிடத்தை யிடித்துக் கீழேதள்ளி அது இருந்த இடத்தைப் பாழாக்கினான். அதைப்பார்க்கவென் மனமெப்படித் துடித்தது! அப்புறம் கொஞ்சகாலம் சென்றபின் நேற்று நமது சபைக்கு வந்திருந்த பாதிரிகளைப்போன்ற சில வெள்ளைக்காரர்கள் திரும்பவு மப்பாழைச் சீர்திருத்தி அக்கட்டிடத்தையும் புதிதாய்க் கட்டக்கண்டேன். நான் கட்டின கட்டிடமழிந்து போனபோதிலும் அதைத் திரும்பவும் கட்டக் கண்டவுடனே என்மனதுக்குக் கொஞ்சம் சமாதானமுண்டாயிற்று.

அபுல்பாஸல்:—(யோசித்து) மஹாராஜ், இந்தக் கனவைக் குறித்து யோசித்துப் பார்த்தாலது சாதாரணமான கனவென்றெனக்குத் தோன்றவில்லை. கனவிலு மிரண்டு விதமான கனவுகளுண்டு. பகலில் பற்பல யோசனைகள் செய்து. அதற்குத் தக்கபடி நமதுமூளையை நாம் உபயோகப்படுத்த, இரவில் நாமுறங்கும்போது தனக்குத்தானே விடப்பட்ட அம்மூளையானது தன்னை யடக்கியாளுகிற அரசனில்லாததால் தனக்கு பழக்கப்பட்டிருக்கிற வழிகளில் தானே அலையத்தொடங்கும். இப்படி யுண்டாகிற கனவுகள் கோர்வையாகவும் விசேஷ தாத்பர்ய முள்ளதாகவுமிரா. சில சமயங்களில் நாம்தூங்கும்போது நம்முடைய சூக்ஷ்மசரீரம் இந்த ஸ்தூல சரீரத்தைவிட்டு வெளிப் புறப்பட்டு சூக்ஷ்ம லோகங்களில் சஞ்சரித்து அங்கிருந்து அநேக அநுபவங்களைக் கிரஹிப்பதுண்டு. இவ்விதம் சஞ்



சரிக்கும்போது, இனி நடக்கப்போகிற விஷயங்கள்கூட சில சமயங்களிலதற்கு (ஆகாயத்தினின்றும் பிரதிபிம்பிக்கப் பட்டுள்ளவைகளாய்)த் தெரியவரும். தங்களுடைய கனவு இவ்விதக் கனவென்றே யெனக்குத் தோன்றுகிறது. நீங்கள் கண்ட கனவும் நடக்கக்கூடிய விஷயங்களைப்பற்றியுள்ளதுதானே. தங்களுடைய குமாரன் சலீமுக்கு என்னிடத்திலுள்ளவிரோதமும் டினில்லாஹி விஷயத்திலுள்ள வெறுப்பும் தங்களுக்கு நன்றாய்த்தெரியும். கனவில்கண்ட ஐந்துமூலைக் கட்டிடமிந்த டினில்லாஹிதான். தங்களுக்குப் பிற்காலம் சலீமதைச் சின்னா பின்னப்படுத்தப் போகிறானென்பதிற் சந்தேகமில்லை

அக்பர்:—இக்கொள்கையை நானேற்படுத்தினேனென்கிற பெருமை யெனக்கு வேண்டாம். எப்படியாவது ஜனங்களுக்கு க்ஷேமமுண்டானால் போதும். ஒரு வேளை எனக்கெங்கே இதனால் அகம்பாவம் வந்துவிடப் போகிறதோ வென்று பகவானிப்படித் தீர்மானித்திருக்கிறார் போலும்.

அபுல்பாஸை.—அப்படி யிருக்கக்கூடும். இக்கொள்கை ஜனங்களுக்கு நன்மையை விளைவிக்கக் கூடியதுதானென்பதற்குச் சாக்ஷி என்னவென்றால், சலீம் அதை நாசப்படுத்தினாலும் அதைத் திரும்பவும் கட்ட, கொஞ்சகாலத்துக்குப்பிறகு வெள்ளைக்காரர்கள் வரப்போகிறார்களென்பதே. ஆனாலெல்லோருக்கும் நன்மையை விளைவிக்கக் கூடியதான இது இப்போதழிந்து போவானேனென்றாலோ, அதற்குத் தகுந்தகாலம் வரவில்லைபோல் தோன்றுகிறது. தேவரீர் அதிபுத்திமானானதால் இருநூற்றைம்பது அல்லது முன்னூறு வருஷங்களுக்குப் பின் ஜனங்களறியப் போகிறதை இப்போதே அறிந்துணர்ந்து விட்டீர்கள். சகல மதங்களிலுள்ள சாரத்தை நீங்களறிந்தீர்கள். எல்லா ஜனங்

களுக்குமது விளங்கவேண்டாமா? விளங்காததால் தானவர்களிப்போது டினில்லாஹியை யநுபவிக்க முடியவில்லை. ஆனாலிந்தவேற்பாடுசெய்தது வீணாய்ப்போகாது. இப்போதிப்புவியி லுண்டாக்கப்பட்டிருக்கிற சக்தி வீண்போகாது தகுந்தகாலம் வரும்போது தன் பலனைக் கொடுக்கும்.

அக்பர்:—ஆம். அது வாஸ்தவந்தான். அதைத்தான் நான் கோருகிறேன்.

அபுல்பாசல்:—பகவான் ஜனங்களுடைய நன்மையையுத்தேசித்தே நம்மை யிந்தமாதிரியான புது ஏற்பாட்டொன்றை ஏற்படுத்தத் தூண்டியிருக்கிறா ரென்பதற் கடையாளங்களனேக மிருக்கின்றன. ஈசனொருசமயம் ஜகதுத்தாரணம் செய்ய வேண்டுமென்று உத்தேசிக்கும் பக்ஷத்தில் அதைசாதிக்க பற்பல விடங்களில் அவ்வவ்விடங்களுக்குத் தக்கபடி சாதனங்களை ஏற்படுத்திக்கொள்வார். நாமிப்போதெல்லாப் பிரஜைகளுடைய ஹிதத்தை உத்தேசித்தும், அவர்களுக்குள்ளிருக்கும் வைரத்தைக் குலைக்க விரும்பியும் பிரயத்தனப்படுவதுபோலவே மீராபாயென்கிற பக்தை மீவார் தேசத்தில் ஜகன்மாதாபோல் நின்று ஜனங்களுக்கு பக்தியைப் புகட்டி யவர்களுக்கு ஹிதத்தைச் செய்து வருகிறாள். இதேமாதிரி அந்தந்த விடங்களுக்குத் தக்கபடி ஏற்பாடுகள் பகவதிச்சையால் செய்யப்பட்டு வருகின்றன.

அக்பர்:—மீவார் தேசத்திலா?

அபுல்பாசல்:—ஆம். மஹாராஜ்.

அக்பர்:—அவள் பெயரென்னவென்று சொன்னாய்?

அபுல்பாசல்:—மீராபாய்.

அக்பர்:—ஓஹோ, கும்பாஜிராணாவின் பத்தினியோ?

அபுல்பாசல்:—ஆம். மஹாராஜ்.



அக்பர்:—அவள் நீ கூட புகழும்படியான அவ்வளவு பெரிய பக்தையா?

அபுல்பாசல்:—மஹாராஜ்! அவளுடைய பக்திக்கு சமானமான பக்தியிருப்பதரிது. பகவானைக்குறித்து பக்தி செய்வதில் அவளுக் கீடானவர்களைக் காண்பது வெகு அரிது. மேலும் அவள் பக்தியோடுகூட சங்கீதத்தையும் கலந்து பகவானை ஆராதிக்கிறாளாம். மார்வார் தேசத்து ராஜவம்சத்தைச் சேர்ந்த தங்கள் மித்திரனான ரத்ன சிங்கினுடைய புத்திரியாய்ப் பிறந்து குழந்தைப் பருவமுதல் கிருஷ்ண பகவானிடத்தில் பக்தியைச் செலுத்தினவளாம். விவாககாலத்தில் தனக்கு விவாகம் செய்துகொள்ளாமல் ஆயுள்முழுவதையு மீச்வரனுக்கே யர்ப்பணம் செய்துவிட வேண்டுமென்கிற அபிப்பிராய மிருந்தபோதிலும் தனது தாய் தந்தையர்களுடைய வார்த்தைக் கிணங்கி கும்பாஜி ராணாவை விவாகம் செய்துகொண்டாள். அவளுடைய அந்தப்புரத்திலொரு திலகம்போல் விளங்கிக் கொண்டிருக்கிறாள். தினந்தோறும் காலையில் அந்நகரத்துக்கு வெளிப்புறத்தில் சகல மதஸ்தர்களும் வந்தாராதிக்கும்படியாக தானே நிர்மித்துள்ள ஓர் கிருஷ்ணாலயத்துக்குச்சென்று கானபூர்வமாய் பகவானைக்குறித்து பஜனைசெய்து, அதைப் பார்க்கவரும் ஜனங்களின் மனதை ஈசனுக்கு வசப்படுத்துகிறாளாம். அவளப்படி பக்தி செய்வதைப் பார்த்துருகாதவர்கள் கிடையாது. அந்நகரத்திலுள்ளவர்களொவ்வொருவரும் தினமெதுசெய்ய மறந்தாலும் கிருஷ்ணாலயத்தில் மீராபாய் பஜனை செய்யும்போது அங்குவந்து அதை யநுபவிப்பதை யொருபொழுதும் மறப்பதில்லையாம்.

அக்பர்:—ஆ! இத்தகைய மாதுசிரோமணியைத் தன் மனைவியாகவுடைய கும்பாஜிராணா என்னபாக்கியம் செய்திருக்க வேண்டும்? இதைக் கேட்கும்போதே எனக்கவ்வாலயத்துக்

குச் சென்று அந்த மாதுசிரோமணியின் பக்தியைப் பார்க்க வேண்டுமென்ற அவா வுண்டாகிறதே. இப்படிப்பட்ட பக்தை யிக்காலத்தி லிருப்பதரிதல்லவோ? ஆச்சரியமா யிருக்கிறது. (யோசித்து) அஃதெல்லாமிருக்கட்டும். நான் மீவாருக்குச்சென்று கட்டாயமந்த பக்தாசேகரியைக் காண வேண்டும், அவளுடைய பஜனையையும் பார்த்துக் களிக்க வேண்டும். பாகவத தர்சனம் பாபவிமோசனம்.

அபுல்பாசை:—தங்களைப்போலொத்த பக்தர்களுக்கு பக்தர்களைக் காண்பதி லோரானந்தம். அவளுடைய பக்தியைப்பற்றி வியந்து பேசாதவர்கள் கிடையாது. தங்களுக்கு மீவாருக்குச் செல்ல விருப்பமிருந்தால் போய் வாருங்கள்.

அபுல்பாசல்:—ராஜ்யபாரத்தைக் குறித்து விசாரப் படவேண்டாம், மஹாராஜ்!

அக்பர்:—நீயு மபுல்பாசையு மிருக்கும்போது அதைப் பற்றினகவலை யெனக்கொருபொழுதும் கிடையாதே. நான் மாறுவேடம்பூண்டு மீவாருக்குச்சென்றுவருகிறேன். இந்த சமாசார மொருவருக்கும் தெரியவேண்டாம்.

(உள்ளே சங்கத்வான முழக்கம்.)

இதோ சங்கத்வானம் முழங்குகின்றது. சபைக்கேகலாம், வாருங்கள்.

(எல்லோரும் போகிறார்கள்.)

(காட்சிமுடிந்தது.)

R. ஸ்ரீநிவாஸையர். M. A

---

உ

சற்குருப்ரயோகம:-

## ஸ்ரீதேவாபி, மருகுருநாத ரிரட்டை மணிமாலை.

---

வேண்பா

திருவார் பரமகுரு தேவாபி தேவப்
பெருமான் றிருவடியைப் பேணிக்—குருவாகக்
கொண்டால ருந்துயர்போங், கூறரிய முத்திநெறி
கண்டு கொளலாமனமே காண்.

கட்டளைக் கலித்துறை

கண்டார் வியக்கு மருகுருநாதன் கருணை பெற்றுக்
கொண்டாற் குறையிலை நெஞ்சே நின்மூடக் குணங்களற்று
வண்டார் மலர்ப்பதங்கண்டாரைக்கண்டு வணங்கி நிற்கப்
பண்டார் பவமற்றிருமாக்கு ஞானம் பலித்திடுமே

வேண்பா

பாலித்தனின் கடனும் பக்தி செய லென்கடனு
மாலிக்குந்தேவாபி யாண்டவனே—கூலிக்கு
வந்தவ னென்றுன்னைய் மகவெனுமோர் சம்பந்தஞ்
சிந்தையு வந்தன்புநிலை சேர்

கட்டளைக் கலித்துறை

சேர்க்குந்தாமிலை யென்றுரைத்தா லென்னசெய்குவனிப்
பார்க்கு ளெனைப்புரப்பாரிலை யொன்றுசெப் பக்தி மிருந்
தார்க்கு நின்றொண்டர் வழித்தாகவா வதருள்புரிந்தே
யீர்க்கும் படிக்கருள் செய்வாய் மருகுருவென்னையனே.

வேண்பா.

அப்பனெனுந் தேவாபியாண்டவா நீ குருவை
யெப்படியுற்றின்பமெலா மெய்தின-யிப்படியென்
றெற்கருளினலடியே னேத்திப்பலகாலுஞ்
சற்குரு வென்றுன்னத்தகும்.

கட்டளைக்கலித்துறை:

தக்கநற் சாந்தந்தயை பொறை சத்தியஞ்சாருமன்ப
ரெக்குலமாயினு மன்னோரிழிவு மிறவினிய
பக்குவமாக்கும் பரம மருகுரு பாவகவென்
துக்கமகற்றல் பளுவோ சொலீச துரந்தரனே

வெண்பா.

துரந்தரனே தேவாபி தூயநின் பொற்பை
நிரந்தரமாயுன்னுகின்ற நெஞ்சும்—பரந்தமன
முன்னிற் கரைந்தொடுங்கியுய்யவுமே யிப்பிறப்புத்
தன்னிற் பலிக்கவருள் தா

கட்டளைக்கலித்துறை.

தாதா மருகுருநாதா விதரகித சாதனங்க
ளேதாவறுந் துணிவில்லாவறி விலியின்புறவுன்
பாதாம் புபத்தைப் புகழ்ந்தோது பாவையும் பக்தியுடன்
ஓதாது ஞற்றுந்தியானமு மேற்றருளூட்டுவையே

வெண்பா.

ஊட்டுமே ஞானப்பா லோதரிய முத்திநெறி
காட்டுமே மாதரது காதனேய்—ஓட்டுமே
தேவாபி ஞானகுரு சிட்டரடிக்கன்பியற்றி
நாவால் வழுத்துவதினால்.

கட்டளைக்கலித்துறை.

வழுத்து மகத்துக்க ணின்புறநாடி வருந்தியன்பு
பழுத்து வந்தாநந்தம் பெற்றனர் யான்மிகு பாவிகள்போற்
கொழுத்துப் புசித்துக் குடித்த மனங்குரங் கொத்தவெனை
யிழுததுப் புரக்கவல்லா யோமருகுருவீசரனே.



வெண்பா.

ஈசரனே தேவாபி யேழையேற்கிப் பிறப்பிற்
பாசபந்த சஞ்சிதத்தைப் பாழாக்கு—நேச
நிருவிகற்ப நிட்டை நிலைக்குமோவன்றி
குருபணியிற் கூட்டுவையோ கூறு.

கட்டளைக்கலிததுறை.

கூற்றுவன் வந்தபின் கூற்றையுதைக்குங் குருபரனை
யேற்றுவ மென்றெணவுண்டோ விடானவ னெம்மனனே
சோற்றுத் துருத்திக் கண்காற்றுள நாளிற்றுரிபநிலை
சாற்று மருகுருநாதனைப் போற்றவுந் தாழ்விலையே.

வெண்பா.

தாழாது ஞற்றுந் தவத்தோர்பாற் சென்றிருளைப்
பாழாக்குந் தேவாபி பாதமலர்—தாழாது
ஈடணையிற் சிக்கியிழிமனமே நீதவறிற்
கூட வரத் தக்கனவோ கூறு.

கட்டளைக்கலித்துறை.

தக்கநற் சாதுக்க ளேற்றுந் தயாநிதி சாந்தமரு
ளொக்கத் திரண்டுருக்கொண்ட மருகுரு வுத்தமநின்
பக்கல் வந்தேற்றிப் பணிபுரிந்தார்க்கருள் பாக்கியமெற்
கிக்கண நல்கிக் கரையேற்றுவாய் மிகவின்புறவே.

வெண்பா.

இன்பமிகுந்தேவாபி யென்னரசே கேண்மோநின்
அன்பாடிக் கன்புளவென்னார்வத்தை—யன்பில்லா
வல்லவித்தை யென்னுளத்து வந்தெதிர்க்க நின்பேரைச்
சொல்லவுமாயந் தோடியதென்சொல்

கட்டளைக்கலித்துறை.

சொல்லவுங்கேட்கவு மென்போலிழிந்தவர் தொல்லுலகி
லில்லவுமில்லையினிப் பிறப்பாருமி லென்புகலவேன்
வல்லவருட் கிருபாநிதி யென றுனை வந்தடைந்தேன்
நல்லவனுக்கத் தகுமே மருகுரு நாயகனே.

வெண்பா.

நாயகனே தேவாபி நாயகனே நால்வேத
நாயகனே நாயேற்கு நாயகனே—தாயகம்வே
றில்லே யெனமாயை, யேமாற்று, ளேமாறு
வெல்லே சொலிவைக்க வெண்.

கட்டளைக்கலித்துறை.

அருள்சேர் திருமுகமாநந்த நோக்கு மமைந்த செஞ்சொற்
பொருள் சேரமல மருகுருநாதவென் புத்தியின் கண்
மருள் சேருந்துயர் மாய்ந்து பசாந்த மனத்துறவே
தெருள் சேர்பரமுத்தி சேர்வதெக்காலஞ்சொல் தேசிகனே

வெண்பா.

தேசிகனே தேவாபி தேசிகாவுன் புகழைப்
பேசுதற்கென் வாக்கினின்று பேசினு—யாசுகவி
வித்தகர்க்கு மெட்டாமிகப் பெரியோய் நாயேற்குச்
சித்த சுத்தி யீந்துனடிசேர்.

கட்டளைக்கலித்துறை.

சேருங்கதிக்கருள் செய்தாய் மருகுரு சித்தவினி
நேரும் பிறவிகட் கஞ்சேனிறப்பது நிச்சயமென்
றேரும் பொழுதச்ச மேலிடலானுயர்ந் தோயடியேன்
றேரும பயந்தந்தென் சிரஞ் சூட்டுன்றிருவடியே.

ஓம் தத் ஸத்.

M. வேதநாயக ஸ்வாமிகள்.

---

## குப்த வித்யை.

(74-ம் பக்கத் தொடர்ச்சி.)

---

இஃதிப்படி யிருக்க, நேரான ஆராய்ச்சியின் பேறி லும், விவேகத்துடனும் தெளிந்து கொள்ளற்பாலனவாயே உண்மைகளேயே குப்தவித்யையானது ஆதாரமாக உடை யது. அவ்விதம் அநேக வருஷங்களின் ஆராய்ச்சியின் பயனாகவும், படிப்பின் பயனாகவும் ஏற்பட்ட என் அநுப வத்தைக்கொண்டே மேற்கூறியவற்றை அவ்வளவு உறுதி யாயும் திடமாயும் வற்புறுத்தினேனே யொழிய வேறல்ல. அறிவின் விளக்க மேற்படாமல் அக்ஞான அந்தகாரத்தி லேயே இருந்துகொண்டும், அதற்கப்பால் ஞான வெளிச்ச மிருக்கின்றதென் றறியாமலும், தாமிருக்கும் அந்தகாரமே போதுமென்றும் இருப்பவர்களைத் தவிர மற்றெல்லோரும் பிரபஞ்சத்தின் அழகையும், விநோதத்தையும், பெருமை யையும் தம் புலனறிவுகளை விருத்திபெறச் செய்வதன்மூல மாய் நன்கறிந்துகொளல் ஸாத்தியம்.

இரண்டாயிரத்து ஐநூறு வருஷங்களுக்குமுன், இந் திய ஞாநாசாரியர்களுக்குள் சிரேஷ்டரான பகவான் கௌ தம புத்தர் தம் சிஷ்யர்களுக்கு என்ன சொன்னார்? "அழப் பாடித் துதித்து அலராதேயுங்கள், கண்களைத் திறந்து, பாருங்கள். கண்களின் முன்னுள்ள திரையைநீக்கிப் பார்ப் பீர்களானால், தத்துவமானது உங்களைச்சுற்றி எல்லாப் பக் கங்களிலும் நிதர்சனமாய் உள்ளது. அதன் மேன்மையும், விமரிசையும் இம்மட்டென்று நாவினாலுரைக்க முடியாது. இதுவரை உங்கள் மநத்தாலெண்ணிக்கூட இராத மகத் துவத்துடன் கூடியது அத்தத்துவம் என்றும் அறிவீர்கள்," என்று போதித்தாரல்லவா?

நான் சொல்லும், ஸூக்ஷ்ம திருஷ்டியைப்பார்க்கிலும் மிகப் பாரமார்த்திகமான நிலையைப்பற்றியே பகவான் புத்தர் அவ்விதம் கூறியுள்ளார். அப்பாரமார்த்திக நிலைக்குப் போகக்கூடிய வழியில் ஒரு படியைப் பற்றித்தான் நான் இப்போது பிரஸ்தாபித்தது. ஸூக்ஷ்ம திருஷ்டியால் உண்மை முழுமையையும் நாம் அறியாவிட்டாலும், இப்போதைவிட எத்தனையோமடங்கு ஏராளமான உண்மைகளை அறிந்து கொள்ளலாம். இவ்வித்யையிற் பழகாதபோது தம் யுக்தியின் விசாரத்திற் கெட்டாத விஷயங்களை யெல்லாம், ஸூக்ஷ்ம திருஷ்டி பெற்றமேல் அவைகளின் உண்மைகளுடன் அறிந்து, அவர்கள் அவ்வறிவின்பயனாய், இதுவரைகொண்ட தப்பபிப்பிராயங்களைத்தாமே மாற்றிக்கொள்வர். இதுவரை நாம் குறைவான பார்வையுடையராய் இருந்தமையால், சொற்ப விஷயங்களையே பார்க்கும் இயற்கையுடையராயிருந்தோம். இதுவரை நாநாவித விஷயங்களை மிகக்கீழான நிலையினின்றே பார்த்துவந்தோம். அதனால் தான் எல்லாம் மூடு வித்தையாய்த் தோன்றியது: ஒன்றுக்கும் மற்றொன்றுக்குமுள்ள ஸம்பந்தத்தை அறிய இயலவில்லை. இப்போதோ தீர்க்கமான பார்வையுடன் கூடியும், அதியுன்னத நிலையினின்றும் திருஷ்டியானது ஏற்பட்டுள்ளமையால், சம்பந்தமற்றனவாகக் காணப்பட்டவைகளெல்லாம், பூர்ணமான ஒன்றின் பற்பல பாகங்களென்றும் அறிதல் இலகுவாம். ஸ்ூக்ஷ்ம திருஷ்டியால், மரணத்திற்குப் பின் ஜீவன் எங்கேபோகிறான் என்னும் விஷயத்தைப் பற்றிய சண்டைகள் அனைத்தும் ஒழிகின்றன. ஸமாதானம் ஏற்படுகின்றது. நமது வைதிக கோஷ்டிகள் யுக்திக்கு ஒவ்வாமல் முரட்டுத்தனமாகச் சொல்லும் பல விஷயங்களைத் தெளிவுறுத்துகின்றது. அதனால் நமது மௌட்டியத்தை ஒழித்து, நமது அறியாமையால் விளைந்த பயத்தைக் காரணகாரிய விளக்கத்தினால் போக்குகின்றது.



இவைகளெல்லாவற்றிற்கும், மேலாக நமது தினசரி நடபடிக்கைகள் சம்பந்தப்பட்ட மட்டில், நாம் புதிய உலகத்திலேயே பழக ஆரம்பிக்கிறோம். புதிய உலகமென்றால், பழைய உலகத்தின் ஓர் பாகந்தான். முன்னமே கூறியபடி, ஒவ்வொன்றிற்கும் ஸூக்ஷ்மமான பாகம் ஒன்றிருக்கிறது என்பதையும், இவ்வித ரஹஸ்யங்களை நாம் அறியாவிடில், நாம் ஸர்வ ஸாதாரணமென்று கருதிச் செய்யும் காரியமொவ்வொன்றிற்கும் நிச்சயமாய்ப் பலனுண்டென்று அறிவதற்கேதுவில்லையென்பதையும், ஸூக்ஷ்ம திருஷ்டியால் தெளிந்து கொள்வோம். இப்போது டெலிபதி என்று சொல்லப்படுவதின் தத்துவத்தை அதனால் நன்றாயறிய இயலுவோம்; எங்ஙனமெனில், உஷ்ணம், வெளிச்சம், மின்சாரசக்தி ஆகிய சக்திகள் எவ்விதம் அலைகள் ரூபமாக வெளிச் செல்வனவாகக் கருதப்படுகின்றனவோ' அவ்விதமே, நம் எண்ணங்களும், இன்னும் அதிக இலேசான பிரகிருதி தத்துவத்தில் மட்டும் வெளிப்படக்கூடிய அலைகளைத்தவிர வேறொன்றுமில்லை. ஆகையாலல்லவோ, நம்முடைய ஸ்தூலசரீரத்து அமைந்துள்ள இந்திரியங்கள் எண்ணங்களை கிரஹிப்பது கூடாததாக விருக்கிறது. எண்ணங்களின் அலைகளைப்பற்றி நாம் தெரிந்துகொண்டால், எப்படி அவ்வெண்ணங்கள் காரியப்படுகின்றன வென்பதையும், எண்ணங்கள், அவைகளின் தன்மைக்கேற்ப, நன்மையையோ, தீமையையோ விளைக்கக்கூடிய ஒரு அரிய பெரிய சக்தி என்பதையும், அனைவரும், இவ்வரிய சக்தியானது தம்மிடத்துள்ளதெனும் உண்மையை அறியாவிடினும், அவரவர் தத்தம் மநத்தால் எதையும் நினைக்குந்தோறும் இச்சக்தியை உபயோகிக்கவே செய்கின்றனரென்பதையும், இச்சக்தியின் இயற்கையை அறியும்பக்ஷத்தில் முன்னினும் நூறுமடங்கு பிரயோஜனகரமாகும்படி உபயோகிக்கலாம் என்பதையும், எண்ணங்களைப் பற்றி இன்

னும் ஆழ்ந்த அறிவுடையோர் அவ்வெண்ணங்களுக்கு ரூபங்களையுண்டாக்கவும், அந்த ரூபங்களால் தம்மையும் பிறரையும் இன்னும் எத்தனையோ விதங்களில் பயன்பெறச் செய்து கொள்ளலாம் என்பதையும் நாம் நன்றாயறிவோம்.

குப்த வித்யையிற் பழகுவோன், ஸ்தூல இந்திரியங்களின் உணர்வுக்கெட்டாத ஸூக்ஷ்ம விஷயங்களை மற்றவர்களைக் காட்டிலும் விசேஷமாகவே அறிந்து, அதன் பயனாகத் தான் செய்யும் எக்கருமத்திற்கும் ஏற்படக்கூடிய பலா பலன்களையும் இன்னவெனத் தெளிந்து கொள்வான். இன்ன முடிவான பிரயோஜனத்தை நோக்கியே, இவ்வுலக வாழ்க்கை அகில ஜீவர்களுக்கும் நடைபெறுகிறது, என்று மற்றவர்களைக் காட்டிலும் வியக்தமாக இவன் அறிவானதையால், இவன் தன் வாழ்க்கையையும் அவ்வறிவுக்கு இணங்க, சீர்ப்படுத்திக் கொள்கிறான். அநேக விஷயங்களில், மத்யகாலத்துப் பூர்வீகர்களைக் காட்டிலும் முற்றிலும் வித்யாஸமான விதமாகவே நம்முடைய தற்கால வாழ்க்கை நடைபெறுகின்றது. ஸுக ஆதார விதிகள் பல, தற்காலத்தில் நவீனமாய்க் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன, அறிவாளிகள் அவ்விதிகளை யறிந்து அதற்கேற்ப ஒழுக்கத்தையுங் கைக்கொண்டு, அதனால் முன்னைக் காட்டிலும், தீர்க்க காலம் சுக ஜீவிகளாயிருக்கலாம் என்பதையும் ஸித்தாந்தப்படுத்தியிருக்கின்றனர். படிப்பு அறிவுஇல்லாதவர்கள் இன்னும் எத்தனையோ பேர்கள் இருக்கின்றனர். அவர்கள் சுகாதார விதிகளை அறிய இயலாதவர்கள், இன்னும் சிலர் சுகாதார விதிகளை யறிந்தபோதிலும், அவைகளை யநுஷ்டிப்பதிற் கவலை கொள்கிறார்களில்லை. வியாதியை உண்டுபண்ணும், நுண்ணிய கிருமிகள் கண்ணுக்குப் புலப்படாதனவாதையால், அவைகளை அதிக கவலை யெடுத்துத் தவிர்க்கவேண்டியது அநாவசியம் எனப் பலர் இன்னும் அறிவீனத்தால் நினைப்புக் கொள்கின்றனர். இவர்



கள், புதிதான விஷயங்களை, உண்மையாயிருப்பினும், சிரத்தையுடன் நம்பமாட்டார்கள். வசூரி, காலரா முதலிய விஷ வியாதிகள், இத்தகையோரைத்தான் முதலில் பற்றிப் பிறகு பிறரையும் வியாபிக்கின்றன. இவர்கள் கால, தேச, வர்த்தமானங்களை யநுஸரித்து நடக்கத் தெரிந்துகொள்ளாதவர்கள். தவிரவும் இவர்கள் மட்டும் துன்பம் அநுபவிப்பதல்லாமல், இவர்களுடைய அஜாக்ரதையால் ஒரு ஜில்லா முழுமையுமே தொத்து வியாதியைப் பரப்புவதற்குக் காரணஸ்தர்களாகிறார்கள்.

குப்த வித்யையைப் பற்றியும் ஸாதாரண ஜனங்கள் இதே மாதிரிதான் கவனக் குறைவாயிருக்கின்றனர். பூதக் கண்ணாடியானது வியாதிகளை வளர்க்கும் நுண்ணிய கிருமிகளை, கண்ணுக்குப் புலப்படும்படி செய்தபடியால், பௌதிக சாஸ்திரிகளும், வைத்தியர்களும், மற்றுமுள்ள விவேகிகள் பலரும் அவ்வறிவுக் கேற்றபடி தம் ஆசாரங்களை ஒழுங்கு படுத்திக்கொண்டு, அவ்வாராய்ச்சியின் பலனைப் பெறுகிறார்கள். மற்றையோர்களோ எப்போதும் போலவே உளர். இதேமாதிரி, ஸூக்ஷ்ம திருஷ்டியால் எண்ணங்களின் (ஸங்கற்ப சக்தி) சக்தியையும், இன்னும் சாமான்யர்கள் அறியாத பல அற்புத சக்திகளையும்பற்றி ஸவிஸ்தாரமாக, குப்தவித்யாயோகிகள் பலர் பல புதியவிஷயங்களை வெளிப்படுத்தியுள்ளார்கள். நல்ல விவேகிகள் பலர் இவ்விஷயங்களால் பயன் பெறுகிறார்கள். அவிவேகிகள் எப்போதும் போலவே கவனம் குன்றியவர்களாயிருக்கின்றனர். இவர்கட்குத்தான், அப்ரத்யக்ஷமான விஷயங்கள் எல்லாம் அமுக்ய மென்பதல்லவோ கொள்கை? ஆகையால் அநாவசியமான துன்பத்திற்குள்ளாகிறார்கள்: இவர்கள் கால விசேஷங்களுக்குத் தக்கவாறு விரைந்துசெல்ல இயலாதவர்கள்.

இத்தகையருக்கு, ஸூக்ஷ்மமான நியதிகளுக்கு அநுஸரணையாய் நடக்கத்தெரியாததால் ஏற்படும் கஷ்டங்கள் அளவிறந்தன. தவிரவும் இவர்கள் அநுபவிக்கும் சுகமுங்கூட, உண்மையான சுகவாரிதியில் ஒரு லவலேசம் என்று மட்டும்தான் கருதற்பாலது. ஏனெனில், தேர்ந்த சித்ரங்கள், இனியகானங்கள், சிறந்த கவித்வம், ஸத்கிரந்தங்கள், மத அநுஷ்டானங்களில் முக்கியகிரியைகள், சௌந்தர்யம் வாய்ந்த பிரகிருதிப் பொருள்களின் காட்சி இவைகளால் ஏற்படும் ஆநந்தமெல்லாம் இவர்கள் ஸ்தூல அறிவுக்குத் தகுந்த மட்டில் தானே யிருக்கும், ஸ்தூல திருஷ்டிக்குப் புறம்பாக, ஸூக்ஷ்மமான் புலனறிவால் நுகரக்கூடிய அழகின் மேன்மை நாவினால் உரைக்கத்தகாததன்றோ!

இவ்விதமான ஸூக்ஷ்ம திருஷ்டியானது ஒவ்வொரு மனிதனுக்கும் இருப்பினும், போதுமான அளவு பரிபக்குவமடையாமலிருக்கின்றது. அதைப் பரிபக்குவமடையச் செய்தற்கு, மிகுந்த சிரமத்தோடு நீடூழிகாலம் உழைத்தல் வேண்டும். முடிவின் பெருமையை உத்தேசிக்க எவ்வளவு சிரமமாயினும், முயலவேண்டிய தவசியமே. ஆனால், உயர் நலமமைந்ததும் பரார்த்தமுமான நோக்கத்தாலன்றி, கீழானதும், ஸ்வார்த்தமுமான லாபங்களைக் கருதி ஸூக்ஷ்ம திருஷ்டியைப்பெற முயல்வானாகில், அவன் துன்பத்தை எதிர்கொண்டழைப்பவனாவான்.

ஆனால், ஆத்மசக்திகளை மலரச் செய்யும்பொருட்டு தீவ்ரமான பிரயத்னங்களைக் கைக்கொள்வதற்கேற்ற ஸாவகாசம் கிடைக்காத ஸாமானிய லௌகிகர்களுங்கூட குப்த வித்யா சாஸ்திரங்களைப் படிப்பதனால் நன்மையடையாமற் போகார். ஏனெனில் நம் ஒவ்வொருவரிடத்தும் பூதக்கண்ணாடியானது கைவசமில்லாவிடினும், பூதக்கண்ணாடியால் ஏற்பட்ட ஆராய்ச்சிகள் எல்லாம் சாஸ்திரங்களாகத்



தொகுக்கப்பட்டிருக்கிறபடி, சுகாதாரத்திற்குரிய வழிகளை நாம் அநுசரிப்பதால் பயன் பெறுகிறோமல்லவா? வியாதியை உண்டுபண்ணும் நுண்ணிய சிற்றுயிர்களை நாம் பார்த்திராவிட்டாலும், பார்த்திருப்பதாகச் சொல்லும் சாஸ்திர நிபுணர்களின் புத்திமதியைக் கேட்டு, அவைகள் உள்ளனவென்றே கருதிச் சுகாதார வழிகளைக் கைப்பற்றலாம். அதேமாதிரி ஸூக்ஷ்ம திருஷ்டி ஒருவன் பெறாமலிருப்பினும், ஸூக்ஷ்மதிருஷ்டி பெற்றவர்கள் எழுதும் கிரந்தங்களைப்படித்து, அதனால் நலம் பெறலாம்; நம்முடைய ஸ்தூல இந்திரியங்களுக்குப் புலனாகாத அழகும் மேன்மையும் எவ்வளவோ உள்ளனவாயினும், அவைகளையெல்லாம் உள்ளஉள்ளபடி அறிய இயலாவிடினும், நாம் அறியாது நேரக்கூடிய தீங்குகள் அனைத்தையும் ஒழிக்கலாம் என்பதையும், நன்மை பயக்கக்கூடிய ஸூக்ஷ்ம சக்திகளை எப்படிக் கையாளலாம் என்பதையும் சுலபமாய் நாம் அறிந்துகொள்ளக்கூடுமன்றோ! ஆகையால் ஒருவன் நேராகவே ஸூக்ஷ்ம விஷயங்களை பார்க்கக்கூடாமற் போனாலும், அவைகள் உள்ளன என்பதை அறியலாம். எப்படியெனில், எலக்ட்ரிக் மோடார் வண்டியை ஓட்டுகிறவன், எலக்ட்ரிஸிடியை பார்த்திருக்கவேண்டியதும், மின்சார சக்தியைப் பற்றிப் பூர்ணமாயறிய வேண்டியதும் அநாவசியம்; ஆயினும் மின்சார சக்தியொன்று உள்ளது என்றுமட்டும் அறிகிறான். அதனால் எலக்ட்ரிக் மோட்டார் வண்டிகளை ஓட்டவும் இயலுகிறான்.

நாம் வஸிக்கும் உலகத்தைப்பற்றி எவ்வளவு அறியக்கூடுமோ, அவ்வளவையும் அறிய முயலவேண்டும். விஞ்ஞான முறையில் நாம் பின் தங்கிவிடுவோர்களா யிருத்தலொண்ணாது. ஆர்ஷேயம் (ரிஷிகளிடமிருந்து வந்தது) என்றும் ஸநாதனம் (பழமையானது) என்றும் சொல்லத்தக்க [illegible]

முறையே, ஓர்புதிய நோக்கால், தற்கால நவீன வழிகளில் குப்தவித்யா சாஸ்திரம் எடுத்துரைக்கின்றது. எவ்வழியிலும், எத்துறையிலும், நமக்கு எவ்வளவுக்கெவ்வளவு அறிவு உண்டோ, அவ்வளவுக்கவ்வளவு சக்தியும் நமக்கதிகம் என்பதை நாம் அறிதல்வேண்டும். ஏனெனில் நம் முயற்சியானது நற்பயன் பெறவேண்டுவோமானால்' சக்தியும், ஞானமும், ஊக்கமான உழைப்பும் மிக அவசியம். தத்துவங்களை நம் மநத்தால்மட்டும் கிரஹிப்பதற்கும், தானே யநுபவித்தறிவதற்கும் ஏராளமான வித்யாஸமுண்டு. ஸாதாரணமாக நம்மனோருக்கு ஏற்படும் தினசரி யநுபவங்களின் ஸூக்ஷ்மமான விஷயங்களை காரண சரீரம், மாநஸிக சரீரம், காமனாசரீரம், இவைகளினால் ஏற்பட்ட ஸூக்ஷ்ம திருஷ்டிக்குப் புலப்பட்டவாறு குப்தவித்யா சாஸ்திரத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. த்ரிலோகாதீதமான புத்திதத்துவத்தாலமைந்த சரீரத்தைக்கொண்டு பார்க்கப்படும்போது, இவ்வுலகத்தில் பிரதிதிநமும் நடைபெறும் ஸாமான்ய விஷயங்களின் ஸூக்ஷ்மங்கள் மநவாக்குக் கெட்டாதவிதமாய் விளங்குகின்றன. ஆகையால் அதைப்பற்றி எதுவும் எழுதுதல் பயனற்றதே. அவ்வுலகத்தில் ஏற்படும் எவ்வநுபவமும் அநுபவியினுள் அமைந்துளதேயன்றி, அநுபவிக்குப் புறம்பாக ஏற்படுவதே இல்லை. அவ்வநுபவங்களின் மேன்மையையும் பெருமையையும் அநுபவியானவன் பார்க்கிறான் என்று நாம் சொல்லவொண்ணாது, ஆனால் அம்மேன்மையையும் பெருமையையும் தனக்குள்ளே உணருகிறான்.

குப்தவித்யா சாஸ்திரமானது, ஸூக்ஷ்மலோகங்களைப் பற்றியும், அவைகள் சம்பந்தப் பட்டமட்டில் நம்முடைய திநசரி நடபடிக்கைகளைப் பற்றியும் விரித்துரைக்கின்றது,



அவைகளை மூன்று விபாகங்களாக வகுத்துக் கூற[illegible] தமஸ், ஸத்வ, ரஜஸ் என்ற முக்குணப் பிரதானர்களாய் நாம் எப்படி வெளிவிஷயங்களால் பாதிக்கப்படுகிறோம் என்பதையும், நம்மை நாமே எப்படிப் பழக்கம் செய்து கொள்கிறோமென்பதையும், பிறரை நாம் எப்படி பாதிக்கிறோம் என்பதையும் விவரமாய்க் கூறுகின்றது. விஷயங்களின் உண்மையான நிலைகளை விவரிக்கும் இந்த ஸத்[illegible]தைப் படிப்பவர்கள் தாமே அவ்வறிவின் பயனைக்கொண்டு குப்த வித்யையின் உண்மைகளை நிச்சயித்துக்கொள்வர்.

C. W. லெட்பீடர்.

---

## நன்மொழி.

---

உடலெலா முயிரெலா முளமெலாம்
உணர்வெலா முள்ளன வெலாங் கலந்தே
யொளிமயமதாக்கி இருள்நீக்கி எக்காலத்தும்
உதயாத்தமானமின்றி
யிடலெலாம் வல்ல சிவ சத்திகிரணங்கியா
யேகமா யேக போக
இன்பநிலை என்னுமொரு சிற்சபையினடுவே
யிலங்கி நிறைகின்ற சுடரே
கடலெலாம் புவியெலாம் கனலெலா வறியெலாம்
ககனெலாங் கண்ட பரமே!
காணாத பொருளெனக் கலையெலாம் புகல்வென்
கண்காண வந்தபொருளே
தொடலெலாம் பெறவெனக் குள்ளும் புறத்து
மெய்த்துணையாய் விளங்குமறிவே
சுத்தசிவ சன்மார்க்க நிதியே யருட்பெருஞ்சோதி
நடராஜபதியே,

## சிறுவர்க்குரிய விஷயம்.

### அஹிம்ஸை அல்லது ஜாஜலியும் துலாதாரும்

---

முன்னொரு காலத்தில் ஜாஜலி என்ற ப்ராஹ்மணர் ஒருவர் இருந்தார். இவர் ஒரு தபஸ்வீ. காட்டிலுள்ள கனி, கிழங்குகளை உண்டு, கந்தையும் தோலும் உடுத்து, வெகு காலமாகக் கொடியதோர் தவம்புரிந்து வந்தார். தன் தவத்தைத் தானே மெச்சி, பிறரைக் காட்டிலும் மிகச் சிறந்தவரென்று தனக்குள் கர்வமடைந்தார்.

"நான் என் தவமஹிமையால் அதிகப்புண்யம் சம்பாதித்திருக்கிறேன். இந்த லோகத்தில் என்னைப் போன்ற புண்யசாலி ஒருவருமில்லை" என்று வீணாய் ஒரு நாள் தனக்குள்ளே பிதற்றிக் கர்வமடைந்தார்.

"அப்பா ஜாஜலி! பிதற்றாதே, துலாதரர் என்றொரு பெரியவர் இருக்கிறார். அவர் பகலெல்லாம் சரக்குகள் வாங்கியும், விற்றும் வியாபாரம் செய்யும் வணிகர் ஆவர்; உன்னைவிட, சாந்தம், ஞானம் முதலிய உத்தம குணங்களாற் சிறந்தவர்; அவர் கூட இவ்விதமாய்ப் பிதற்ற அருகர் அல்லரே" என்று ஆகாயத்தில் அசரீர வாக்கு ஒன்று உண்டாயது. பிராஹ்மண தபஸ்வியை விட வியாபாரஞ் செய்யும்வணிகனே சிறந்தவன் என்பதைக் கேட்கப்பொறாமல் மேற்சொல்லிய துலாதரரைத் தானே நேரில் போய்ப் பார்த்து அவர் எப்படிப் பட்டவரோ என்று அறிய எண்ணங்கொண்டு புறப்பட்டார் ஜாஜலி.

பலவிடங்களில் தேடி, அநேக வருஷங்கள் கழிந்தபின், காசிக்ஷேத்திரத்தில் கடைத்தெருவில் வெகு தாழ்

---

* ஸெண்டரல் ஹிந்து காலேஜ ஸ்தாபகர்களால் ஹிந்து வாலிபர்களுடைய நன்மையை உத்தேசித்து எழுதப்பட்ட ஆங்கில வாசகத்தின் தமிழ் மொழிப்பெயர்ப்பு.



மையாய் ஓரிடத்தில் அமர்ந்து துலாதரர் வியாபாரஞ் செய்வதைக் கண்டார்.

துலாதரர் ப்ராஹ்மணரைக் கண்டதும் தன் ஆஸனம் விட்டெழுந்து, க்ரமப்படி இருகை கூப்பி வணங்கி நின்று அவர் தன்னிடம் வரநேர்ந்த காரணத்தைத் தெரிவித்தார். தன் ஞானப்பெருமையால் ப்ராஹ்மணரையும் அவர் தவத்தையும் நன்கு அறிந்தவராகையாலும், விஷயங்களின் இயற்கையையும், கழிந்தன, நிகழ்வன, கழிவன அறிந்தவராகையாலும், ப்ராஹ்மணர் ப்ரமிக்கும்படி முன்னரே அவர் கேட்ட அசரீரவாக்கைப் பற்றியும் எடுத்துச் சொன்னார். "வணிகன் மகனாகிய நீ, வாணிகத்தில் அழுந்திக் கிடக்க வேண்டியிருக்க, இத்தகைய பேரறிவு எப்படி அடைந்தாய்!" என வியந்து கேட்டார்.

வெகு தயவாய் துலாதரர் சொல்லுகிறார்:—"நான் ஒரு ஜீவனுக்கும் ஹிம்ஸை செய்கிறதே இல்லை. இதுவே என் நோன்பு: அஹிம்ஸையைப் பழகுவதால் இப்பேறிவு எனக்குக்கிட்டியது. யாவருக்கும் நன்மையே புரிந்து எவருக்கும் தீமை விளைவிக்காது, ஒருவரையும் பகைத்துச் சண்டையிட்டுக் கொள்ளாமல், இதுவரை காலங்கழித்து வந்திருக்கிறேன். இந்த நடத்தையைத் தான் ஞானிகள் நன்னடக்கை என்பர். ஞானியாக விரும்பும் ஒருவன் இவ்வழிபற்றியே நடத்தல் வேண்டும்."

பின்னும் சொல்லுகிறார், "தானம், தவம் முதலியவைகளை விட அஹிம்ஸையே சிறந்தது. இதைவிட அதிக மேலான தர்மம் ஒன்றும் கிடையாது. யாகத்துக்காவது ஆகாரத்துக்காவது ப்ராணிகளைக் கொல்லுதல் ஆகாத கார்யமாகும்; அவைகளை அடிப்பதும் வேறு எவ்விதத்திலும் ஹிம்ஸிப்பதும் மிகக் கொடுமையாகும்.

இதோ, பாரும் (அங்குள்ள ஆடுமாடுகளைக் காட்டி) ஆடுகளுக்கும் ஆட்டுக் குட்டிகளுக்கும் உள்ள அன்பை என்னவென்று சொல்வேன்! பசு தன் கன்றை நக்கிக் கொடுத்து அதன் தினவைத் தீர்ப்பதைப் பார்த்துத் தெரிந்துகொள்ளும். இவைகளுக்கும் நம்மைப்போல், அன்பு என்ற வாத்ஸல்யம் உண்டென்பதை நம்மவர் அறியவில்லையே? கன்றைப் பசுவினின்று பிரித்தலும், குட்டியைத் தாயினின்று பறித்தலும் அஹிம்ஸை ஆகுமா? வண்டியிழுக்கவும் பாரஞ்சுமக்கவும் நம்மவர் மாடு, குதிரைகளை உபயோகித்தும் அவைகளை அடித்தும் மிரட்டியும் வருகிறார்களே, இது தர்மமா? அஹிம்ஸை ஆகுமா? நீரே, சொல்லும். வேதப் புஸ்தகங்களெல்லாம் ஒருமித்து 'அஹிம்ஸா பரமோ தர்ம:- அதாவது பிராணிகளுக்கு ஹிம்ஸை விளைவியாதிருப்பதே முதல் கடனாகும்'' என்று முறையிடுகின்றன.

இவைகளைப்பரிவுடன் கேட்ட ஜாஜலி முனிவரும், துலாதாருடைய நடத்தையை அதிகமாய்க் கொண்டாடித் தனக்குண்டாகிய பல சந்தேகங்களை அவரிடம் கேட்டுத் தேர்ந்தார். இவ்விதமாக அஹிம்ஸையே பரம தர்மம் என்றும், அதுவேஞானத்துக்கு வழிஎன்றும் ஒருப்ராஹ்மணர் சாதாரண ஒரு வணிகரிடம் கேட்டறிந்தார். பிறகு அவர்

"ஆதலினால் எதிர்ப்படுமெவ் வுயிரையும்நான் அன்பாகச்
சோதரர் போல் நடத்திடவே தொடங்குவனால்; நொய்யவரை
ஈதலினால், இன்மொழியால், இயன்றளவும் உபகரித்து
காதலினாற் காப்பாற்றக் கடைசிவரை முயன்றிடுவேன்."

என்று தீர்மானித்துச் சென்று சில வருஷங்களுக்குப் பின் அஹிம்ஸை என்னும் குணம் நிறைந்தவராகி ஜாஜலி முனிவரும் துலாதாரரும் பேரானந்த வீடு அடைந்து சுகித்து வாழ்ந்தார்கள்.

ராகவன்.

## தியானக்கிரம விஷயம்.

---

### ஜுன் மாசம்.

(3) நீ எல்லாருக்கும் உதவிபுரியவேண்டுமானால் எல்லாரையும் பற்றி நன்றாயறிந்து கொள்ளவேண்டும்.

(4) ஒவ்வொருவனிடமும் ஒவ்வொரு வஸ்துவினிடமும் நன்மையும் இருக்கின்றது தீமையும் இருக்கின்றது.

(5) உன்சொந்தமதத்தில் உனக்கிருக்கும் அபிமானம் போல் இதர மதஸ்தர்கள் கொண்டிருக்கும் கொள்கைகளிலும் நீ மனப்பூர்வமான அபிமானமுள்ளவனாக இருக்கவேண்டும். உன் மதத்தைப் போலவே ஏனையமதங்களும் ஈசுவரனிடத்துச் சேர்க்கக்கூடிய பல வழிகளே.

(6) எவன் ஈசுவரன் வழியே நிற்பானோ அவன் நம்மில் ஒருவனாகிறான். அவன் ஹிந்துவானாலும்சரி, பௌத்தனானாலும் சரி, கிறிஸ்தவனானாலும் சரி, மகம்மதியனானாலும் சரி, இந்தியன், இங்கிலீஷ்காரன், சீனன், ருஷியன், அல்லது வேறு யாரானாலும் சரி, சிறிதும் பாதகமில்லை.

(7) ஆடம்பரக் கிரியைகளைப் பற்றி நிற்பவர்களை நீ நிந்திக்கவேண்டாம்.

(8) தீயது எதுவானாலும் நிலையில்லாத தென்பதை ஞாபகத்தில் வைத்து, எப்பொழுதும் சந்தோஷ முள்ளவனாகவும் சாந்தமுள்ளவனாகவுமிருக்கவேண்டும்.

(9) குருநாதன் அவர் சிஷ்யன் மூலமாகவே தமது சக்தியைப் பிறர்பால் செலுத்தும்படி அடிக்கடி நேரும். ஆகையால் சிஷ்யன் எக்காரணத்தாலும் மனத்தளர்ச்சிக்கு இடங்கொடுக்கலாகாது. இடங்கொடுப்பின் குருநாதன் அவ்விதம் செய்யமுடியாது. ஆகையால் சந்தோஷமுள்ளவனாக இருத்தல் வேண்டும்.

(10) மனத்தளர்ச்சி கொள்ளுதல் எப்போதும் பிசகு. ஏனெனில் அது வேறு மனிதர்களையுங் கூட துயரத்திற் குள்ளாக்கி அவர்களது வாழ்க்கையையும் துயரத்திற்குட் படுத்துகிறது.

(11) தினசரி வாழ்க்கையில் நேரிடும் சங்கடங்களை இலகுவாக்கிக் கொள்ளவேண்டும். அதாவது அவைகளைப் பற்றி விசனத்துக் கிடங்கொடாமல் இலேசாய்த்தள்ளிவிட வேண்டும்.

(12) பெரும்பான்மையோர் அற்பவிஷயங்களில் கிலேசப்பட்டு காலத்தை விருதாவாக்கிக்கொள்வதுபோல, அற்ப விஷயங்களில் நீ கிலேசத்தை அடையாமல், அதினின்று நிவர்த்தித்துக் கொள்ளவேண்டும்.

(13) வியசனம், கஷ்டநஷ்டம், வியாதி இவைகள் போன்று வெளியினின்று நேரிடும் விஷயங்களை நீ சந்துஷ்டியுடன் பொறுத்துக் கொள்ளவேண்டும். இவைகள் பூர்வ ஜன்ம கர்மங்களின் பலன்கள். அதாவது முன் ஜன்மங்களைச் சேர்ந்த (பிராரப்த) கர்மங்களின் பலன்கள், இந்த ஜன்மத்தவைகளல்லாததால் மாற்றமுடியாதவைகள். ஆகையால் அவைகளைக்குறித்து நீ வருந்துவது நிஷ்பிரயோஜனமாம். இவைகளை நினையாது, இப்பொழுது நீ செய்யும் செய்கைகளைக் கவனி; இவைகள் உனது அடுத்த ஜன்மத்தில் பலனளிக்கும் காரணங்களாகையால், அவற்றை நீ மாற்ற முடியும்.

(14) மனத்தளர்ச்சிக்கும் சோகத்திற்கும் நீ இடங்கொடுக்காதே. அது எப்பொழுதாவது வருமானால், அதை உடனே நீ விரட்டிவிடு.

(15) நீ பிரவேசித்திருக்கும் மார்க்கத்திலிருந்து ஒரு நிமிஷங்கூட வேறொன்றை நாடி நீ திரும்பலாகாது.



(16) உன் முன்னிலையில் நீ ஏற்படுத்திக் கொள்ளவேண்டிய முக்கியதர்மம் குருநாதனுடைய வேலையைச் செய்வதேயாம்.

(17) மேன்மார்க்கத்திற் செல்லுவதில், நீ ஆலோசிக்க வேண்டிய அவசியமில்லாதபடி, உன் முன்னோக்கத்தையே நாடியவனாயிருக்கவேண்டும். இங்குமங்கும் திரும்பி அதினின்று விலகுதல் உதவாது.

(18) நீ மேன்மார்க்கத்தில் செல்ல வேண்டுமானால் உன்னுடைய திடசங்கல்பமானது தூவைக்கப்பட்ட எஃகு போல் இருத்தல் வேண்டும்.

(19) அம்மார்க்கத்துடனே நீ ஒருமைப் படல் வேண்டும்.

(20) நீ தொடும் எக்காரியத்தையும் உன் பூரணமான திறமையுடன் செய்துமுடி.

(21) நீ திடசங்கல்பம் கொள்ளுவாயானால் உன்னால் செய்து முடிக்கக்கூடாதது ஒன்றுமில்லை.

(22) நீ குருநாதனை ஒருதரம் தரிசிப்பாயானால், நீ அவரிடம் பல ஜன்மங்களுக்கு பூர்ண நம்பிக்கையுள்ளவனாய் நிகழ்வாய்.

(23) நீ அவரைப் பார்த்திராவிட்டாலும், அவரை சாக்ஷாத்கரித்து அவரிடத்தில் அபயம் புகுவாயாக. இன்றேல் அவரும் உனக்கு உபகரித்தல் சிரமம்.

(24) குருநாதனிடத்தில் பூர்ணமான நம்பிக்கை இல்லாவிடில் அவரது அன்பும் சக்தியும் உனக்குப் பெருக மாட்டா.

(25) உன்னுடைய குருநாதனிடத்து நீ பக்தியோடு விளங்குவதுடன் உன்னிடத்தும் தைரியம் கொள்ளவேண்

டும். உன்னை நீ நன்ருய் அறிந்துவிட்டதாக எண்ணுதே. அப்படியானுல், அதுவே உன்னை நீ நன்ருய் அறிந்து கோள்ளவில்லையென்பதற்கு போதுமான சாக்ஷியமாகும். பொதுவாக, சேற்றில் புதைந்து வெளிப்பார்வைக்குத் தேங்காய் போல் காணப்படும் கொட்டாங்கச்சியைப் பார்த்து மயக்கமுறுகிருய்.

(26) நீ ஈசுவரனின் ஒரு பொறியாவாய்.

(27) சர்வ பராக்ரமசாலியான ஈசுவரன் உன்னிடமிருப்பதால் நீ சங்கல்பித்து செய்யக்கூடாத காரியம் ஒன்றுமில்லை.

(28) நீ பின்வருமாறு அடிக்கடி சிந்தித்தல் விசேஷ பலனைத்தரும். "ஒரு மனிதன் செய்நகாரியத்தை இன்ஞெரு மனிதனும், செய்யக்கூடும். நானும் ஒரு மனிதனே. ஈசுவராம்சமும் என்னிடத்தில் உள்ளது. நான் இதைச் செய்யக்கூடும், இதைச் செய்தே முடிப்பேன்."

(29) சூரியகாந்தி சுத்தஸ்படிகத்தின் மூலமாய் எப்படிப் பிரகாசிக்குமோ அப்படியே சத்தியமானது உன் மூலமாய் பிரகாசிக்கட்டும்.

(30) கர்வத்தைத் தவிர்மின். ஏனெனில் அது அறிவின்மையால் ஏற்படுகின்றது.

## ஜூலை மாசம்.

மாசாந்தர அப்பியாசம்:—ஈசுவரனுடன் ஐக்கியப்பட இச்சிப்பதே அன்பு. நீ ஈசுவரனிடத்து அத்யந்த பக்தியுடையவனுனுல், அவர் மார்க்கத்தை அநுசரித்து அவர் செய்வதுபோல் செய்யவேண்டும்.

### வார அப்பியாசம்.

1-வது வாரம்:—எந்த உயிர்க்கும் ஒருவித ஹிம்சையும் செய்யாதிருக்கக் கருத்துக்கொள்.



வம்புப் பேச்சு, கொடுஞ்செயல், மித்நியாசாரம் இம்மூன்று பாபகார்யங்களையும் நீ விலக்கவேண்டும். அவைகள் ஜீவபூதங்களின் விகாஸமுறைக்குத் தடை செய்பவைகள். ஏனெனில், அவைகள் அன்புக்கு நேரெதிரிடையான குற்றங்கள். ஆகையால், எப்போதும் ஈசுவர பக்தியானது தன் ஹிருதயத்தில் பரிபூர்ணமாயிருக்க விரும்புவோன் இம்மூன்று தீக்குணங்களும் தன்னை அணுகாதபடி விழிப்பாயிருக்கவேண்டும்.

2-வது வாரம்:—வம்புப்பேச்சு எவ்வளவு இழிவும், கொரேமுமான பாபம் என்பதை அறிய முயல்வாயாக.

(1) அதை நீ முற்றும் விலக்கவேண்டும்.

(2) ஒருவரைப் பற்றியும் கெடுதலாய்ப் பேசாதே.

(3) எவரேனும் பிறரை இகழ்ந்து பேசுவாராயின், நீ செவி கொடாதே.

(4) நீ அத்தகையருக்கு சாந்தமாய்ப் பின்வருமாறு சொல்லலாம்:—"நீ சொல்வதொருக்கால் நிஜமல்லாமலிருக்கலாம். நிஜமாயிருந்தாலுங்கூட, அதைப்பற்றி நீ பேசாதிருப்பது நலம்."

(5) எவனைப் பற்றியாவது நீ ஏதாவது சமாசாரம் கேட்டால், நீ அதை வெளிப்படுத்தாதே. அது பொய்யாயிருக்கலாம். நிஜமாயிருந்தாலுங்கூட அதைப்பற்றி நீ ஒன்றும் பேசாமலிருப்பதே நல்லது.

(6) பிறர் செய்யுங் காரியங்களுக்கு நீயாக ஒரு கருத்தைக் கற்பிக்காதே. அதாவது இன்ன உத்தேசத்தைக் கொண்டு செய்திருக்கலாம் என்று, உன் எண்ணம் போன போக்குப்படி ஒரு காரணங் கல்பிக்க முயலாதே.

(7) மற்றவர்களைக்குறித்து உனக்குத்தெரியாத விஷயங்களில் நீ அபிப்பிராயங் கொள்ளலாகாது.

3-வது வாரம்:—பிறருக் குதவிசெய்ய எப்பொழுதும் சந்தர்ப்பம் பார்த்துக்கொண்டிருக்கவேண்டும். பரோபகார கைங்கர்ய விருப்பம் உன்னிடம் பரிபூர்ணமாய் ஏற்பட்டு, அதனால் உன்னைச் சுற்றுமிருக்கும் மனிதர்களுக்கு மாத்திரமல்லாது, புல்பூண்டு மிருகம் முதலிய ஜீவஜந்துக்களெல்லாவற்றிற்கும், சதா சமயம் பார்த்திருந்து நீ உதவி செய்து வரவேண்டும். இவ்வுதவி ஒவ்வொருநாளும் சிறிய விஷயங்களிலேயே ஏற்பட வேண்டும். அதனால் பரோபகார வழக்கம் ஏற்பட்டு, அபூர்வமாய்ப்பெரிய காரியம் சம்பவிக்கும்பொழுதும் நீ அதை விட்டுவிடாது அங்கீகரிக்க இயலுவாய்.

4-வது வாரம்:—ஈசுவரன் அன்பே யாதலால், நீ ஈசுவரனுடன் ஐக்யப்பட விரும்புவாயாகில், நீயும் பூர்ணமான அன்பையும் பிறர் நலத்தையுமே கருத்திற்கொண்டு நடைபெறவேண்டும். இந்த குருசிஷ்ய மார்க்கத்திற் பயிலுவோன், தன் ஹிருதயத்தின் மூலமாக உலகெங்கும் ஈசுவரனின் அருட் பிரவாஹத்தைப் பெருகச்செய்யும் ஜீவிதமான அக்நி ஜ்வாலைபோல் நிகழ்வான்.

5-வது வாரம்:—நீ எப்பொழுதும் சாந்தமுள்ளவனுகவிருக்கவேண்டும்.

எல்லோரையும் சாந்தமாகவே நிதானிப்பாயாக.

சாந்தமாய்ப் பேசு.

சாந்தத்துடன் ஒருவனுக்குச் சொல்லவேண்டியதைச் சொல்.

### தினசரி அப்பியாஸம்.

(1) எல்லாச் சாதனங்களிலும் அன்பு மிகவும் முக்கியமானது. ஏனெனில், அது ஒரு மனிதனிடம் போதிய பலமுள்ளதாயிருக்குமாயின், மற்ற நற்குணங்களை யெல்லாம் சம்பாதித்துக் கொள்ளும்படி அவனைத் தூண்டுகின்றது.

(2) தினசரி பிரவிர்த்தியில், இதற்கு இரண்டு வித பிரயோகம் (1) எந்த உயிருள்ள வஸ்துவுக்கும், ஒரு ஹிம்சையையும் செய்யாதிருக்கக் கருத்துக்கொள்வது, (2) எப்பொழுதும் பிறர்க்குதவி செய்ய சமயம் நோக்கி நிற்பது.

(3) பரோபகாரம் செய்வதில் தீவ்ரமாய் உழைக்க வேண்டும். சந்தர்பம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். பரோபகார கைங்கரிய விருப்பம் உன்னிடம் பரிபூர்ணமாயேற்பட்டு, அதனால் நீ நிறைந்தவனாய், உன்னைச் சுற்றுமிருக்கும் மனிதர்களுக்கு மாத்திரமல்லாது, புல்பூண்டு மிருகம் முதலிய ஜீவஜந்துக்களெல்லாவற்றிற்கும், சதாசமயம் பார்த்திருந்து நீ உதவி செய்துவரவேண்டும். இவ்வுதவி ஒவ்வொருநாளும் சிறிய விஷயங்களிலேயே ஏற்படவேண்டும். அதினால் பரோபகார வழக்கம் ஏற்பட, அபூர்வமாய் பெரியகாரியம் சம்பவிக்கும்பொழுதும்,நீ அதை விட்டுவிடாது அங்கீகரிக்க இயலுவாய்.

(4) துக்கத்தாலாவது வேறு சங்கடங்களாலாவது அல்லது கிலேசங்களை யடைந்தாவது, வேறு ஏதாவது ஸஹாயத்தை விரும்பியாவது மனச் சஞ்சலப்பட்டுக் கொண்டு பலர் இருக்கின்றார்கள். பிரதிதினமும் அத்தகையரொருவரைப் பற்றி நினைத்து, அவர் பேரில் அமிருதவர்ஷம் போன்ற உன் அன்பைச் செலுத்து.

(5) உதவி செய்யும் பொருட்டு உன் அன்பின் சக்தியைப் பெருகச் செய்வாயானால் பார்த்தாலும், பார்க்காவிட்டாலும் அதற்குப் பலன் நிச்சயமாய் இருந்தே தீரும். ஈசுவர ஆக்ஞையை அல்லது அவர் நியதியை நீ அறிவாயானால்,

நீ செய்யும், உதவிக்குப் பலன் உண்டென்பது உனக்குத் தெரியும்.

உலகத்தின் கண் உனக்கு அன்பிருக்குங் காரணத்தால், உன்னை நீ அதற்கே அற்பணம் செய்துகொண்டு லோகோபகார கைங்கர்யங்களில் நீ பிரவிர்த்திக்கவேண்டும்.

(6) மேன் மார்க்கத்திலேறும் மனிதன் ஜீவிப்பது தனக்காகவல்ல, பிறருக்காக. அவன் தன்னை மறந்தவனுகி பிறருக்கு உபகாரம் செய்வதிலேற்படுகிறுன்.

(7) எல்லாரிடத்தும் அன்புள்ளவனுயும் சாந்த முள்ளவனுயும் க்ஷமையுள்ளவனுயும் இரு.

(8) உலகத்தில் மற்றெல்லாவற்றையும் பார்க்கினும் அதிக கொடியவையான மூன்று பாபச்செயல்கள் உள்ளன. வம்புப்பேச்சு, கொடுஞ்செயல், மித்தியாசாரம், இவைகள் அன்புக்கு விரோதமான பாபங்களாகையால் எல்லா அபிவிருத்தியையும் கெடுத்துவிடும்.

(9) வம்புப்பேச்சு, முதலில் கெட்ட எண்ணம் தோன்றிய பிறகே ஆரம்பிக்கிறது. அதுவே ஒரு பாதகம்.

ஏனெனில் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு வஸ்துவினும் நன்மையும் இருக்கிறது; அவ்விதமே தீமையும் நிற்கின்றது, நமது சித்தவிர்த்திப் பிரயோகத்தால், இவ்விரண்டையும் நாம் விருத்தி செய்யலாம்.

இவ்விதமாய் ஜீவபூத விகாஸத்திற்கு நாம் அநுகூலமாயாவது, விக்கினமாகவாவது ஏற்படலாம்.

நாம் ஈசுவர சங்கல்பத்தை அநுசரிக்கலாம் அல்லது எதிர்க்கலாம். இது மிக இழிவுள்ளதும் கோரமுமான பாபச் செயல்.

(இன்னும் வரும்)

கே. எஸ். இராமச்சந்திர ஐயர்.

## என் நிஜ அநுபவம்.

---

தற்காலத்தில் இந்தியர்களின் பொதுநல அபிவிருத்தியைக் கோரி மேன் மேலும் தீவிரமாய் உழைக்க ஆரம்பிப்பவர் எவரும் தம் அநுபவத்தில் கூர்ந்து கவனித்திருக்கக்கூடிய விஷயம் ஒன்று உண்டு. அஃதாவது எவ்விதம், ஏக வஸ்துவின் தாரண சக்தியால் உலக முழுவதும் நிரம்பி விளங்குகின்றதோ, அவ்விதம், நம்தேசத்தின் ஐஹிக க்ஷேமத்திற்குரிய துறைகளாகிய, வர்ணுசிரமதர்மங்கள், கல்வி முறை, கைத்தொழில் முறை, நாகரீகம், ஜனங்களுடைய சீலம், வியாபாரம், ஸ்திரீகளின் நிலைமை, குழந்தைகளின் நிலைமை, ஸுகாதார விஷயங்கள், ஜனங்களுக்கு விச்ராந்தியை ஏற்படுத்தக்கூடிய கலா சாஸ்திரங்களான ஸங்கீதம், நாடகம், கவித்வம், சிற்பம், முதலிய எல்லாவற்றையும் உயிர்ப்பிக்கவேண்டிய, உத்ஸாஹ சக்தியானது இப்போது குன்றியிருக்கிறது. அச்சக்தி என்னவென்று பார்ப்போமானுல், அதுதான், மதம் என்று நாம் இலகுவாய் அறிகிறோம்.

மதம் என்றால் நம்மவர் பலர், பஸ்ம ருத்திராக்ஷம் அணிதல், காலையில் சரீரசுத்தி செய்தல், சுத்தவஸ்திரங்களை அணிந்து தீர்த்தமார்ஜனுதிகளாலும் பத்திர புஷ்பார்சனைகளாலும் ஈசுவரனை வழி படுதல் இவை மாத்திரம்தான் என்றும், மதமானது தம்முடைய பிரதி தினசரியையில் சுசீலர்களாயும் பரோபகாரிகளாயும், திரிகாணங்களிலும் புனிதர்களாயும், நடை பெறும்படி வற்புறுத்துகின்றதில்லை என்றும், நம்பி வருகிறுர்கள். மேற்கூறிய பாஹ்ய சௌசம் ஸ்தூல சரீரத்தை மட்டும் சுத்தி செய்ய வல்லதாகும்.

அஹிம்சை, சத்தியம் முதலிய தர்மங்களை ஆசரித்தலே ஆத்மசுத்தியைப் பயக்கும். நமது ஸ்தூலசரீரத்திலாயினும் மற்றெந்த ஸ்தூல வஸ்துக்களிலாயினும் அழுக்குப்படிந்தால் கண்ணால் நேரே பார்க்கிறோம். உடனே அதைப் போக்கடிக்கவும் முயலுகிறோம். நேரே பார்க்கும், இந்த அசுசியைக்கூட கவனியாத பல அறிவிலிகளும் உளர். மனோசரீரங்களில் நம்முடைய அசுத்தமான சிந்தனைகளால் ஏற்படக்கூடிய கோரமான களங்கத்தை நாம் நேரே கண்ணுறாதவர்களாகையால், நம்மவர்களுடைய வைதிக கோஷ்டியில் பெரும்பான்மையோர் மதத்தின் உடற்பாகமான பாஹ்ய சௌசத்தையுங்கூட அரைகுறையாய் உணர்ந்து, உயிர்ப்பாகமான ஆத்ம சுத்தியை முற்றிலும் அலக்ஷியம் செய்கின்றனர். கர்ணகடூரமான வார்த்தைகளால் தாமே பெற்ற பிள்ளைகளை வைகிறார்கள். அடங்காக் கோபத்தால் அடிக்கவும் அடிக்கிறார்கள். இதே கோபத்தை தன் மனத்தாலுங் காட்டிப் பிறரிடத்து பொறுமைகொண்டு பிறருக்குக் கெடுதலை விரும்புகிறார்கள். இவ்விஷயத்தில் நமது பிரஹ்மஞான தர்சனம் மனிதன், ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்களைப்பற்றி போதிக்கும் தத்வோபதேசங்கள் யுக்திபூர்வமாகவும் பிரத்தியக்ஷாநுபவ சித்தமாகவுமே உண்மைகளை அறியப் பழகி வந்திருக்கும், தற்காலக்கல்வியிற் பயின்றோர்களென்று கருதப்படும் ஆங்கிலம் கற்றோர்களுடைய ஸம்சய விபரீதங்களை முற்றிலும் நீக்குகின்றன. லௌகிகமான அந்தஸ்திலும் படிப்பிலும் எவ்வளவோ சிறந்தவர்களாயிருப்பவர்களும் பிரஹ்மஞான தர்சனம் விவரிக்கும் இம்முறையை லௌகிக அந்தஸ்தில் அற்பனான ஒருவனிடமிருந்து கேட்டுப்பலர் தேறியிருக்கின்றனர். ஆயினும் லௌகிகர்களில் பெரும்பான்மையோர் முற்கூறியபடி உயிரற்ற



உடலைத் தழுவுகின்றாராகையால் எவ்விஷயத்திலும் நாம் உயிர்ப் பாகத்தையே அவர்களுக்கு எடுத்து உரைக்க, கடன் பட்டிருக்கிறோம்.

இம்முறையில், இந்தியர்களுக்கே ஒரு பொதுவான மதமாக ஸ்வதேசாபிமானத்தை எடுத்துரைக்கவும் கடமைப்பட்டிருக்கிறோம். நம்மிந்தியாவில் உள்ள ஏராளமான மதவேற்றுமைகளும், ஜாதிவேற்றுமைகளும், இதரமான ஆசாரவேற்றுமைகளும், "ஸ்வதேசக்ஷேமம்" என்ற பொது நோக்கம் முன்வர, குன்ற ஆரம்பித்து, ஒற்றுமையே விருத்திபெறுகின்றது. ஒவ்வொரு மதமும் ஒற்றுமையுணர்வைப் பெருக்குவதற்கன்றோ உலகில் ஏற்பட்டிருக்கிறது!

நம் தேசத்தில் இப்போது தர்மம் மிகக் குன்றியிருக்கிறதென்றும், அதனால் ஒற்றுமை முன் வருகிறதில்லையென்றும் மேலே பார்த்தோம். பகவத்கீதை கூறும்வண்ணம், சமீபகாலத்தில் அவதாரம் நிகழுமென்றும், அச்சமயம் அவதார புருஷரைத் தெரிந்துகொள்வது சிரமமென்றும் நாம் அறியற்பாலர். இவை கீழ்வரும் சுலோகங்களால் நன்குவிளங்கும்.

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத।
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்॥

பகவத்கீதை.

ஆகையால் எங்கும் நிறைந்த பரிபூர்ணவஸ்துவையுணர்ந்து, வெளிவேற்றுமைகளைப் பாராட்டாமலும், வெளிவேஷங்களைப் பார்த்து ஏமாந்துபோய்ப், பிறரை நல்லவர்களென்றுவது, கெட்டவர்களென்றுவது இன்னும் வேறு பலவிதங்களிலாவது, தவறாய் நிதானிக்காமலும், பிறர் துன்பந்துடைத்தலில் அஜாக்ரதையாக இராமல் தீவ்ரமான ஊக்கங்கொ

ளுமம்படியும், பிறர் மதங்களிலும், பிறர் வழக்கங்களிலும் பிறர் அபிப்பிராயங்களிலும் குறை கண்டு வைஷம்யத்தைப் பெருக்காமல், தமக்காகவேண்டிய குணத்தை மட்டும் கொள்ளும்படிக்கும், ஒவ்வொருவரும் அவரவர் பற்பல நிலைகளில் செய்யவேண்டிய கடமைகளை ஒழுங்காய்ச் செய்வதோடு எந்த அற்பகார்யத்தையும் மிகச்சிரத்தையுடன் தம்மால் இயன்றமட்டும் அழகுறச் செய்யும்படிக்கும், இவைகளனைத்தையும் ஈசுவரார்ப் பணமாகச் செய்யும்படிக்கும், பழக்க முயலுவோமாகில், நமது தேசத்தில் தர்ம ஸ்தாபனார்த்தம் இன்னொரு கிருஷ்ணமூர்த்தி அவதரிக்கும்போது அவரைத் தெரிந்துகொள்ள இயலுவோம்.

ஓர் ஸ்வதேசாபிமானி.

---

## புத்தகவரவு.

---

**சேரன் செங்குட்டுவன்:**—இப்புத்தகம், முன் செந்தமிழ்ப் பத்திராதிபராயிருந்து, இப்போது தமிழ் லெக்ஸிகன்ஆபீஸில் பிரதம பண்டிதர் உத்யோகத்தில் அமர்ந்திருக்கும், இராமநாதபுரம் மகா-ள-ள-ஸ்ரீ மு. இராகவையங்காரவர்களால் எழுதப்பட்டது. இவ்விஷயத்தில் மதுரைத் தமிழ்ச்சங்கத்து உப அக்கிராசனாதிபதி ஸ்ரீமாந். S. Rm. M. Ct. பெத்தாச்சி செட்டியாரவர்கள் பேருதவியும் புகழத்தக்கது. இப்புத்தகம், சேரவம்சத்துதித்த செங்குட்டுவன் என்ற ஓர் அரசனைப்பற்றிய சரிதம். இதில் அவனுடைய பராக்ரமமும், மஹா சுத்தவீரன் என்று அதிசியிக்கும்படியாக, பகையரசர்களிடத்தும் அவன் நலங்கண்டு மகிழ்ந்தஉதாரகுணமும், பிரஜைகளைப் பரிபாலனஞ் செய்யும் முறைமையில் அவன் நன்குணர்ந்த உத்தரவாதங்களும், அவன் மந்திரிகள் முதலியஉத்யோகஸ்தர்கள், ஸைந்யங்கள் இவைகளைப்பற்றிய விவரமும் இன்னும் பல அம்சங்களும் தக்க மேற்கோள்களுடன் நமது வித்வானால் இனிய, எளிய, செந்தமிழில் நன்கு விஸ்தரிக்கப்பட்டுள்ளன. இப்புத்தகத்



தைத் தமிழ் நாட்டாரின் பிராசீன நாகரிகத்தை வெளியிடக்கூடிய சரித்திர புஸ்தகங்களோடு கணக்கிடல் தகும். புஸ்தகம் உயர்ந்த பேதர் வேயிட் காகிதத்தில் தெளிவான பெரியஅக்ஷரங்களில் சுத்தமாய் அச்சியற்றப்பட்டுள்ளன. இதன்விலை ரூ 1தான். வேண்டுவோர் மதராஸ் தமிழ்லெக்ஸிகன்ஆபீஸ்பிரதமபண்டிதர்பிரஹ்மஸ்ரீ மு. இராகவ ஐயங்காரவர்கட்கு எழுதிப்பெற்றுக்கொள்ளலாம்,

**ஸ்ரீ திரிபுரா ரகஸியம்:**—இப்புத்தகம் ஹாரிதாயனரென்னும் மஹரிஷியால் வடமொழியில் அருளப்பட்டது. இது வி.ஆர். ஸுப்ரஹ்மண்ய ஐயரால் தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. இரௌன் ஸைஸில் சுமார் 400 பக்கங்கொண்ட புஸ்தகமிது ஞான காண்டமானது இதில் ஹேமசூடோபாக்யானம் என்ற கதை ரூபமாக விளக்கப்பட்டுள்ளது. இது இனிய தமிழில் தெளிவான அக்ஷரங்களில் இயற்றப்பட்டிருக்கிறது. இதன் விலை ரூ 1-10-0 வேண்டுவோர் P. R. ராமையர் அண்டு கோ, பிரிண்டர்ஸ், மதராஸ் என்ற விலாசத்திற் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**குருசிஷ்ய ஸம்வாதம்:**-இது கடலூர் O.T. மைத்ரேய லாட்ஜ், பிரஹ்மஞான ஸபையாரால் வெளிவந்த ஓர் துண்டுப் பத்திரிகை. இது P. L. ஜேஸிங், F. T. S. அவர்களால் எழுதப் பெற்றது. இதில் பிரச்னோத்தர ரூபமாக, ஞானவிசாரம் வரைந்துள்ளது. வேண்டுவோர் மேற்கண்ட விலாசத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம். இதற்கு விலையொன்றும் விதிக்கப்படவில்லை.

**புகையிலையினால் வருங்கேடு:**—இதுவும் மேற்படியாரால் வெளிவந்துள்ள ஓர் பத்திரிகை. நம்மவர்க்கு மிகப்பயன் தரக்கூடியது இத்தகைய சிறு குற்றங்களையெல்லாம் தவிர்த்து வாழ்வதற்கு நம்மவர் பழகிக்கொள்ள வேண்டியது இக்கருணத்தில் மிக அவசியம். இதைப்பலரும் வாங்கிப்படிக்கவேண்டுமென்பது நம் பிரார்த்தனை.

**வியாஸத் திரட்டு:**—இது மதுரை வித்தியாபாநுப் பத்திராதிபர் மு. ரா. கந்தசாமிக் கவிராயரால் எழுதப் பெற்றுள்ளது. இது பொதுவாக இந்துக்களுக்கும், சிறப்பாகச் சைவர்களுக்கும் பிரயோஜனகரமான புஸ்தகம். இது நல்ல கடிதத்தில் தெளிவான அக்ஷரங்களால் அச்சியற்றப்பட்டுள்ளது. 12 வியாஸங்கள் அடங்கியுள்ளன. இதன் விலை அணு 8. வேண்டுவோர் மதுரை விவேகபாநு அச்சியந்திரசாலை வித்தியாபாநுப் பத்திராதிபர் மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்,

---

## சமாசாரம்.

---

**ஆத்தங்குடி பிரஹ்மக்ஞான ஸபையின் வருஷோற்சவமும் ஸரஸ்வதீ விலாஸ ஸபையின் புதிய ஆண்டு நிறைவும்:—** இம்மீ 14, 15உ களில் இவ்வுற்சவங்கள் கோனாப்பட்டுக் கடுத்த ஆத்தங்குடியில் அதிவிமரிசையாய் நடைபெற்றன.

முதல்நாள் ஸரஸ்வதீ விலாஸ சபையின் வருஷோத்ஸவம் புதுக்கோட்டை போலீஸ் டிப்டி சூபெரிண்டெண்டெண்ட் பிரஹ்மஸ்ரீ A. G. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள் அக்ராஸனத்தின் கீழும், மறுநாள் பிரஹ்மக்ஞான ஸபையின் வருஷோற்சவம் மதுரை ஹைக்கோர்ட் வக்கீல் பிரஹ்மஸ்ரீவி. இராமச்சந்திர ஐயரவர்களின் அக்ராஸநத்தின் கீழுமாக நடந்தன. மதுரைக் காலேஜ் வித்வான் மகா-ா-ா-ஸ்ரீ ம. கோபாலகிருஷ்ணையரவர்களும், மதுரை தமிழ்ச் சங்க வித்வான் மகா-ா-ா-ஸ்ரீ ஹரிஹர ஐயரவர்களும், முன்னவர் அன்பு, பெரியார் பெருமை என்ற இரண்டு விஷயங்களைப் பற்றியும் பின்னவர் ஒற்றுமையைப் பற்றியும் அழகாய்ப் பேசினர். P. குமரப்ப செட்டியார் "ஸத்குரு சரணநீழற் பிரபாவத்தைப்பற்றி நன்கு பேசினர். அதாவது சாமானியர் சிறியதென்று அலக்ஷ்யம்செய்து, பெரிய தீப்பலன்களை விளைக்கக்கூடிய அற்பகுற்றங்களை யெல்லாம் எவ்விதம் களைதல்வேண்டும் என்ற விஷயத்தை, எல்லோரும் தெளிவுறும்படி பேசினர். மதுரை பிரஹ்மக்ஞான சபையாருள் ஒருவரான B.S. ராமசுப்பையர் "ஸ்வர்ணமணிமாலைச் சங்கத்தைப் பற்றியும்," உதயதிசை நக்ஷத்திர ஸங்கத்தைப்பற்றியும் பேசினர். இரண்டு அக்கிராஸநர்களும், தற்காலத்தில் நகரத்தார் புதிய நாகரிகத்தை விரைந்து கைப்பற்றி வருகின்றமையைப்பற்றி ஸந்தோஷித்தும், ஈசுவரகிருபையையும் மஹான்களின் கிருபையையும், நகரத்தாரின் அபிவிருத்திக்காகப் பிரார்த்தித்தும், செட்டிநாடுகளில் நடைபெறும் எல்லா தர்மங்களும் வித்யாதானத்திற்கடுத்தபடிதான் என்றும் வற்புறுத்தினர். அதற்கநுகூலமாக பிரஹ்மஸ்ரீ வி. இராமச்சந்திர ஐயரவர்கள், "கல்விகற்பித்தல் ஈசுவர கைங்கர்யம்", என்ற மஹாகிரந்தத்தினின்று பல ஸாரமான கருத்துக்களையும் வெளியிட்டனர். இந்த பிரஹ்மக்ஞான கிளைச்சபையானது, ஜீவ காருண்ய கோர்ட்டு, ஒன்று நடத்தி தன வைசியர் பலரை மாம்ஸ



வர்ஜ்யம் செய்யும்படிக்கும், பெண்கல்வியை விருத்தி செய்யும்படிக்கும் உற்சாக மூட்டி வருகின்றது. உதயதிசை நக்ஷத்ர ஸங்கத்தின் பக்தர் பலர் அங்கே இருக்கிறபடியால், வருங்காலத்தில் அதி சீக்கிரம் அவ்வணிகநாடு இஹபரக்ஷேமம் இரண்டிற்கும் நிலயமாக அமையும்.

---

அருப்புக்கோட்டை நாடார் கல்விப் பிரசங்க சபை 7-வது மீட்டிங்.ஷை சபை ஹாலில் நாளிது 17-8-15-ல் இரவு 9-மணிக்கு இவ்வூர் சைவபாநுக்ஷத்திரிய செக்கண்டெரி ஸ்கூல் மாஸ்டர் மகா-ா-ா-ஸ்ரீ கனம் ஞானசேர்வாத நாடாரவர்கள் அக்கிராசனத்தின்கீழ் ஷை மீட்டிங் அதிவிமரிசையாய் நடைபெற்றது. பல முக்கியஸ்தர்கள் விஜயஞ் செய்திருந்தார்கள். முந்திய மீட்டிங்கில் வந்திருந்த ஜனங்களைக் காட்டிலும், இம்மீட்டிங்கில் அநேக ஜனங்கள் திரளாய் வந்திருந்தார்கள்.

கனம் செ. ப. வெயிலுமுத்து நாடாரவர்கள் கடவுள் வணக்கமும், கனம் ச.ச.பழனிச்சாமிநாடார் அடக்கம் என்பதைப்பற்றியும் கனம் ப. வ. முத்துராமலிங்க நாடாரவர்கள் பொறுமையைப்பற்றியும், கனம் தி. ரு. கி. தில்லைக்கோவிந்த நாடாரவர்கள் பொது நலத்தைப்பற்றியும், கனம் கு. சத்குரு சங்காரவேல் நாடாரவர்கள் விவசாய நன்மையைப்பற்றியும், கனம் கு. ஆ. முத்து நாடாரவர்கள், ஏனுதியன்பன் ஆகியவர்கள் முயற்சியைப்பற்றியும் உபந்நியாசஞ் செய்தார்கள். இவ்வூர் சைவபாநுக்ஷத்திரிய செக்கண்டெரிஸ்கூல் அஸிஸ்டெண்டு மாஸ்டர் கனம் எஸ். நாகலிங்கஞ் செட்டியாரவர்களும் முயற்சியைப் பற்றியே வெகு விஸ்தாரமாக நீண்ட உபந்நியாசஞ் செய்தது நிரம்பவும் மெச்சத்தக்கதாயிருந்தது. கனம் ஆ. சொக்கலிங்க பாண்டியரவர்கள் கைத்தொழில், கல்வி, ஒற்றுமை, இராஜபக்தி முதலியவற்றிற் கிலக்காக ஒரு அச்

சாபீஸ் கூட்டுறவாக வைத்து நடத்தவேண்டுமென்றும், அதற்குப் பெயர் மாட்சிமை தங்கிய கவர்னர் ஜெனரல் லார்ட் ஹார்டிஞ்சி அவர்களின் ஞாபகசின்னமாக "ஹார்டிஞ்சி" என்று கொடுக்கவேண்டுமென்றும், சென்னை கனம் ச சு சங்கரலிங்க நாடாரவர்களை மானேஜராய் நியமிக்கவேண்டுமென்றும் பிரேரேபித்து கனம் அம்பலம் குளிமுத்து நாடாரவர்கள் ஆமோதிக்க கனம் ச வள்ளிநாயக நாடாரவர்கள் ஆதரித்துப் பேசினார்கள்.

பின்பு அவ்வச்சாபீசுக்கு அதின்படியே பெயர் கொடுத்து மூலதனமாக பங்கு ஒன்றுக்கு ரூ-20—0—0 வீதம் பல பங்குகள் சேர்த்துக் கூட்டுறவாக நடத்தவேண்டுமென்றும், இது விஷயத்தை மாட்சிமை தங்கிய கவர்னர்ஜெனரல் அவர்களுக்குத் தெரியப் படுத்தவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

கனம் ச. வள்ளிநாயக நாடாரவர்களால் பன்னூற்றிரட்டு என்னும் புஸ்ககம் ஒன்றும் கனம் வை. பெ. வையாபுரி நாடாரவர்களால் நகைப்பைத்தியம் என்னும் புஸ்தகம் இரண்டு பாகங்களும் இச்சங்கத்திற்கு இனமாக அளிக்கப்பட்டன.

கனம் அக்கிராசனாதிபதியவர்களின் முடிவுரை முடிந்தவுடன் 1½ மணிக்கு மீட்டிங் கலைந்தது.

செக்ரட்டெரி,

நாடார் கல்விப் பிரசங்க சபை,

அருப்புக்கோட்டை.

19—8—15.



# பூர்ணசந்திரோதயம்.

தொகுதி 6 } 1915ஞு செப்டம்பர்மீ ராக்ஷஸஞு புரட்டாசிமீ { பகுதி 5.

## தற்கால நிலைமை.

உலகத்தின் கதியில் சில காலங்களில், ஜனங்கள் பக்தி மார்க்கத்தைப் பெரும்பான்மையாகத் தழுவுவது முக்கியமாகவும், சில காலங்களில் ஞான மார்க்கத்தைக் கொண்டாடுவது வெகு பிரயோஜனகரமாகவும், சில காலங்களில் கர்ம மார்க்கத்தில் நின்றுகொண்டு, இதரர்களுக்கு நன்மையைப் பயக்குகின்ற நிஷ்காம கர்மத்தை ஆதாரமாயுடைய கர்மயோகத்தைக் (Path of Service.) கைக்கொள்ளவது உசிதமாகவும் தோன்றுகின்றது. தற்கால நிலையில் கர்ம மார்க்கமே முதன்மையாகக் காணப்படுகின்றது. எல்லாச் செய்கைகளைக் காட்டிலும் சரீரபலத்தையும் உறுதியையும் அதிகமாக உபயோகப்படுத்தி, தேசாபிமானம்,ராஜவிசுவாஸம், மனோதைரியம் இம்மாதிரியான குணங்களை ஆதாரமாகக் கொண்டு, கைக்கொண்ட கார்யங்களை ஸாதிக்கும்படியான விவேகம், புத்தி தீக்ஷண்யம், முதலிய மனோசக்திகளை

வெளிப்படுத்துவதும், முதன்மையாக கிரியாலக்ஷணங்களோடுபொருந்தியதுமான தற்காலத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கும் யுத்தமே இக்காலமானதுகர்மமார்க்கத்திற்குரிய காலமென்று சூசிப்பிக்கின்றது. ஏனென்றால் யுத்தத்தில் போர்புரியும் யுத்தவீரர்கள் அவர்களது சுயநன்மையை நாடி யுத்தம் செய்பவர்களல்லர். போர்க்களத்தில் நிகழ்வதும்,ஸாஹஸத்தோடு கூடியதும், மரணத்தையும், அகோரமான பலன்களையும் விளைவிப்பதால் கொடியனபோல் தோன்றுவதுமான செய்கைகள் நிஷ்காம கர்மங்களின் ஸ்வபாவத்தைப் பெரும்பாலும் தழுவிநிற்கின்றன. ஆகையால் தான் ஸூர்யனால் மநுவுக்குச் சொல்லப்பட்டு, பிறகு மநுவால் இக்ஷ்வாகுவுக்கு உபதேசிக்கப்பட்டு, அதற்கப்பால் பரம்பரையாய் ராஜரிஷிகள் அறிந்த, மஹத்தான காலகதியினால் லோபமடைந்த கர்மயோகமானது ஸ்ரீகிருஷ்ண பகவானால் அர்ஜுநனுக்கு அகோரயுத்த ஆரம்பத்தில், அவனுக்கு யுத்தத்தில் உத்ஸாஹத்தைப் புகட்டுவதற்காக உபதேசிக்கப்பட்டது என்று சொல்லப் படுகிறது. பகவான் யுத்தகாலத்தில் இரண்டுஸேனைகளுக்கும் மத்தியில் அர்ஜுநனுக்கு உபதேசித்தருளியதாகச் சொல்வது, அவ்விதமாக அக்காலத்தில் நடந்தவாறே கூறுகின்றதா அல்லது கர்மயோகத்தை அப்யஸிக்கவேண்டிய காலம் அக்காலந்தான் என்பதை சூசிப்பிக்கின்றதா என்பதில் பலருடைய அபிப்ராயங்கள் வேறுபட்டிருப்பினும், உலக சரித்திரத்தில் இம்மாதிரியான காலங்கள் கர்ம மார்க்கத்தை மனிதர்கள் தீவ்ரமாய்த் தழுவுதற்குரிய காலங்களென்றே சொல்லத்தகும்.

***

தற்காலத்தில் உலகமுழுவதும் யுத்தமுகமாய் நிற்கின்றது. ஆகையால் உலகத்தில் எங்கு சென்றாலும், இங்கிலாந்து, பிரான்ஸ்,இந்தியா எத்தேசமாயினும், அதில் ‘சுயநலத்தைக் கருதாது கர்மத்தைச் செய்’ என்ற உபதேசமானது எங்கும் நிறைந்து நிற்கின்றது. இங்கிலாண்டு முதலிய தேசங்களில் யுத்தத்தில் காயப்பட்டவர்களுக்கு வேண்டிய உதவிபுரிதற்கு, ஜனங்கள் தம் காலம், தனம்,ஸாமர்த்யம் அன்பு முதலியவைகளை வரம்பின்றி அபரிமிதமாக உபயோகித்து வருகின்றனர். புருஷர்கள் யுத்தத்திற்குச் செல்ல, அவர்கள் அப்படி யுத்தத்திற்குச் செல்லுமுன்னர், வகித்துவந்த ஸ்தானங்களை ஸ்திரீகள் அடைந்து, ஊக்கத்துடன் அவ்வேலைகளைப் பார்த்து வருகின்றனர். ஸ்திரீகள் தபாற் சேவகர்களாகவும், தோட்டக்காரர்களாகவும், மோட்டார்வண்டிகள் ஓட்டுகிறவர்களாகவும், குமாஸ்தாக்களாகவும், யந்திரத்தினால் ஓடும் பலவித வண்டிகளில் கார்டுகளாகவும் (காவலாளிகளாகவும்) பீரங்கிமருந்துகள்,குண்டுகள் முதலிய யுத்தசாமான்களைத் தயாரிக்கும் யந்திரசாலைகளில் வேலைக்காரர்களாகவும், இன்னும் இதற்குமுன் புருஷர்களுக்கு மட்டும்தகுதியானவைகளென்றுபாவிக்கப்பட்ட தொழில்களிலும் அமர்ந்திருக்கின்றனர். யுத்தக்களிலோ பிரபுவும், கூலிக்காரனும், தரித்ரனும், தனவந்தனும் அவரவர்களுக்குள் ஸாதாரண காலங்களில் ஏற்பட்ட வித்யாஸங்களைத் துறந்து, அவர்களுக்குப் பொதுவாகிய ராஜ்ய நன்மையைக்கருதிச் சமமாய் நின்றுகொண்டு போர்புரிகின்றனர்.



***

இப்போரின் வெளித்தோற்றங்கள் ஐரோப்பாக் கண்டத்தில் நிகழும் யுத்தத்தால் ஸ்பஷ்டமாகத் தோன்றினும், அவைகளை நுட்பமாய் ஒத்திருக்கின்ற ஸூக்ஷ்ம லக்ஷணங்கள் எல்லாத்தேசங்களிலும் பற்பல மாதிரியாகக் காணப்படுகின்றன. ஜனஸமூஹங்களில் அநேக காலங்களாக மேல், கீழ் என்ற ஏற்பாட்டுடன் இந்தியாவில் வர்ணாச்ரம தர்மங்கள் என்று கூறப்படுவனவும், இதர தேசங்களில் அவைபோல ஏற்பட்டுள்ள ஜாதி அமைப்புகளும் [illegible]

றின் ஆதாரங்களினின்று வழுவிக் கட்டிழந்தன போல் தோன்றுவதில், பழைய வழிகளுக்கும் இக்கால வியற்கைக்கும் யுத்தம் நேர்ந்துகொண்டிருப்பது போலத் தோன்றுகின்றது. மநஸ் ஸமாதானத்திற்கும் ஸந்துஷ்டிக்கும் இதுவரை ஸாதனமாகக் கைக்கொள்ளப்பட்ட கொள்கைகளும், ஆசரணைகளும், இன்னும் மற்ற ஆதாரதத்துவங்களும்பலங்குன்றி நிற்கின்றன. உலகத்தில் இப்போதிருக்கும் நிலைமையைக் குறித்து ஒரு அதிருப்தியும், இஹபர லோகங்களில் சுகத்தைக் கொடுக்கும் வழிகளைத் தற்கால அநுஷ்டானத்தில் வழங்கிவருகிற சமயங்களும் கொள்கைகளும் உண்மையாகக்கூறுகின்றனவா என்பதில் நம்பிக்கைக் குறைவும், அவ்வழிகளை அநுபவத்திற்குக் கொண்டுவருவதில் ஒரு சிரத்தைத் தாழ்வும் காணப்படுகின்றன.

***

மதவிஷயங்களிலும் தத்துவ விசாரங்களிலும், கிரந்தங்களினின்று வாதங்கள் மூலமாயும், யுக்திமுறையாலுமெடுத்துக் கூறுபவர்களின் உபதேசங்களில் ஜனங்களுக்கு பக்தி குன்றி, ஐம்புலன்களுக்கும் அதீதமான தத்துவங்கள் ஸ்வாநுபவத்தாலும் ஸ்வாநுபவத்தையடைந்தவர்கள் மூலமாயும் அறியத் தக்கனவே யன்றி, மற்றையோர்களிட மிருந்து அறிந்துகொள்ள முயலுதல், குருடன் குருடனால் வழிகாட்டப் படுதல்போலும், என்ற நோக்கம் தற்காலத்தில் அதிகரித்து நிற்கின்றது.

***

ஐம்புலன்களுக்கும் கோசரமான பதார்த்தங்களைப் பரிசீலனைசெய்யும் பௌதிக சாஸ்திரங்களில் தேர்ச்சியடைந்த சாஸ்திரிகள் சுமார் 40, 50 வருஷங்களுக்கு முன்னர் பெரும்பாலும் நாஸ்திகர்களா யிருந்தார்கள். தற்காலத்தில் அந்த சாஸ்திரங்களில் முதன்மையான ஸ்தானத்தையடைந்திருக்கிறவர்கள் பஞ்சபூதங்கள் மூலமாய் அவைகளுக்குள் நின்றுகொண்டு அவைகளின் வெளிச்சேஷ்டைகளை நடாத்தும்சைதந்யத்தை அச்சேஷ்டைகளின் மூலமாய் அறிகிறார்



கள். வைத்ய சாஸ்திரமும் நூதனமான மார்க்கங்களிற் செல்ல ஆரம்பித்திருக்கின்றது. ஸ்தூல தேஹத்தில் ஏற்படும் வியாதிகளை நிவாரணம் செய்ய மருந்துகளை உட்கொள்வதே வழி என்ற பிராசீன கொள்கையானது வரவரக்கைவிடப்பட்டு வருகின்றது. சரீரத்திற்கு இயற்கையா யமைந்த சக்தியே, அதன் ஒழுங்குக்குப் பாதகம் செய்கின்ற வியாதிகளை நிவிர்த்திக்கத் தக்கதென்றும் அந்த நிவாரணத்திற்குத் தடையாக நிற்கும் பிரதிபந்தகங்களை அப்புறப்படுத்துதலே சிறந்த ஔஷதமென்றும் கைக்கொள்ளப் பட்டு வருகின்றது. "இயற்கைச் சிகித்சை" (Nature Cure) என்பது இதுவே. ஸுகாதார விதிகளை யநுஸரித்துத் தொத்து வியாதிகளைத் தொலைப்பதும் இவ்வழியைச் சார்ந்ததுதான். இவ்விதமாகப் பல வழிகளிலும் பழைய காலந்தொடங்கி ஸாதனங்களாக நின்ற முறைகள் மறைந்து புதுமுறைகள் தோன்றிவருகின்றன. இவ்விதமான மாறுதல்கள் கல்பங்களின் ஆதியிலும் அந்தத்திலும் தோன்றக் கூடியவைகள்.

***

ஒரு கல்பத்தின் முடிவும் மற்ற கல்பத்தின் ஆரம்பமும் ஜகத் குருவின் வரவை எதிர் நோக்குகின்றன. உபகல்பங்களின் ஸந்தியிலும் அவர் தோன்றுகின்றனர். தற்காலமும் ஓர் புதிய உபகல்பம் ஆரம்பிக்கும் காலமாகும். இக்காலங்களில் அவரது கருத்துக்கிசைந்த கைங்கர்யத்தைக் கைக்கொண்டு நிறைவேற்றுவதேநம்பெரும்பாக்கியம், தற்கால நிலைமையில் அதுவே முக்யமானது. அவருடைய வருகையை ஜனங்கள் அங்கீகாரம் செய்து அவரை வழிபடுவதற்கு நாம் என்ன செய்யவேண்டும்? அவர் வருகையை ஜனங்கள் அறிவதற்கு நாம் எவ்வாறு எங்கும் அதைப் பரவச் செய்யவேண்டும்? கிராமம், நகரம், மாகாணம்,

இராஜ்யம் இவைகளில் ஏற்படும் பல பிரவிர்த்திகளில் அவருடைய வருகைக்கும், அவருடைய கருத்துக்கும் ஒத்த பிரவிர்த்திகளை எவ்வாறு நாம் பலப்படுத்தலாம்? அவர் முற்காலத்தில் இந்தேசத்தில் ஸ்ரீகிருஷ்ண பகவானாய் அவதரித்தபொழுது, அவருடைய நாமமானது அதிசீக்கிரத்தில் இந்துதேச முழுமையும் பரவினதன்றோ! அவர் ஜனங்களுக்கு முன்தோன்றி, பால்யத்தில் ஸ்தூல சரீரத்தைத் துறந்து அவருடைய ஸ்தானத்திற்குச் சென்ற சில காலத்துக்குள் இத்தேசமெங்கும் பரவசமான பக்தியானது ஜனங்களுக்குள் பரவியதன்றோ!

***

அவர் வருங்கால் எத்தேசத்தார், எந்த ஜாதியோர், எம்மனிதர்கள், அவரை உண்மையிலறிந்து, அவரை வழிபடுகின்றார்களோ அவர்களுக்கே க்ஷேமம். அவரைத் திரஸ்கரிப்பவர்களுக்கு சிரேயஸ் கிடைப்பதரிது, அவர் முன் தோன்றின காலத்தில் அவர் உற்பவித்த ஜாதியாராகிய யூதர்கள் அவரைத் திரஸ்கரித்தார்கள். அதின் பயனை அச்சாதியாரின் பின் வரலாறே விளக்குகின்றது, அவர் தோன்றும் தருணமும் இப்பொழுது நிகழும் யுத்த நிர்த்தூளியானது அமர்ந்து, உலகத்தோர்களின் மனதானது பஹிர்முகத்தினின்று அந்தர் முகமாய்த் திரும்பி சாசுவதமான பதத்திற்கு வழியைக் காட்டும் அவரது இனிய உபதேசத்தைக் கிரஹிக்கத் தகுதியாயிருக்கும் காலமும் ஒன்றாயிருக்கும்.

***

அக்காலத்தில் நமது தேசமும் நமது தேசத்தில் வசிப்போர்களும் பூமண்டலத்தில் வியாப்தமாயிருக்கிற பிரிட்டிஷ் ராஜ்ய மண்டலத்தில் (British Empire) அம்மண்ட



லத்தின் மற்ற பகுதிகளைப்போல, அதற்கேற்ற ஸ்தானத்தை வகிக்கப் போகிறது போல் காண்கிறது. இந்தியா சட்ட நிரூபண ஸபையில் கனம் முகம்மது ஷாபி என்பவர் இந்திய தேசத்தின் பிரதிநிதிகளும் பிரிட்டிஷ் ராஜ்ய மண்டலத்தின் விஷயங்களை யோசிப்பதற்காக சில வருஷங்கள்தோறும் கூடிவருகின்ற இம்பீரியல் கான்பரன்ஸ் என்ற சபையில் மற்ற குடியேறின நாடுகளுக் கொப்பத்தம் சேர்ந்து கூட ஏற்பாடு செய்யும் பொருட்டு இந்தியா கவர்ன்மெண்டார் இந்தியா ராஜாங்க காரியதரிசி அவர்கள் மூலமாய் சக்கிரவர்த்தியின் மந்திரிகளைக் கேட்டுக் கொள்ளவேண்டுமென்ற விஷயத்தைப் பிரேரேபித்திருக்கின்றனர். இப்பிரேரேபணையால் ஓர் பெருத்த நற்பயன் சமீபத்தில் இத்தேசத்திற்கு உண்டாவதாக எதிர் பார்ப்பது முடிவு பெறாவிடினும் தற்கால சம்பவங்களின் கதியை குறிப்பிட்டுக் காட்டுகின்றது. அந்தப் பிரேரேபணை காலத்தில் அச்சட்ட நிரூபண சபையின் மற்ற அங்கத்தினர்களாலும் மாட்சிமை தங்கிய கவர்னர்ஜெனரல் லார்ட் ஹார்டிஞ்ஜ் பிரபுவாலும் இந்த தேசத்தின் அபிவிருத்தியில் வைத்திருக்கும் விசுவாசத்தையும் அனுதாபத்தையும் காட்டக்கூடிய அழகிய நோக்கங்கள் அடங்கிய உபந்யாஸங்கள் செய்யப்பட்டன. அவ்வித நோக்கங்கள் நிறைவேற்றப்படின் இச்சண்டைக்குப் பிறகு பிரிட்டிஷ் ராஜ்ய மண்டலத்தில் இந்தியாவால் வகிக்கப்படும் ஸ்தானம் கௌரவமுள்ளதாகவும் மற்ற பகுதிகளாகிய ஆஸ்திரேலியா, கன்னடா முதலிய குடியேறின நாடுகளுக்குச் சமமாகவும் ஆகுமென்று நினைக்கத் தக்கது. இதுவும் உலகத்தின் விகாஸமுறைக்கு ஏற்றதாகும்.

***

பெரும்பான்மையாக இந்தியர்களின் நடத்தையால் ஸ்ரீமான் C. W. லெட்பீடர் அவர்கள் இந்த தேசத்தில்

தைக்கொண்டும் மூன்றும் மனிதனிடம் நீ போய் அதைப் பற்றி அலப்பவேண்டாம். அது ஒரு தீய பாபச்செய்கை யாயிருக்கிறது.

5-வது வாரம்:—இதர மனிதர்களுடைய காரியங்க ளில் அநாவசியமாய்த் தலையிடத்தூண்டும் விருப்பத்தை நீ கண்டிப்பாய் அடக்கிவிடவேண்டும்.

அடியில் கண்ட விதமான விஷயங்களில்தவிர, உன் சொந்தக்காரியத்தைக் கவனி. மௌனமாகிற நற்குணத்தை நீ கற்றுக்கொள். விலக்கு விஷயங்கள்:—

(a) ஒரு குழந்தையையாவது ஒரு மிருகத்தை யாவது யாராவது உபத்திரவம் செய்வதை நீ பார்த்தால்,

(b) எவனாவது ராஜாங்க சட்டத்துக்கு விரோ தமாய் நடப்பதை நீ பார்த்தால்,

(c) உன்னிடம் கற்க, வேறொருவன் உன் கீழ் வருவானாகில்,

கருதிச்செய்யுங் கொடுஞ்செயலை ஒழிக்கவேண்டுமெ ன்று சமயம் நேரிடும்பொழுது நீ தெளிவாய்ப் பிறர்க்கு எடு த்துரைக்க வேண்டும்.

தினசரி அப்பியாஸம்.

1. பேசுவதற்கு முந்தி நன்றாய் ஆலோசி.

2. உன் பேச்சு உண்மையும், பக்ஷமும் உபகார முமானதுதானா வென்று கவனி.

3. இவ்வித சந்தர்ப்பங்களில் குருநாதன் என்ன சொல்வார் என்று அடிக்கடி சிந்தித்துப்பார்,



4. இதுமுதலே, நீ பேசுமுன் விழிப்புடன் ஆலோ சித்துப் பேசும் வழக்கத்திற் பயிலுவது நல்லது. ஏனெனில் தத்துவோபதேச தீக்ஷை பெற வரும் சமயம் உனது வார்த்தை ஒவ்வொன்றையும் நீ கவனிக்கவேண்டிவரும். இல்லாவிட்டால் சொல்லக்கூடாததை நீ தவறிச் சொல்லி விடக்கூடும்.

5. திட்டமாய் உரைக்காததால் அசத்தியத்திற்குள் ளாகாதிருக்கும்பொருட்டு, நீ எப்போதும் நன்றாய் ஆலோ சித்துப் பேசு.

6. அந்தப் பேச்சு வம்புப்பேச்சாய்விட்டால்,பாபகர மாகிறது.

7. சூக்ஷ்ம சரீரம் (அதாவது காம சரீரம்) அநேக ஆசைகளுடன் கூடியது. உன்னைக் கோபம் கொள்ளும்படி யாகவும்,கொடிய வசனங்களைப் பேசும்படியாகவும், மாத்ஸ ரியங்கொள்ளும்படியாகவும், பணத்தில் பேராசை கொள் ளும்படியாகவும், மற்றவர்களுடைய பொருள்களைக்கண்டு அசூயை அடையும்படியாகவும், நீ மனக்கிலேசத்திற்குட் படும்படியாகவும் அது விரும்பும்.

ஆனால் அவைகளொன்றும் உனக்கு (நிஜமான ஆத் மாவுக்கு) அவசியமில்லை.

8. சொற்பப்பேச்சுடன் நிற்பது நல்லது.

9. நீ பேசவிரும்புவது சத்தியமாயும், பிரியமாயும் பிரயோஜனமுள்ளதாயுமிருக்குமென்று முற்றிலும் நிச்சய மாயிருந்தாலொழிய, மௌனமே நல்லது.

10. மற்றையோர்களைக் காட்டிலும் சமர்த்தனெனப் பிறர் உன்னைக் கருதவேண்டுமென்றாவது, உலகிற் புகழ் பெறவாவது நடிக்க இச்சிக்காதே, பேச ஆசைப்படாதே.

11. மிக்க சாதாரணப்பேச்சு அநாவசியம். அது மூடத்தனமுமாம். அது வம்புப்பேச்சாய்விட்டால், பாப கரமாகிறது.

12. ஆகையால் பேசுவதைவிடக் கேட்கப்பழகு.

13. நேரேவிரும்பினாலன்றி நீ அபிப்பிராயம் கொடாதே.

14. அறிதல், துணிதல், தீர்மானித்தல், மௌனமாயிருத்தல், இவைகளைச் சாதனங்களாகச்சொல்வதும் ஒரு முறை:—இந்நான்கில் கடைசியானது எல்லாவற்றிலும் கஷ்டமானது.

15. பிறர் செய்யும் எக்கார்யத்திற்கும் நீயாக ஒரு காரணங் கற்பிக்காதே.

16. இன்னொரு மனிதன் என்ன செய்தாலென்ன. என்னசொன்னாலென்ன, எவ்வித அபிப்பிராய முள்ளவனானாலென்ன. இவைகள் உன்னுடைய காரியங்களல்ல. அவைகளில் ஒருவிதத்திலும் சம்பந்தப்படாமல், நீ இருக்கப் பயிலவேண்டும்.

17. ஒருவன் வேறொருவனோடு தலையிட்டுக்கொள்ளாதவரையில் தன்னிஷ்டப்பிரகாரம், அவனுக்கு நினைக்கவும், பேசவும், செய்யவும், பூர்ணஸ்வாதீனமுண்டு. அவனைக் குறித்துப் பேச உனக்குப் பாத்தியமில்லை.



18. கொடுமை யென்பது செய்கையில் மாத்திரமல்ல, வாய்ப்பேச்சிலு மிருக்கிறது. வேண்டுமென்றே வேறொரு ஜீவஜந்துவுக்கு உபத்திரவஞ் செய்வது கருதிச்செய்யும் கொடுஞ்செயலாம்.

19. சில சமயங்களில் கவனியாது சொல்லுமொரு வார்த்தை, வர்மத்துடன் சொல்லிய வார்த்தைபோல் துன்பத்தை விளைவிக்கின்றது. ஆகையால் அறியாமல்கூட, உன்னைக் கொடுஞ்செயல்களுக் குட்படுத்திக்கொள்ளாது, ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

20. எதைக் குருநாதன் சொல்லமாட்டார் என்று நீ நினைக்கிறாயோ அதை ஒரு பொழுதும் நீயும் சொல்லக் கூடாது.

21. உன் மூலமாய், ஈசுவராநுக்கிரஹ அன்பு, உன் உடனொத்த மற்ற மனிதர்களுக்கும், பெருகும்படி நீ ஒரு வாய்க்காலா யேற்படவேண்டும்.

எவனைப்பற்றியாவது நீ ஏதாவது சமாசாரம் கேட்டால், நீ அதை வெளிப்படுத்தாதே. அது பொய்யாயிருக்கலாம். நிஜமாயிருந்தாலும்கூட அதைப்பற்றி நீ ஒன்றும் பேசாமலிருப்பதே நல்லது.

23. நீ ஒருவரைப்பற்றியும் கெடுதலாய்ப் பேசாதே.

24. ஒருவனைப்பற்றி வேறொருவன் கெடுதலாகப் பேசினாலும் செவிகொடுத்துக்கேளாதே:

25. "ஒருவேளை நிஜமில்லாமலிருக்கலாம். அப்படியே நிஜமாயிருந்தாலும் அதைப்பற்றிப் பேசாமலிருப்பது நல்ல"தென்று மிருதுவாய்ச் சொல்,

26. நீ யாராவது ஒருவனைப்பற்றி எதையும் கேள்விப்பட்டால் அதைப்பற்றி வேறொருவனிடம்போய் வீணாய் அலத்தாதே. அது முற்றிலும் கெட்ட காரியம். வம்புப் பேச்சு அன்புக்கு விரோதமான பாபச்செய்கை.

27. உன்னுடைய பேச்சு உண்மையானதாகவும் திட்டமானதாகவும், பெருக்கிக் கூறுமலும், உள்ளதை உள்ளபடியே கூறவேண்டும்.

28. ஈசுவரபக்தியை உத்தேசித்தே, சமயம் நேரிடும் பொழுது, இவ்வித கருமங்கள் கூடாவென்று நீ தெளிவாய் எடுத்துரைக்கவேண்டும். (கருதிச்செய்யும் கொடுமை) உடற்கூறுசாஸ்திர பரீக்ஷகர்கள் இதைச் செய்கிறார்கள். அநேகம் பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் இதை வழக்கமாய்ச் செய்கிறார்கள்; அவ்விதமே வேட்டை விளையாட்டென்று சொல்லி, புத்திபூர்வமாய், ஈசுவர சிருஷ்டிகளாகிய ஜீவஜந்துக்களைக் கொல்கிறார்கள்.

29. இதரமனிதர்களுடைய காரியங்களில் அநாவசியமாய்த் தலையிடுகிற இன்னொரு சாதாரண விருப்பத்தை நீ கண்டிப்பாய் அடக்கிவிடவேண்டும்.

உன் சொந்தக்காரியத்தைக் கவனி. மௌனமென்கிற நற்குணத்தை நீ கற்றுக்கொள். (இதர விலக்கு விஷயங்களைப்பற்றி வார அப்பியாசத்தில் பார்.)

30. "ஒரு மனிதன் எதைச் செய்திருக்கின்றானோ அதை மற்றொருவனும் செய்யக்கூடும், நானும் ஒரு மனிதன். மேலும் மனிதனில் ஈசுவராம்சமுள்ளவனாயு மிருக்கிறேன். என்னாலிக்காரியம் செய்யக்கூடும். நான் செய்வேன் என்று அடிக்கடி உன் மநத்திற் திடங்கொள்வாயாக.

(இன்னும் வரும்.)

K. S. ராமச்சந்திர ஐயர்.




# பூர்ணசந்திரோதயம்.

தொகுதி 6 } 1915௵ டிசம்பர்௴ ராக்ஷஸ௵ மார்கழி௴ { பகுதி 8.

## தற்கால நிலைமை.

ஸஹோதரர்களே!

இந்நாற்பதாம் வருஷோத்ஸவத்திற்கு உங்களை நல்வரவேற்பதோடு, இங்கே கூடியிருக்கும் இம்மஹாஸபையை அநுக்ரகிக்குமாறு, புயல் மேகங்கள் போன்ற அக்ஞான இருள் மூடிய நாம்மேல்நோக்கித் துதிக்கவேண்டிய ஜகத் ரக்ஷகர்களான குருநாதர்களைப் பிரார்த்திக்கின்றேன் நமது பிரஹ்மக்ஞான ஸபையை இத்தனைநாள் போலவே, இனிமேலும், பரிபாலித்தும் ரக்ஷித்தும் வருவார்களாக. அவர்கள் தமது உண்மை ஊழியர்களான ஹெலினு பேட்

* பம்பாயில் சென்றமீ நடந்த, பிரஹ்மக்ஞான ஸபையின் நாற்பதாவது வருஷமகோத்ஸவத்தில் மாதாஸ்ரீ அன்னிபெஸண்டு அம்மையார், அக்ராஸனருரையாகச் செய்த பிரஸங்கம். (ப-ர்.)

ரவ்ஞ பிளவாட்ஸ்கீ அம்மையார், ஹென்ரீ ஸ்டீல் ஆல்காட் இவ்விருவர் மூலமாய் ஏற்படுத்திய இச்சபையைத் தமதள விறந்த சக்தியால் காப்பாற்றியும், தேர்ந்த ஞானத்தால் வழி நடத்தியும், இடையறாவுழைப்பால் உற்சாக மூட்டியும் வருவார்களாக.

***

இவ்வருஷ முழுமையும், நமது சபையுள்ள எத்தேசத்திலும் சாந்தமும் ஸமாதானமுமே நிகழ்ந்தனவாயினும் மத்ய ஐரோப்பாவில் உள்ள நமது ஸஹோதரர்களினின்றும் பிரிந்தவர்களாகவே யிருக்கிறோம். திரும்பவும் முன் போல அவர்களைக் கண்ணாறக்கண்டு கைகுலுக்கப் போகிறோமோ என்றுகூடச் சந்தேகிக்குமாறு, யுத்தத்தின் கொடுமை அவ்வளவு கோரமாயிருக்கிறது. மேல்நாட்டு நாகரிகத்தின் அஸ்திவாரங்களையுங்கூட அடியொட்ட அழிக்க யத்தனித்திருக்கும் இந்த யுத்தத்தால் ஏற்பட்ட துவேஷம் என்னும் இரத்தமயமான பிரவாஹம் ஒருவரையொருவர் சமீபிக்கவொட்டாமல் ஊடே பாய்ந்து பிரித்துவைத்திருக்கின்றது. அப்பிரவாஹம் மிகவும் ஆழமாயிருக்கிறது. இது சாமாந்ய யுத்தமானால் இவ்விதம் பிரித்து வைக்க முடியாது. இது ஓர் ஜாதியாருக்கும் மற்றொரு ஜாதியாருக்கும் உலக சரித்ரத்தில் அடிக்கடி நிகழ்கின்றயுத்தமல்ல. தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் நடந்து வருகின்ற யுத்தம். தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் போர் நிகழ்கின்றஇக்காலத்தில் ஆத்ம வித்யா ஸங்கம் எதுவும், ஒரு பக்கத்திலும் சேராமல் ஸமாதானமாயிருக்க முடியாது. அவ்விதமிருப்பின், ஆத்ம வித்யையின் முக்ய தத்துவங்களுக்கு நேர் விரோதமாய் நடப்பதாகும்.

***

## உலகப்போராட்டம்

உயர்ந்த தத்துவங்கள் பல, கதைகள் ரூபமாக விளக்கப்பட்டிருக்கும் புராணங்களில் இத்தகைய தர்மா தர்ம யுத்தங்கள் அநேகம் உள்ளன. உலக நாகரிகத்தின் அபி



விருத்தி மார்க்கத்தில் சிலசில இடங்களில் இரண்டு கிளைகள் பிரிகின்றன. ஒன்று தர்ம மார்க்கம், மற்றொன்று அதர்ம மார்க்கம் அத்தருணத்தில் ஒவ்வொரு ஜாதியாரும் ஏதாவதொன்றை அவசியம் கைப்பற்றும்படி நேருகிறது. எந்தெந்த மார்க்கத்தில் செல்கிறார்களோ, அதற்குத் தக்கபடி அபிவிருத்தியையோ, நாசத்தையோ அந்தந்த ஜாதியார்கள் அடைகிறார்கள். ஹிந்துமதம் ராமராவண யுத்தத்தைப்பற்றிக் கூறுகின்றது. ஜோராஸ்திரியமதம் ஆஹுரா மாஸ்டாவுக்கும், ஆஹ்ரிமானுக்கும் நடந்த யுத்தத்தையும், ஹிப்ரேயமதமும் கிறிஸ்துவ மதமும், தேவன், சாத்தான் என்றும், மஹம்மதீய மதம் அல்லா எப்லீஸ் என்றும் கூறுகின்றன. இப்பெயர்கள் என்ன உண்மையைக் குறிக்கின்றனவென்பதைப் பார்ப்போம். ஆத்மா வானவன் மேன்மேலும் அவனுடைய அபிவிருத்தியை நோக்கிச்செல்கிறதையும், அவ்விதம் ஆத்மாவானவன் வளர வளரச் சரீரமும் வளர்ந்துவருவதையும், பிறகு ஓர் குறித்த அளவுக்குமேல் அச்சரீரம் வளரமாட்டாமையால், ஆத்மாவின் வளர்ச்சிக்குத்தடையாய் ஏற்படுகிறது; ஏற்படவே அச்சரீரம் அழிந்து, முன்னினும் அதிக நயமான புதிய சரீரம் அவ்வாத்மாவுக்கு ஏற்படுகின்றது என்பதையும் பற்பல தேசகாலங்களில் பற்பல ஜாதியார் அறிந்தனர். சரீரம் வளர்ச்சிக்கு உபயோகமாயிருக்கிற வரையில் நன்மையாயும், வளர்ச்சியைத் தடைசெய்கிறபோது தீமையாயும் விளங்குகிறது. இராணுவ பலமும் அரசாங்க முறையில் ஏக அதிபத்யமும் ஓர்காலத்தில்உபயோகமாயிருந்தன. மனிதர்களிற் பெரும்பாலர் அறிவின் விளக்கமற்றிருந்த போது புத்திமானை ஒரே மனிதனுடைய ஆஞ்ஞையும், மனிதர்கள் காட்டு மிராண்டிகளாகவும், அறிவில்லாமல் முரட்டுத்தனமாகவும் இருந்தகாலத்தில், அவர்களை பலத்தாலேயே வெல்வதற்கு இராணுவமும் ஸைந்யங்களும்அவசியமாயிருந்தன. மேல்நாட்டு முரட்டு ஜாதியார்களுக்குத் தக்கபடி, இருப்புத் தடியையும், உருக்குக் கத்தியையுமே பிரதானமாகக் கொண்டு, நாகரிகத்தை விருத்திசெய்வது

ரவ்ளு பிளவாட்ஸ்கீ அம்மையார், ஹேன்ரீ ஸ்டீல் ஆல்காட் இவ்விருவர் மூலமாய் ஏற்படுத்திய இச்சபையைத் தமதள விறந்த சக்தியால் காப்பாற்றியும், தேர்ந்த ஞானத்தால் வழி நடத்தியும், இடையருவுழைப்பால் உற்சாக மூட்டியும் வருவார்களாக.

***

இவ்வருஷ முழுமையும், நமது சபையுள்ள எத்தேசத்திலும் சாந்தமும் ஸமாதானமுமே நிகழ்ந்தனவாயினும் மத்ய ஐரோப்பாவில் உள்ள நமது ஸஹோதரர்களினின்றும் பிரிந்தவர்களாகவே யிருக்கிறோம். திரும்பவும் முன்போல அவர்களைக் கண்ணுறக்கண்டு கைகுலுக்கப் போகிறோமோ என்றுகூடச் சந்தேகிக்குமாறு, யுத்தத்தின் கொடுமை அவ்வளவு கோரமாயிருக்கிறது. மேல்நாட்டு நாகரிகத்தின் அஸ்திவாரங்களையுங்கூட அடியொட்ட அழிக் கயத்தனித்திருக்கும் இந்த யுத்தத்தால் ஏற்பட்ட துவேஷம என்னும் இரத்தமயமான பிரவாஹம் ஒருவரையொருவர் சமீபிக்கவொட்டாமல் ஊடே பாய்ந்து பிரித்துவைத்திருக்கின்றது. அப்பிரவாஹம் மிகவும் ஆழமாயிருக்கிறது. இது சாமாந்ய யுத்தமானால் இவ்விதம் பிரித்து வைக்க முடியாது. இது ஓர் ஜாதியாருக்கும் மற்றொரு ஜாதியாருக்கும் உலக சரித்ரத்தில் அடிக்கடி நிகழ்கின்ற யுத்தமல்ல. தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் நடந்து வருகின்ற யுத்தம். தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் போர் நிகழ்கின்ற இக்காலத்தில் ஆத்ம வித்யா ஸங்கம் எதுவும், ஒரு பக்கத்திலும் சேராமல் ஸமாதானமாயிருக்க முடியாது. அவ்விதமிருப்பின், ஆத்ம வித்யையின் முக்ய தத்துவங்களுக்கு நேர் விரோதமாய் நடப்பதாகும்.

***

## உலகப்போராட்டம்

உயர்ந்த தத்துவங்கள் பல, கதைகள் ரூபமாக விளக்கப்பட்டிருக்கும் புராணங்களில் இத்தகைய தர்மா தர்ம யுத்தங்கள் அநேகம் உள்ளன. உலக நாகரிகத்தின் அபி



விருத்தி மார்க்கத்தில் சிலசில இடங்களில் இரண்டு கிளைகள் பிரிகின்றன. ஒன்று தர்ம மார்க்கம், மற்றொன்று அதர்ம மார்க்கம் அத்தருணத்தில் ஒவ்வொரு ஜாதியாரும் ஏதாவதொன்றை அவசியம் கைப்பற்றும்படி நேருகிறது. எந்தெந்த மார்க்கத்தில் செல்கிறார்களோ, அதற்குத் தக்கபடி அபிவிருத்தியையோ, நாசத்தையோ அந்தந்த ஜாதியார்கள் அடைகிறார்கள். ஹிந்துமதம் ராமராவண யுத்தத்தைப்பற்றிக் கூறுகின்றது. ஜோராஸ்திரியமதம் ஆஹுரா மாஸ்டாவுக்கும், ஆஹ்ரிமானுக்கும் நடந்த யுத்தத்தையும், ஹிப்ரேயமதமும் கிறிஸ்துவ மதமும், தேவன், சாத்தான் என்றும், மஹம்மதீய மதம் அல்லா எப்லீஸ் என்றும் கூறுகின்றன. இப்பெயர்கள் என்ன உண்மையைக் குறிக்கின்றன வென்பதைப் பார்ப்போம். ஆத்மா வானவன் மேன்மேலும் அவனுடைய அபிவிருத்தியை நோக்கிச்செல்கிறதையும், அவ்விதம் ஆத்மாவானவன் வளர வளரச் சரீரமும் வளர்ந்துவருவதையும், பிறகு ஓர் குறித்த அளவுக்குமேல் அச்சரீரம் வளரமாட்டாமையால், ஆத்மாவின் வளர்ச்சிக்குத்தடையாய் ஏற்படுகிறது; ஏற்படவே அச்சரீரம் அழிந்து, முன்னினும் அதிக நயமான புதிய சரீரம் அவ்வாத்மாவுக்கு ஏற்படுகின்றது என்பதையும் பற்பல தேசகாலங்களில் பற்பல ஜாதியார் அறிந்தனர். சரீரம் வளர்ச்சிக்கு உபயோகமாயிருக்கிற வரையில் நன்மையாயும், வளர்ச்சியைத் தடைசெய்கிறபோது தீமையாயும் விளங்குகிறது. இராணுவ பலமும் அரசாங்க முறையில் ஏக அதிபத்யமும் ஓர்காலத்தில் உபயோகமாயிருந்தன. மனிதர்களிற் பெரும்பாலர் அறிவின் விளக்கமற்றிருந்தபோது புத்திமானான ஒரே மனிதனுடைய ஆளுகையும், மனிதர்கள் காட்டு மிராண்டிகளாகவும், அறிவில்லாமல் முரட்டுத்தனமாகவும் இருந்தகாலத்தில், அவர்களை பலத்தாலேயே வெல்வதற்கு இராணுவமும் ஸைந்யங்களும் அவசியமாயிருந்தன். மேல்நாட்டு முரட்டு ஜாதியார்களுக்குத் தக்கபடி, இருப்புத் தடியையும், உருக்குக் கத்தியையுமே பிரதானமாகக் கொண்டு, நாகரிகத்தை விருத்திசெய்வது

அவசியமாயிருந்தது. ஐரோப்பாவில் இராஜ்யாதிகாரிகளும், மதஸ்தாபகர்களும் முரட்டுத் தனத்தாலேயே, தற்கால நாகரிக அபிவிருத்திக்குரிய அஸ்திவாரங்களைக் கட்டினர்.

***

ஸ்வாதீனம் என்ற தர்மமானது ஐரோப்பிய தேசங்களிற் பரவவே, ஐரோப்பிய சரித்திரத்தின் மத்யகாலத்து உடைகளாகிய பழய தர்மங்கள், நாகரிக அபிவிருத்திக்குச் சரிவரவில்லை. வளர்கின்ற ஆத்மாவைக்கூட பழைய உடைகள் தடைசெய்து நாகரிக அபிவிருத்தியைக் கூழையாக்கிவிடுமோ என்ற பயம் வரவே, பழையது தகர்ந்து போகவேண்டிய ஆவசியகம் நேர்ந்தது.

***

பிரகிருதியில் ஆகாசத்திற் பதிந்திருக்கும் விஷயங்களைப் பார்த்தறிந்த குப்தவித்யையின் பிரகாரம், எல்லாச் சக்திகளுக்கும் ஆதாரமாய் ஈசுவரனின் ஸங்கல்பசக்தி உளதென்றும் ஈசுவர பிரகிருதியானது சரீரமாயும், ஈசுவர புருஷனானவன் சரீரியாயும், புருஷனுடைய உயிர் வலிமையால் பிரகிருதியானது தொழிற்படுகின்றதென்றும், இவ்வுயிரானது மிருகம், மனிதன், தேவர், ரிஷி, ஈசுவரன் இவர்களிடத்தில் எல்லாம் விளங்கியபோதிலும் பற்பல படித்தரமாய் இயங்குகின்றது என்றும், இவ்வுயிரானது ஈசுவர ஸங்கல்ப சக்தியின் ஆதாரத்தைக்கொண்டே சரீரமாகிய பிரகிருதியைத் தொழிற்படச் செய்கிறதென்றும், எந்த ரூபமான கிரியைக்கும் ஸங்கற்ப சக்தியே முதற்காரணமென்றும் நாமறியற்பாலர். ஆகவே விகாஸமுறையில், விகாஸமுறைக் கநுகூலமான ஸங்கல்ப சக்தியுமுள்ளது. விகாஸமுறையைத் தடைசெய்யும் சக்தியுமுள்ளது. மநுஷ்யர்களைப்போலவே, தேவர்களும் இவ்விருவித போராட்டங்களுக்கு நடுவே ஊசலாடுகின்றனர். புதிய நாகரிகத்திற்கு எது அநுகூலமாயிருக்குமோ, அம்மார்க்கத்தில் செல்லும் ஜாதியர்களே விருத்திக்கு வருவார்கள். மற்றவர்களின்



கதி அதோகதிதான். பிரத்யக்ஷமாய் பூலோகத்தில் மனிதர்கள் தன்னைமறந்து சண்டை செய்வதுபோலவே, ஸூக்ஷ்ம லோகத்திலும் சண்டை நடந்துகொண்டிருக்கிறது இனி வரப்போகும் அநேகவாயிர வருஷங்களுக்கு மநுஷ்ய வர்க்கத்தின் ஸ்திதியை பாதிக்கக்கூடிய இத்தகைய யுத்தங்கள் பூலோகத்தில் நடக்கும்போதெல்லாம், ஸூக்ஷ்ம லோகத்திலும் யுத்தம் நடக்கின்றது. விகாஸமுறையில் ஈசுவர ஸங்கல்பம் நிறைவேறுமாறு உழைக்கிற ஸூக்ஷ்மலோகவாஸிகள் தான், உலகின் ஆளுகையை வகிக்கின்ற தேவ, ரிஷி கணங்களாவர். இவர்களுக்கு ஈசுவர ஸங்கல்பத்தின் பயனான பலம் அநுகூலமாயிருக்கிறது. இதற்கு விரோதமாகச் சிதைந்துபோன பழைய வழக்கங்களிலேயே முரண்டிக்கொண்டிருப்பவர்கள் அஸுரர்களாவர். இருதிறத்தார்களும் மனிதர்கள் மூலமாகவே தங்கள் ஜயத்தையோ, அபஜயத்தையோ அடைகிறார்கள். மேலுலகத்தில் நடப்பதன் நிழலே இவ்வுலகத்தில் விளங்குவதாகும். தேவர்களும் அசுரர்களும் மநுஷ்ய வர்க்கத்தின் ஆளுகையைக் குறித்தே சண்டை செய்துகொள்கிறார்கள். இத்தகைய சண்டையின் முடிவுதான், கிறிஸ்தவர்கள் சொல்கிறபடி ஓர் ஜாதியாரின் "நியாயத் தீர்ப்பு நாள்" ஆகும்".

***

இந்த யுத்தம் மேலுலகப் போராட்டத்தின் சாயையாகையால்தான், குப்தவித்யையிற் பயிலுவோன் எவனும் ஒரு கட்சியையும் சேராதிருக்க முடியாது என்று சொன்னேன். அவனுடைய பூர்ண சக்தியையும் ஏதாவதொரு கட்சிக்காகவேதான் உபயோகிப்பான். ஒரு பக்கத்திலும் சேராமலிருந்தால் துரோகியாவான். ஜெர்மானியர்களுடைய ஸைந்யமானது அசுரர்களது வசப்பட்டிருக்கிறது. வருங்காலத்திற் கேற்காத ராஜாங்க முறையாகிய ஏகாதிபத்யச்செருக்கும், இராணுவபலச்செருக்குமே அவர்களது

கொள்கையாயிருக்கிறது. "கடைசி முடிவைக்கொண்டு அவர்களை நீங்கள் நிதானிக்க முடியும்", காமவெறி கொண்டும் ரத்தவெறிகொண்டும் ஸ்திரீஹத்தி செய்துவந்த சில கொடியர்களை நினைத்து, இவ்விதம் யூகிக்கின்றேனல்லன். ஜெர்மானியர்களின் ராஜ்யத்தின் தர்மமே என்னவெனில், அந்யர்களை "ஹிம்ஸையாலும், பயமுறுத்தியும்" வெல்ல வேண்டு மென்பதேயாம். தற்கால நாகரிகத்திய ஜாதியார், எவருக்கும் அங்கீகாரமாகாத யுத்த தர்மங்களைக் கைக்கொண்டு, பண்டைக் காலத்தில்கூட யுத்த தர்மத்திற்குப் புறம்பாக விலக்கப்பட்ட அக்ரமங்களைப் பகையின் ஆவேசத்தால் செய்து வருகின்றனர். தமது தேசம் செழிக்கும் பொருட்டுப் பிறதேசங்களை யபகரிக்கலாம், பகைக்கலாம் என்னும் கொள்கையுடையவர்கள் ஜெர்மானியர்கள்.

***

வெள்ளியம்பலத்தின் ஊழியர்களான நமக்கோ, அன்பு தான் பரம நற்குணமாகும். ஸஹோதர பாவத்தையும், ஸஹகாரித்வத்தையுமே பிரதான லக்ஷணங்களாயுடைய நாகரிகந்தான் இனி நிலைபெறத்தக்கது என்பதே நமதபிப்பிராயம். ஆகையால் நாம் ஜகத்ரக்ஷகர்கள் பக்கமேதான் சேருவோம். நியாயத்திற்காகப் போராடும் பிரிட்டிஷ்காரருடைய கட்சியே நமக்கு அங்கீகாரம். நியாயத்தைவிட்டு முரட்டு பலத்தால் மட்டும் முன்னுக்கு வரலாம் என்ற துணிபையுடைய ஜர்மானியர்கள் நமக்கொருபோது மங்கீகாரமாகார். வெள்ளியம்பலத்தாராலும், அவர்களின் அடியார்களாலும் ஸ்தாபிக்கப்பெற்ற நமது பிரஹ்மக்ஞான சங்கமானது, விகாஸமுறையில் ஈசுவர சங்கல்பத்திற்கு அநுகூலமாய் யுத்தம் செய்யும் கட்சிக்காகவே உழைக்க வேண்டும். இவ்வித நடபடிக்கையால், மத்ய ஐரோப்பாவிலுள்ள நமது சங்கத்தார், நமது சங்கத்தைவிட்டு விலகிய போதிலும் நாம் கவலைப்படவேண்டாம். மஹான்களின் அநுக்ர



ஹத்திற்குப் பாத்ரமாகாமற் போவதைவிட நமது மெம்பர்கள் விலகிப்போவது பெரிய நஷ்டமாகாது. துன்மார்க்கத்தில் சேர்ந்து கௌரவமடைவதைக் காட்டிலும், ஸன்மார்க்கத்தில் சேர்ந்து அழிந்து போனாலும் போகலாம்.

***

[உலகமுழுமையிலும் நமதுசபை உழைத்துவருகின்ற முயற்சியைப்பற்றிப் பேசிப்பின்வரும் முடிவுரை கூறலானார்-ப-ர்.]

நமது சங்கம் எங்கெங்கிருக்கின்றதோ அங்கெல்லாம், பிறர் நலத்தில் மிகவும் உழைப்பவர்கள் என்று நாம் கருதப்படுவதாலும், குப்த வித்யைதான் நவீன பௌதிகசாஸ்திர முறையையுந் தழுவுகிற மதமென்று கருதப்படுவதாலும், இப்போது நவீன பௌதிக சாஸ்திரமும் முன்னிலுமதிகமாய் விருத்தியடைந்திருப்பதாலும், நமது பொறுப்பும் உத்தரவாதமும் மிக அதிகரித்திருக்கின்றது. அதற்குத் தக்கவாறு, பற்பலமத ஆராய்ச்சி வாயிலாகவும், யுக்தி பூர்வமாகவும், நீதிமுறையை வற்புறுத்தியும் பிறருக்கு ஏற்ற வழிகளில் நாம் உதவிபுரிய வேண்டியவர்களாயிருக்கிறோம். நுனிப்புல் மேய்வதுபோல் வேலை செய்வது, அக்ரமமான பாதகம் என்று கூறலும் பொருந்தும். பொது ஜனங்கள் நம்மைச் சந்தேகிக்கும் காலத்திலாவது, அவர்கள் குற்றங் கண்டு பிடிக்காவண்ணம், ஜாக்ரதையாய் நடந்துவருவோம் நம்மைப் பிறர் கௌரவத்தோடு பாராட்டிவரும் இக்காலத்தில்தான், நம்மைநாமே பிரதி நிமிஷமும் சீர்திருத்திக் கொள்ளவேண்டும். பிரஹ்மக்ஞானி ஒவ்வொருவனும் உண்மையாகவே பொதுநலங் கருதிய உழைப்பைக் கைக்கொள்வானாகையால், அவனவன் எத்தகைய சிலாக்யமான கைங்கர்யத்தை பகவானுக்கு அர்ப்பணம் செய்யலாம் என்பதைச் சிந்திக்கக் கடவன். சுத்தத் தங்கத்தையும், கலப்பு உலோகங்களையும் அக்நியானது எவ்விதம் பிரித்தே காண்பிக்குமோ அவ்விதம் ஈசுவரன் முன்னிலையில் நாம் எண்ணித் துணியும் கருமத்தின் யோக்யதையும் விளங்கும்.

ஸஹோதரர்களே! உலகினர் பெரும்பாலர் அறியாத ஓர் பெரிய உண்மையை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். தற்கால நிலைமையானது அதிசமீபத்தில் விடியப்போகிற சுப காலத்தைக் குறிக்கின்றதென்பது உங்களுக்குத் தெரியும். அக்காலத்தில் உதிக்கப்போகின்ற லோககுரு ஒருவர்தான் இவ்வுலகில் ஸமாதானத்தை யேற்படுத்திப் புதிய நாகரிகத்தை நிலைநிறுத்துவர். அந்த சுபகாலத்திற்குக் காரணஸ்தரான லோககுருவின் ஜனனத்திற்குமுன் ஏற்படுகின்ற பிரஸவ வேதனைகள்தான் யுத்தம்முதலிய தற்காலக் குழப்பங்கள் அனைத்துமென்றறிக. ஆயினும் லோககுருவின் உதயத்திற்குப் பிறகேற்படுவது அளவிலா வானந்தமும், பரிபூர்ணமான ஸமாதானமுமன்றோ! ஆகையால் நாம் விசனிக்கவேண்டுவதேன்! தைர்யமாயிருங்கள். பிரஸவ அறையில் இப்போதிருந்து மருத்துவம பார்த்துக்கொண்டிருக்கின்றோம். செல்வகுமாரன் பூமியில் உதிப்பது நிச்சயம். அவர் வரவு எதனாலும் தடைப்படாது. எத்தகைய பெருங்காரியமும் மிகுந்த சிரமமின்றி இலேசாய் முடியாது. புயற்காற்றும் கரிய மேகங்களும் சேர்ந்து ஆகாயத்தை மறைப்பினும், ஒரு க்ஷணத்தில் அவைகலைந்து, ஆகாயந் தெளிந்து அன்பே உருவெடுத்த நக்ஷத்ரம் எவ்விதம் பிரகாசிக்கின்றதென்பதை அறியீர்களா? பெரும்பாலர் துக்கக் கண்ணீரால் பார்வை மங்கியவர்களாயிருக்கிறார்கள். ஞானிகள் லோகநாதரின் ராஜசின்னமான நக்ஷத்ரத்தைப் பிரத்யக்ஷமாய்த் தரிசிக்கின்றனர். அது அவரது அளவிறந்த பராக்ரமத்தாலும், பூர்ண அன்பாலும் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. ஸஹோதரர்களே! மேகங்கள் மூடியிருக்கும் இத்தருணத்திலும் நீங்கள் மேல் நோக்குவீர்களாயின் நக்ஷத்திரத்தைக் காணலாம்.

---

## பிம்பாராதனை.

பூவுலகில் நிகழாநின்ற எந்த மானிடவர்க்கத்தை எடுத்துப் பார்த்தாலும், அவை ஒவ்வொன்றும் ஈசனை வழிபட ஒவ்வொரு உபாயம் தேடியிருக்கிறதாகக் காணப்படும். இந்த உபாயத்தைத் தேடாத மானிடக்கூட்டர் காட்டுமனிதர்க (Savages) ளேயாவார்கள். இந்த உபாயங்கள் வெளிப்பார்வைக்கு வெவ்வேறாகத்தோன்றினாலும், கடைசியில் ஒரே உத்தேசத்தில் தான் போய்ச் சேருகின்றது என்பது சிறிது ஆராய்ச்சியுடையவர்க்கும் புலப்படும்.

இஃது இங்ஙனமிருக்க கடவுளை சிலை ரூபமாக ஆராதிப்பது அநேகம் மதங்களில் நடந்து வந்தாலும், இந்து மதத்தில் அது அதிகமாக நடக்கின்றது பற்றியோ, வேறெந்தக் காரணம்பற்றியோ அதைச்சிலர் இகழ்கிறார்கள். தேவனை எந்த ரூபத்தில்தான் ஆராதிக்க வேண்டுமென்று ஒருவருக்குந் தெரியாது. கடவுளைப்போய் பார்த்துவந்தவர்கள் யாருமில்லை. அப்படிப்போய் யோகதிருஷ்டியால் அறிந்துப் பெரியோர்கள் சொல்லியிருப்பதை இப்போது நம்பவும் மாட்டார்கள். தற்கால நாகரிகத் தவர்கட்கு ரஸாயன சாஸ்திரத்தில் சோதனைகள் செய்து காண்பிப்பதுபோல்காண்பித்தால் ஒருவேளை நம்புவார்களோ? என்னவோ! அப்படிக் காண்பிக்கவும் தடையில்லை. வழியிருக்கிறது, படித்து அநுஷ்டியுங்கள் என்று சொன்னால், காசிற்கு பிரயோஜனமில்லாத வித்தையைக் கற்றென்ன செய்வது என்கிறார்கள்!

இதைவிட்டு ஈசனுடைய குணங்களைப் பிரித்துப் பார்ப்போம். ஈசன் எங்கும் நிறைந்தவராயும், சச்சிதானந்த ஸ்வரூபராயும், வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதவராயும், எல்லாவற்றையும் தரித்துக்கொண்டிருப்பவராயும் இருக்கிறார். "அவனன்றி ஓர் அணுவும் அசையாது." பகவத் கீதையில்

மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய।

என்று சொல்லியிருக்கிறது. அதின் பொருள் என்னைத் தவிர்த்து வேறே யாதொன்றும் கிடையாது" என்று விளங்கும். இனியும்

விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நம் ஏகாம்சேந ஸ்திதோ ஜகத்।

'என்னுடைய ஒரு அம்சத்தினால் இந்த ஜகத் முழுதும் வியாபித்துக்கொண்டு நான் இருக்கிறேன் என்று சொல்லியிருக்கிறார். இப்படி எத்தனை அம்சங்கள் அவருக்கு இருக்கக்கூடும்? பாகவதத்தில் கிருஷ்ணபகவானை பார்த்து பிரஹ்மா சொல்லுகின்றார்.

க்வேத்ருக்விதாவிகணிதாண்டபராணுசர்யா
வாதாத்வரோமவிவரஸ்ய ச தே மஹித்வம்।

"நமது தேகத்திலிருக்கும் ரோம த்வாரங்கள் வழியாக எப்படி அணுக்கள் புகுந்து வெளியே வருகின்றனவோ, அதைப்போலபூகோளங்கள் பகவானிடம் சஞ்சரிக்கின்றன. ஆகையால் அவர் எவ்வளவு மகானாயிருக்கவேண்டும்,



"Whither shall I go from thy Spirit? Or!
Whither shall I flee from thy presence?
If I ascend up into heaven, thou art there
If I make my bed in hell, behold! thou art there
If I take the wings of the morning and dwell in the uttermost parts of the sea, even there shall thy hand lead me and thy right hand shall hold me"

(Psalm 139)

"தங்களுடைய சைதன்னியத்தை விட்டு நான் எங்கு செல்வேன்? தங்களுடைய சந்நிதியைவிட்டு நான் எவ்விடம் பறப்பேன்? நான் ஸ்வர்க்கத்திற்கு போனாலோ அவ்விடத்திலும் தாங்கள் இருக்கின்றீர்கள். நான் நரகத்தில் விழுந்தாலோ ஆச்சரியமே! அவ்விடத்திலும் தாங்களுண்டு. அருணனுடைய காலைக்கிரணங்கள் தட்டாமலிருக்கும் கடலை நாடிச் சென்றாலோ அவ்விடத்திலும் என்னைக் காப்பாற்றுவது தங்களது திருக்கரங்களே தங்களது வலதுகை தான் என்னைக் கரையேற்றுவதும்." என்று கிருஸ்தவ முனிவர் ஒருவர் சொல்லுகிறார்.

"He hath no form, colour or outline" (Adi gran the Sahib Sorath!)

"அவருக்குரூபமோ வர்ணமோ அதிரோ கிடையாது."

"There is no God but He. He is the High, the Mighty. All is from God." (Quoran Ch. IV.)

"அவரல்லால் தெய்வமில்லை. அவர் தான் மேலானவரும் சக்திமானும், எல்லாம் அவரிடத்தில்தான் இருக்கின்றது." என்று மகம்மதீய குரு சொல்லுகின்றார்.

இப்படிக்குள்ள குணங்களோடு கூடியிருக்கும் ஈசனை எப்படித் தியானஞ் செய்வது? ரூபமில்லாத ஒரு வஸ்துவும் நம்முடைய மனதில் நிற்காதே? ஓர் சிறிய உவமையை எடுத்துப் பார்ப்போம். திரிகோணத்தைக் குறித்து ஒருவன் தியானம் பண்ணத்தொடங்கினால், அவனுக்கு மூன்று கோடுகளினால் அதிரிடப்பட்ட ஓர் இடம் என்றும் அதற்கு மூன்று கோணங்கள் உண்டு என்றும் மனதில் தோற்றுமே யொழிய வேறொன்றும் தோற்றாது. இவையல்லால் திரிகோணத்தின் தத்துவங்களாகிற (properties) இரண்டு கோடுகளின் நீளம் கூடினால் மூன்றாவது கோடின் நீளத்துக்கு அதிகமாக இருக்கவேண்டுமென்றும் திரிகோணத்தின் மூன்று கோணங்கள் சேர்ந்தால் 180 டிக்ரிக்கு சமமாக இருக்கவேண்டுமென்றும் தோற்றாது. ஏனென்றால் இவை இரண்டும் ரூபத்தோடுகூடின திரிகோணங்களினின்றும் ஆராய்ச்சிசெய்து அறிந்த குணங்களேயாம். ரூபத்தோடு கூடினவைகளை மாத்திரந்தான் நமது ஸ்தூல மனதில் காணலாம். குணங்களைக் காண முடியாது. இதுபோலவே சத்தியம் என்கிற ஓர் குணத்தை எடுத்து நாம் யோசித்தால் சத்தியவான்களாயிருந்த ஹரிச்சந்திரன் முதலிய மகான்கள் ரூபம் மாத்திரம் மனதில் தோற்றுமேயொழிய வேறொன்றும் தோற்றாது. குணத்தோடு கூடின இடத்திலிருந்து குணத்தை மாத்திரம் பிரித்துப் பார்க்க நம்முடைய மனதிற்குச் சக்தியில்லை. பகவானோ சகல குணங்களும் பொருந்தினவரும் ஒரு ரூபமுமில்லாதவருமாயிருக்கிறார். அவரை எப்படி தியானிப்பது?



ஏன்? ஏதாவது ஓர் குணத்தை தியானம் பண்ண அந்தக் குணத்தோடு கூடின ஓர் ரூபத்தை எடுத்து தியானம் பண்ணுகிறார்களல்லவா? அதுபோல் சகல குணங்களும் பொருந்தின ஓர் ரூபத்தை ஏன் தியானம் பண்ணக்கூடாது? அப்படிக்குள்ள ரூபம் நமது அறிவிற் கிடையாதா? என்று வினவினால் கிடையாது என்றுதான் பதிலளிக்கவேண்டும். கிடைத்துவிட்டால் அது ஈசுவரன் ஆய்விட்டதே! பிற்பாடு நமக்குக் காணவேண்டியது ஒன்றுமில்லையே! ஆதலால் சாதாரண ஜனங்களைவிட அதிகம் சத்குணம் பொருந்தினவனை ஒருவனுக்கு சகல குணங்களும் தன்னுடைய அறிவிற் கெட்டியவரை பொருந்தியிருப்பதாகத் தியானஞ் செய்வது சரியேயாகும். அது பற்றியே ஒவ்வொரும்தத்திலுள்ளோரும் அந்தந்த மதஸ்தாபகர்களுக்கு சகல குணங்களும் பொருந்தியிருப்பதாக பாவித்து அவரைக் கொண்டாடித் தியானஞ் செய்கிறார்கள். இந்து மதத்தில் மதஸ்தாபகர் என்று சுட்டிக்காண்பிக்க யாருமில்லாவிட்டாலும் ஈசுவரனுடைய சகல குணங்களையும் வகித்து ஒன்றோ இரண்டோ குணங்களை மாத்திரம் காலதேசபேதமனுசரித்துப் பிரகாசிப்பித்துக்கொண்டு அதை ஜனங்களிடையில் பரவச்செய்த மகான்கள் அவதரித்திருந்தார்கள். அவர்களைக் கொண்டாடித் தியானம் பண்ணுகிறார்கள்.

தியானம் பண்ணுகிறதற்கு முன்னிலை ஏகாக்ரசித்தமாம். மனம் ஒரே நிலையிலிருக்காவிட்டால் தியானம் பலிக்காது. ஆதலால் மனதானது ஏகாக்ரமாயிருக்க உபாயங்களை முன்னரே தேடவேண்டும். பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தைகளுக்கு மனதை ஒரே நிலையில் நிறுத்திப்படிக்கவேண்டுமென்று சொல்லுவார்கள். ஆனால் அத்துடன்

படிக்கும் திறமையுடைய பிள்ளைகள் குறைவு. படிக்கும் பிள்ளைகளை நாம் நன்றாகக் கவனித்து அறிந்தோமானால் மனதை ஓரே நிலையில் நிறுத்திப் படிக்கும் பிள்ளைகள் அதிகமாக வாசிக்கமாட்டார்கள். ஒரு பாடத்தை ஒரு தடவை அவர்கள் படித்தால் உடன் மனதில் பதிந்துவிடும். இதல்லாது பெரும்பாலும் பிள்ளைகள் மனதில் வேறு எண்ணங்களுடன் வாசிக்கின்றார்கள். அதினால் அப்படிப் படிக்கும் பாடம் நன்றாக மனதில் பதியாமலிருப்பதோடுங்கூட உடனே மறந்துபோய் விடும். இதிலிருந்து நாம் அறிவதாவது, மனது ஓரே நிலையிலிருக்க வேண்டுமென்பது ஈசுவர விசாரணைக்கு மாத்திரமல்லாமல், மற்ற செய்கைகளுக்கெல்லாம் அவசியம் வேண்டுமென்பதாம். மனிதனுடைய மனதானது குரங்குபோல் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்கின்றது. மனதைத்தன்னிடத்தில் இழுக்கச் சக்தியுள்ள ஏதாவது ஓர் குணத்தை உடைத்தான வஸ்துவில் நமது மனதை நிறுத்தினால் அந்த மனதானது சீக்கிரம் ஓரே நிலையில் வந்துசேரும். பிரகாசமயமான சூரியனானாலுஞ்சரி, எரிகின்ற தீயானாலுஞ்சரி, சோஷிக்கின்ற சமுத்திரமானாலுஞ் சரி, நேத்திரானந்தமான சோலையானாலுஞ் சரி, காதுக்கு இன்பத்தைக் கொடுக்கும் கானமானாலுஞ் சரி, இவைகளை யெல்லாம் தெய்வ ரூபமாக ஆராதிப்பதனால் விரைவில் மனதின் ஓரே நிலையை அடையலாம்.

இவைகளெல்லாம் நாம் எண்ணுகிற சமயங்களிலும் எண்ணுகிற இடங்களிலும் அவசியம் போல் வந்து நிற்கா. ஆதலால் இவைகளைத் தெய்வமாகக் கொண்டாட இவைகளில்லாத சமயங்களில் இவைகளைக்குறித்து தியானம் பண்ண, மனது ஓர் மேலான நிலையை அடைந்திருக்க வேண்டும். மனதானது அந்த நிலையை அடையாத ஜனங்களுக்கு அதில் நின்றும் குன்றினதாக ஓர் நிலை ஏற்படுத்திக்கொடுப்பது மதாசார சீர்திருத்தம் செய்பவர்களுடைய கடமையல்லவா? அதை யெண்ணி, முன்னோர்கள் எவ்விடங்களிலும் எந்த சமயங்களிலும் அதிகமாக அழியாமலிருப்பதாயும் உபயோகிப்பதற்கு சௌகரியமாயும் மந்திரங்களினாலுண்டாகும் தேவதா ரூபங்களுக்கு அநுரூபமாயுள்ள பிம்பங்களை உண்டுபண்ணி யிருக்கிறார்கள். இந்த ரூபங்களைத் தன் குடும்பத்திற்கு உபயோகமாகவிருக்கும்படி வீட்டிலோ, தன் கிராம ஜனங்களுக்கு உபயோகமாகவிருக்கும்படி கிராமத்திலோ பொதுவிடத்திலோ நகரிலுள்ளோர்களுக்கு சௌகரியமாகும்படி, அந்நகரிலோ, ஓரிடத்தமைத்து ஆராதித்தல் வேண்டும். இப்படி ஆராதிப்பதில் மனதானது அந்த ரூபத்தினிடத்தில் பதிந்து ஓர் நிலையை அடைகின்றது. பிம்பாராதனை வருவதற்கு முந்திய வைதிககாலத்தில் ஜபம் என்கிற அப்பியாசத்தினாலேயே ஏகாக்ர சித்தம் அடைய வழியமைத்து வைத்திருந்தார்கள். இதில் தேர்ச்சியடைந்து யோகத்தை அப்பியாசம் செய்தவனுக்கு மந்திரங்களுக்கு ஆதாரமான தேவதைகளை நேரிற் காணலாம். அவ்விதம் இல்லாதவர்களுக்கு மேற் செல்லுங்கால் எளிதாயிருக்குமாறு அதே ரூபத்திலுள்ள மூர்த்திகளை ஸ்தூல ரூபத்தில் தியானம் பண்ணிக்கொண்டிருந்தால் யோகத்திற்கு முன்னிலையான ஏகாக்ரசித்தம் சம்பாதிக்கலாம்.



மேலும் மனிதனிடத்தில்குடிகொண்டிருக்கும்சுயநயம் (Selfishness)போனாலன்றி அவனுக்கு ஈசனது குணங்களை அநுபவிக்கமுடியாது. தன்னயம் போக்கிப் பிறர் நயமது

பவிக்கவேண்டுமென்று ஜடமாயாவாத சாஸ்திரிகள் (Material Scientists) கூட ஒப்புக்கொள்ளுகிறார்கள். அந்தத் தன்னயம் விடுவதற்கு மனிதனின் இயல்பான பொருள்களை பகவானுடைய ரூபத்துக்கு என்று கொடுக்கவேண்டும். அப்படிச் செய்து வந்தால் எளிதில் மனிதனுடைய தன்னயம் நீங்கிவிடும். மாலை, சந்தனம் முதலான போகங்களில் அதிகமான பற்றுதலையுடைய ஒருவன் எவ்விதம் அவைகளை பகவானுக்கு கொடுப்பது? ஜடமான பதார்த்தங்களை ஜடமான ஈசுவரனுக் கன்றோ கொடுக்கமுடியும் ஆதலால் ஜடமான ஒரு ஈசுவரனை ஒன்றை உண்டுபண்ணி வைக்கவேண்டும். தம்முடைய ஒருபொருளை பிறர்க்களிப்பதில் மனமில்லாத தாழ்ந்த படியிலுள்ள (undeveloped) மனிதன் கூட பகவானுக்குக் கொடுத்துதான் அணியவேண்டுமென்று உபதேசித்தால் அனுசரிப்பான். ஏனெனில் இவன் உண்டுபண்ணி வைத்திருக்கும் பகவான் இவனது பொருளைக் கவர்ந் தெடுக்கமாட்டாரென்று அவனுக்குத் தெரியும். ஆதலால் அவ்விதம் பழக்கினால் பகவானுக்கு பகவானுக்கு என்று எல்லாவற்றையும்கொடுக்க மனமுள்ளவனாகிறான். அவனது தன்னயம்குறைந்து வருகிறது.

இக்காரணங்களால் ஈசுவரனை அறியப்போவதற்கு ஏற்படுத்தப்பட்ட உபாயங்களில் இந்த பிம்பாராதனையானது முதல் படியாகும்.

ச. வெங்கடாசலம் ஐயர்.

---

## மீராபாய்.

(258-ம் பக்கத்தொடர்ச்சி.)

அங்கம் I. களம் 3.

காலம்—மாலை. இடம்—கும்பாஜிராணாவின் தனியறை. நாடக பாத்திரர்—கும்பாஜி.

கும்—(தனக்குள்) சுந்தரி சொன்னது உண்மையாயிருக்கக்கூடுமோ? உண்மையாகத்தா னிருக்கவேண்டும். அவளுக்குத் தன்னுடைய சகோதரியைப்போல் பாவித்து வருகிற மீராவிடத்திலென்ன விரோதமிருக்கக்கூடும்? ஒருவிதமான துவேஷமுமிருக்க இடமில்லையே. பார்க்கப்போனால் அவளிடத்திலிருக்கும் குற்றம் குறைகளை யெல்லா மொளித்து அவளைப் பற்றிப் புகழ்ந்தல்லவோ பேசவேண்டும்! அப்படியிருக்க இந்த மாதிரி சுந்தரி சொல்வதென்றால் ஏதோ பெரிய காரணமிருக்க வேண்டும். என்னிடமவள் முழுவது முரைக்கவில்லை. இவள்தான் ராணாவின் பட்டமஹிஷி யென்பதை மறந்து தன் கௌரவத்தைத் துறந்து பரதைபோல் நடந்து கிருஷ்ணாலயத்துக்குச்சென்று பஜனை செய்வதாவது? இதற்குமுன் னிவ்வரண்மனையி லெவ்வளவோ ராணிகளிருந்ததில்லையா? இப்போதுதான் சுந்தரியில்லையா? அவர்களில் யாராவதிப்படி இருந்ததுண்டா? என் குலத்தின் யசஸைக் குலைக்க இந்த மீராபாயிப்படி யெல்லாம் செய்கிறாள்! ஜனங்களிவளைப்பற்றி ஏனிகழ்ந்து பேசமாட்டார்கள்? இவளணைதைபோல் நகரத்துக்கு வெளியிற் சென்று மானம் வெட்கமொன்றையும் பாராமல் பாடினால் நகரத்தி லுள்ளவர்களு மின்னுமிந்த அரண்மனையிலுள்ள சேவகர்களும் சேடிகளுமேனிவளைப் பற்றி நிந்தனையாய்ப் பேசமாட்டார்கள்? இப்போது சுந்தரியில்லையோ? அவள்

மீராவைவிட எந்த விஷயத்திற் தாழ்ந்தவள்? அழகு குறைவா? புத்தியில் குறைந்தவளா? சங்கீதந்தான் கீழ்ப்பட்டதா? எந்த விஷயத்திற்தானவளுக்கு சுந்தரி கீழ்ப்பட்டவள்? இவ்வளவு நாளாய் சுந்தரி என் மனம் கோணாமலு மென்பெயர் கெடாமலு மென்னை யொருவரும் நிந்திக்காமலும் நடந்துவரவில்லையோ? என்னவோ, என் மனதிற்குக் கொஞ்சங்கூட இது பிடிக்கவில்லை, சந்தேகமாய்த் தானிருக்கிறது. சுந்தரி அன்று சமாசாரம் சொன்னது முதல் எனக்கிந்த மீராவைக் காணும்போதெல்லாம் ஒருவித அருவருப்புண்டாகின்றது. வாய்விட்டுரைப்போ மென்றாலோ என்ன உரைக்கின்றதென்று எனக்கொன்றும் தோன்றவில்லை. இவளை யென்னசெய்கிறது? இந்த விஷயத்தைப் பற்றி வேறு யாரிடத்தில் யோசிக்கிறது? மந்திரியோடு யோசிக்கலாமா? அவர் பெரியவர்தான், நிரம்பவும் அநுபவமுள்ளவர், தீர்க்காலோசனை யுள்ளவர், ராஜ்ய பரிபாலன விஷயத்திலவருடன் யோசித்து நான் செய்ததொன்றும் தவறினதில்லை. அவரிடத்தி லவ்விஷயமாக நான் யோசனை கேட்காம லிருந்ததும் கிடையாது. ஆனாலிந்தமாதிரியான சங்கதிகளைக் குறித்து நானவரிட மிதுவரையில் யோசித்தது கிடையாதே. இப்போதுமட்டும் யோசிக்கலாமா? வெகுநாளா யிவ்விராஜ்யத்திலேயே மந்திரியா யிருக்கிறார். இங்கிதம் நன்றாய்த் தெரியுமவருக்கு. மேலுமெனது தகப்பனாரென்ன ரகசியமான காரியமாயிருந்தாலு மதைப் பற்றி இம்மந்திரியினிடத்தில் யோசனை கேட்கலாமென்றடிக்கடி சொல்லியிருக்கிறார். அவரிடத்திலிந்த சமாசாரத்தைச் சொல்லி அவருடைய அபிப்பிராயத்தை யறிகிறேன். அடே, சேவகா!—(மந்திரி வருகிறார்) ஓஹோ, மந்திரியே இங்கு வந்துவிட்டாரே.



மந்திரி—வந்தனம், மஹாராஜ்.

கும்—மந்திரி, உம்மிடத்திற் சில முக்கியமான விஷயங்களைக் குறித்துப் பேசவேண்டும். மனதிலொன்றையு மொளிக்காமல் உம்முடைய உண்மையான அபிப்பிராயத்தை வெளிப்படுத்தவேண்டும்.

மந்—அப்படியே ஆகட்டும், மஹாராஜா.

கும்—என்னுடைய பாட்டனார் காலம் முதல் நீரிவ்விராஜ்யத்துக்கு மந்திரியாயிருந்திருக்கிறீர். ஒரு விஷயத்தின் குணாகுணங்களைப் பகுத்தறிவீரென்கிற பூர்ண நம்பிக்கை யெனக்குண்டு. என் மனதிலிப்போது ஒரு பெரிய கலக்கமுண்டாயிருக்கிறது. அதை நிவர்த்தி செய்ய உம்மை யோசனை கேட்கப் போகிறேன்.

மந்—அப்படியே செய்யுங்கள். எனக்குத் தெரிந்த வரையில் சொல்லுகிறேன்.

கும்—இதுவரையிலெவ்வளவோ ராஜஸ்திரீகளை இவ்விராஜ்யத்திலேயு மின்னும் வேறுள்ள ராஜ்யங்களிலேயும் பார்த்திருப்பீரல்லவா? அவர்களில் யாராவதிந்த மீராவைப் போலிருந்ததுண்டா?

மந்—அவளைப் போலிருக்க முடியுமா? அது சுலபமான காரியமா? அவளைப் போலொத்த ஜீவன்களிப் புவியிற் பிறப்பது வெகு துர்லபம்.

கும்—நான் சொன்னதை நீர் நன்கறியவில்லை.

மந்—தாங்களென்ன சொன்னீர்கள்?

கும்—இந்த மீராபாய் மற்ற ராஜ ஸ்திரீகளைப் போலிராமல் தன்னுடைய ஸ்திதியை மறந்து தன் கௌரவத்தைக் குறைத்துக்கொள்ளுகிறாளல்லவா?

மங்—(ஆச்சரியத்தோடு) அதெப்படி மஹாராஜ்? தங்களுக்கும் தங்கள் ராஜ்யத்துக்கும் சிரேயஸைக் கொடுக்கத் தக்க ஸ்திரீ சிரோமணி யென்றல்லவோ நான் கருதியிருக்கிறேன். அப்படித்தான் தாங்களும் நினைத்திருக்கிறீர்களென்று மெண்ணியிருந்தேன். தாங்களிப்படி அபிப்பிராயப்பட்டிருப்பதெனக் காச்சரியமாகவே இருக்கிறது.

கும்—மந்திரி, நீர் நன்றாய் யோசித்துப் பார்க்கவில்லை. ஒரு ராஜஸ்திரீ, அதுவுமெனது பட்டமஹிஷி, தன்னுடைய நிலைமை தனக்குத் தெரியாமல் கால் நடையாய் நகரத்துக்கு வெளியிற்சென்று அங்கே கணக்கில்லாத ஜனங்கள் கூடியிருக்கும் கிருஷ்ணன் கோயிலிற் பாடுகிறதென்றாலது நன்றாயிருக்கிறதா? நீரே யோசித்துப் பாரும்.

மங்—இதென்ன இப்படி யெண்ணங் கொண்டீர்கள்? அவளப்படி பக்தி செய்வதாலிந்த ஜகத்துக்குக் கெவ்வளவோ நன்மையுண்டாகிறதே. தங்கள் ராஜ்யத்திலிருக்கும்படியான சகல ஜனங்களுமவள் செய்யும் பக்தியால் தாங்களும் பக்திசெய்கிறார்கள். சகலரும் துர்நடத்தையை விட்டுச் சன்மார்க்கத்திற் பிரவிர்த்திக்கின்றார்கள். நமது ராஜ்யத்திற்கு மீராபாய் வந்தபிறகு துஷ்டர்களெல்லோரும் நல்லவர்களாய் விட்டார்கள், திருடர் முதலியவர்கள் தங்கள் கெட்ட தொழிலைவிட்டு நல்லவழியிற் செல்லுகிறார்கள். அதைப்பற்றித் தான் தொஞ்சகாலத்துக்கு முன் தங்களோடுகூட நான் யோசித்துக்கொண்டிருந்தேன். ராஜ்யத்துக்கு மொருவிதக் குறைவுமில்லாமற் பயிர்களெல்லாம் நன்றாய்ச் செழிக்கின்றன. காலாகாலத்தில் மழையும் பெய்கிறது, நதிகளில் ஜலம் ஸம்ருத்தியாயோடிக்கொண்டிருக்கிறது. அப்படியிருக்கத் தாங்களிப்படி அபிப்பிராயங் கொண்டிருப்பதெனக்குச் சரியென்று தோன்றவில்லையே.



கும்—(தனக்குள்) இவர் சொல்வதெல்லா முண்மைதான். (வெளிப்படையாக) இதெல்லாம் யாரில்லையென்று சொன்னார்கள்? இதற்கு மிவள் பக்திக்குமென்ன சம்பந்தம்? இவள் பக்தியெல்லாம் வேஷமல்லவா? ஜனங்களிதைப் பற்றி நிந்திக்கிறதை நீரறியவில்லை போலும்.

மங்—ஜனங்களா நிந்திக்கிறார்கள்? அப்படியொருக்காலுமில்லையே. நானறிந்த வரைக்கும் ஜனங்கள் மீராபாயைப் பற்றியு மவளைப் பத்தினியாயடைந்த தங்களுடைய பாக்யத்தைப் பற்றியும் நிரம்பவும் சிலாக்யமாயல்லவோ பேசுகிறார்கள்! தங்களுக்கு யாரிப்படிச் சொன்னது? எங்கே சென்றாலும் மீராபாயைக் குறித்துப் பேசும் ஸ்துத்யங்கள் காதில் விழுகின்றனவே அல்லாமலவளைப் பற்றி நிந்தனையா யொருவார்த்தையாவது காணோமே.

கும்—அப்படியிருக்கும் பக்ஷத்தில் சுந்தரி யென்னிடம் பொய்யுரைத்திருப்பாளா? அவள் மீராவைப்பற்றி வீணாய்த் தூஷணை செய்யமாட்டாள்.

மங்—(தனக்குள்) ஓஹோ, சரிதான். சுந்தரியின் வலையிலகப்பட்டுக் கொண்டாரா இவர்? அதிலிருந்து தப்புவது வெகு கடினமாயிற்றே. தானொரு காரியம் செய்வதென்று நிச்சயித்தாலதை யெப்படியாவது முடித்துவிடும்படியான சாமர்த்திய முள்ளவளல்லவா? சுந்தரிக்குமுன் நானெவ்வளவு? அவள் செய்ய யத்தனித்திருக்கிற காரியத்தைத் தடுக்க என்னாலாகப் போகிறதா? இவளைப்பற்றி நானேதாவது கெடுதலாயிவரிட முரைத்தாலிவருக்கென் மீது கடுங்கோபமுண்டாகு மென்பதிற் சந்தேகமில்லை. நானென் செய்கிறது? நம்முடைய தர்மத்தை நாமெப்படியும் கைவிடலாகாது (வெளிப்படையாக) அரசே; சுந்தரி சொன்னதாகத் தாங்கள் சொன்னதெனக்குண்மையென்று தோன்றவில்லை.

கும்—என்னமந்திரீ, சுந்தரிபா பொய்யுரைத் திருப்பாளென்கிறீர்? நன்ருய் யோசித்துப் பேசும். வீணுயவளைப் பற்றிக் கண்டதெல்லா முரைக்கவேண்டாம்.

மந்—(தனக்குள்) சுந்தரியின் போதனையிவர் மனதில் பதிவாயூன்றி யிருக்கிறதென்று தோன்றுகிறது. இதையெப்படி மாற்றுகிறது? (வெளிப்படையாக) மஹாராஜ் என்மீது கோபங்கொள்ளக்கூடாது. முன்னமேயே என்னுடைய அபிப்பிராயத்தை மறைக்காமல் வெளியிடவேண்டுமென்ருக்ஞாபித்திருக்கிறீர்கள். ஆகையால் நானென்னுடைய வாஸ்தவமான அபிப்பிராயத்தை வெளியிடலானேன். தங்களுக்கது அப்பிரியமாயிருக்கும் பக்ஷத்தில் நானென்றும் சொல்லவில்லை. ஆனல் நானொரு வார்த்தை மட்டு முரைக்கிறேன். அதை யென்மீது கோபங்கொள்ளாமல் கேட்டருளவேண்டும். மீராபாயைப் பற்றிக் கெடுதலாக நினைப்பது நியாயமல்லவென்பதென்னுடைய அந்தரங்க அபிப்பிராயம். நான் போய் வருகிறேன். தங்கள் மனதுக்கு வருத்தமுண்டாகும்படி நானேதாவதுரைத்திருப்பேனுயின் அதற்காகத் தங்களை மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கும்—சரி.

மந்—(மந்திரி போகிருர்.)

கும்—(தனக்குள்) மந்திரி அபிப்பிராயம் சரியென்று சொல்லுவாரென்று நான் நினைத்திருக்க, அவரிவ்விதமாகவல்லவோ அபிப்பிராயப்பட்டிருக்கிருர். ஆனல் நானேனிவருடைய அபிப்பிராயத்தை மதிக்கவேண்டும்? என்னுடைய ஸ்திதியிலிருந்து விஷயங்களைப்பார்த்தால் தான் என் அபிப்பிராயத்தினுண்மை விளங்கும். அப்படி யில்லாமல் வேறொருவருக்கு நாம் படுகிற கஷ்டமெப்படித் தெரியும்? இவரிப்படித் தான் சொல்லுவார்.—ஆனலிவர் சாதாரணமான மந்திரியல்ல. இதுவரைக்குமிவர் சொன்னதாவது செய்ததாவது வீண்போனது கிடையாது. இவரபிப்பிராயம் தவறினதும் கிடையாது. அப்படியிருந்து மிந்த விஷயத்திலிவர் சொல்வது சரியென்றெனக்குத் தோன்றவில்லை. தவறுவது மனிதனுக்குச் சகஜம்தானே. எவ்வளவு சமர்த்தராயிருந்தாலு மிந்த விஷயத்திலிவர் கொண்டிருக்கும அபிப்பிராயம் தவருயிருக்கக் கூடாதா? அப்படித் தானிருக்கவேண்டும். சுந்தரி சொன்னது பொய்யாயிருக்காது இப்படிப்பட்ட லோகாபவாதம் ஸ்திரீகள் காதிலெட்டுகிறதுபோல் புருஷர்கள் காதிற்படுமா? இவ்விஷயத்திலுண்மை மந்திரியை விட சுந்தரிக்குத் தான் நன்ருய்த் தெரியும். நானிப்போதென்ன செய்வது? அவளை நேரில் கண்டாலென் மனதிலிருப்பதை வெளியிட எனக்கு மனம் வருகிறதில்லை. ஆனலவளிடத்திலென்ன கெட்ட குணமிருந்தாலுமவள் எனக்குச் செய்யவேண்டிய சுச்ருஷைகளிலும் பணிவிடைகளிலுமொரு குறைவும் கிடையாது. என்னிடத்தில் வைத்திருக்கும் பிரியம் குறைவுபட வில்லையென்று நினைக்கும்படியாக நடந்து கொள்ளுகிருள். இவளென்னிடத்தில் பிரியம் வைத்திருப்பதுண்மைதானு? எல்லாம் வேஷம்! எனக்கொன்றும் தோன்றவில்லை. மந்திரியோ இவ் விஷயத்தில் சரியான அபிப்பிராயம் கொள்ளவில்லை. சுந்தரியோடு கலந்து யோசித்தாலவளே தாவதொருவழி சொல்லுவாள். அது நல்லதாகவே இருக்கும். சேவகா

(சேவகன் வருகிருன்)

சேவ—சித்தம் மஹாராஜ்.

கும்—அந்தப் புரத்துக்குச் சென்று நான் சுந்தரிபாயை இங்கே பார்க்க விரும்புகிறதாகத் தெரியப்படுத்து.

(சேவகன் போகிருன்.)

*(சுந்தரி வருகிருள்)*

சுந்—(தனக்குள்) நான், சுந்தரி, ஒருகாரியத்தைச் செய்ய யத்தனித்தால் அது வீணாய்ப் போகுமா? நான் செய்யும் படியான காரியங்கள் பலிக்காதிருப்பதை நான் கண்டு சகிப்பேனா? நானரசனுக்குச் சொன்னது நன்றாயவர் மனதிலூன்றியிருக்கிற தென்பதிற் சந்தேகமேயில்லை. என் போதனையைக் கேட்டபிறகு அவருக்கு மீராவிடத்திலிருக்கும் பிரியம் குறைவுபட்டேயிருக்கிறது. முன்போலவளிடத்தில் பேசுவதில்லை. அவளிருக்கு மிடத்துக்கும் போவதில்லை. நம்முடைய காரியம் சரிவரத்தானாரம்பித்திருக்கிறது. கட்டாயமென் மனோரதம் கைகூடும். கைகூடும்படி செய்கிறவள் நானல்லவா? இதோடு விட்டேனா? இந்த மீராபாயை இவ்வரண்மனையினின்றும் நீக்கி இந்த ராணாவையுமவள் முகத்தில் விழிக்காதிருக்கும்படி செய்கிறேன். இப்போதிவரென்னை யழைத்திருப்பது மென்னுடைய நல்ல காலம் தான். இது என்னெண்ணத்தைப் பூர்த்திசெய்ய ஒரு நல்லதருணம். சேவகன் சொன்னதிலிருந்து மந்திரியோடு மீராபாய் விஷயத்தைப்பற்றிப் பேசினதாகவும் மந்திரி மீராபாய் பக்ஷம்பேச இவர் கோபங் கொண்டதாகவும் தெரியவருகிறது. மேலும் மந்திரியரண்மனையை விட்டு வெளிச்சென்றபோதவரென்னைப் பார்த்த பார்வையினாலுமவர் முகபாவத்தினாலுமிப்படி யேதாவது நடந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இந்த மந்திரிக்கு இந்தவிஷயத்திலென்மீது சந்தேக முண்டாயிருந்தாலுமிருக்கலாம். அவர் புத்திமான். சீக்கிரத்திலுண்மையை யறிந்து விடுவார்.—அதைப்பற்றி நான் கவனிப்பானேன்? மஹாராஜாவைச் சரியாயென் கைவசத்தில் வைத்துக் கொள்வேனானால் நானொன்றுக்கும் கவலைப்பட வேண்டியதில்லை. (அருகில் செல்லுகிறாள்)

கும்—சுந்தரீ, வா இப்படியுட்கார்.

(இன்னும் வரும்.)

R. ஸ்ரீநிவாஸஐயர் M. A.

## சிறுவர்க்குரிய விஷயம்.

### ஆசாரம் அல்லது நன்னடக்கை.

---

ஆசாரலக்ஷணோ தர்மஃ ஸந்தஶ்சாசாரலக்ஷணாஃ।
ஆகமாநாம் ஹி ஸர்வேஷாம் ஆசாரஃ ஶ்ரேஷ்ட உச்யதே ॥
ஆசாரப்ரபவோ தர்மோ தர்மாதாயுர்விவர்த்ததே।
ஆசாரால்லபதே ஹ்யாயுராசாரால்லபதே ஶ்ரியம் ॥
ஆசாராத்கீர்த்திமாப்நோதி புருஷஃ ப்ரேத்ய சேஹ ச

["ஆசாரத்தின் லக்ஷணம் தருமமேயாகும். நல்லோர்கள் ஆசாரத்தைக் கைக்கொள்கிறார்கள். எல்லா வித்தைகளிலும் ஆசாரமானது சிரேஷ்டமாயுள்ளது. ஆசாரத்தினின்றும் தர்மம் தழைக்கின்றது. தருமத்தால் ஆயுள்விருத்தியடைகின்றது. ஆசாரத்தால் ஒருவன் ஆயுளையும் ஐசுவர்த்தையும் கீர்த்தியையும் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் அடைகிறான்."—மஹாபாரதம்.]

ஸ்நேஹிதர்களே!

மேலே ஸம்ஸ்கிருதத்தி லெழுதியிருப்பது உங்களில் அநேகருக்குத் தெரியாதென்று நினைக்கிறேன். இனி,நீங்கள் பெரியவர்களாகும்போது ஒருவேளை ஸம்ஸ்கிருதம் படிக்கக் கற்றுக்கொள்வீர்கள். ஹிந்துக் குழந்தை ஒவ்வொருவருக்கும் ஸம்ஸ்கிருதபாஷை கொஞ்சமாவது அவசியம் தெரிந்திருக்கவேண்டும். ஏனெனில் நம்முடைய சிறந்த புஸ்தகங்களெல்லாம் அப்பாஷையிலல்லவோ எழுதப்பட்டிருக்கின்றன; முற்காலத்தில் நமது தேசத்திலிருந்த பரிசுத்தர்களான ரிஷிகள் அனைவரும் ஸம்ஸ்கிருத பாஷையையே பேசிவந்தார்கள். நீங்கள் மேலேயுள்ள ஸம்ஸ்கிருத சுலோகங்களை எளிதிலுணர்ந்துகொள்ளுமாறு அவற்றின் தமிழர்த்தத்தையும் அவற்றின்கீழ் எழுதியிருக்கிறேன். அதையே பின்னும் விவரிப்பேன்.

கடவுளைச் சேவிக்கவேண்டுமானல், நமது நடத்தை நன்ருகவிருக்கவேண்டும். நன்னடக்கை எல்லாவற்றையும் விட மேலானது. நன்னடக்கைதான் மதம், தர்மம் என்றும் கூறப்படுகின்றது. நமது ஆயுள்காலத்தை ஒழுங்காகவும், அழகுறவும் கழிக்குமாறு, தருமத்தை நாடவேண்டும். நன்னடக்கையே, நாம் சுகமாய் வாழ்ந்து ஆனந்தப்படுவ தற்கு ஏற்றதாகும். நன்னடக்கையாலேயே இவ்வுலகத்தி லும் பரலோகத்திலும் நற்பலன்களை நாம் இலகுவாய் அடையலாம். நன்னடக்கை என்பது ஸம்ஸ்கிருதத்தில் ஸதாசாரம் என்று சொல்லப்படும்.

இந்த ஸதாசாரத்தைப் பற்றியே நான் உங்களுக்குச் சொல்லவிரும்புகிறேன். சில விஷயங்களில் நீங்கள் சந்தோஷ முள்ளவர்களாகவும் வேறு சில விஷயங்களில் துக்கமுள் ளவர்களாகவும் இருக்கிறீர்கள். சிலவேளைகளில் நீங்கள் கோபங்கொள்கிறீர்கள். சிலவேளைகளில் பெரியோர்கள் சொற்படி செய்கிறீர்களில்லை. ஆனல் நீங்களெல்லோரும் சீக்கிரம் நல்லவர்களாக வேண்டுமென்று விரும்புவதும் எனக்கு நன்ருய்த்தெரியும். ஒருசமயம் நீங்கள் கோபித்துக் கொண்டாலும் மறுசமயம் "ஏன் இவ்விதங்கோபங்கொண் டேன்? நான் ஏன் சாந்தமாய் நடந்திருக்கக்கூடாது? நான் ஏன் கீழ்ப்படிந்து நடக்கவில்லை? இனியாவது சாந்த மாயும், கீழ்ப்படிந்தும் நடப்பேன்" என்று உங்களுக் குள்ளே ஆலோசித்துக்கொள்கிறீர்கள்.

இனி, மாதந்தோறும் நன்னடக்கையைப் பற்றிய சில கதைகளை உங்களுக்கெழுதிவருவேன். நீங்கள் இக்கதை களை வாசிப்பீர்களாயின், இலகுவாய் நல்லவர்களாயிருக்கக் கற்றுக்கொள்வீர்கள். நீங்கள் செய்யவேண்டியதென்ன வென்று அக்கதைகளிலிருந்து இலகுவில் கற்றுக்கொள்வீர் கள். அக்கதைகளெல்லாம் நமது புராணங்களில் இருக்கின் றன. அவை கடினமான வார்த்தைகளாலெழுதப்பட்டு,மிகப் பெரிதாயிருக்கின்றன. ஆகையால் நீங்கள் வாசிப்பதற்குச் சிரமமாயிருக்கும். உங்களுக்கு எளிதில் விளங்குமாறு சிறு



சிறுவார்த்தைகளில் சுருக்கி எழுதிவருவேன். நீங்கள் அக் கதைகளைத் திரும்பத் திரும்ப வாசிக்கலாம்.

முற்காலத்திய ஸ்திரீ, புருஷர்களில் மிகச்சிரேஷ்டர் கள் (நல்லவர்கள்) எவ்விதம் நடந்துவந்தார்கள் என்பதை அக்கதைகள் விவரிக்கின்றன. முற்காலத்தில் சிறுவர்களும் எவ்விதம் எல்லோரிடத்தும் சாந்தமாய் நடந்துவந்தார்கள் என்பதையும், ஈசுவரனிடத்திலும், கிருஷ்ணபகவானிடத் திலும், தேவர்களிடத்திலும் எவ்விதம் அன்புசெலுத்தி, அவர்களுடைய கட்டளைப்படி நடந்துவந்தார்கள் என்ப தையும் அக்கதைகள் விளக்குகின்றன. நாம் அவர்களு டைய ஸதாசாரத்தை (நன்னடக்கையை)ப்பற்றிப் படித்து நாமும் எப்படி நல்லவர்களாகலாம் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

பிரகாசமான சூரியனும், பார்வைக்குக் குளிர்ச்சியான மரங்களும், கனிந்தபழங்களும், நமக்கு வேண்டிய தானி யங்களும், நமக்காக பாடுபட்டு உழைக்கின்ற மிருகங்களும் உருசியானபாலைக்கொடுக்கும்பசுக்களும் நிறைந்துள்ள இப் பூலோகத்தின் அழகுதான் என்ன? இவைகளையெல்லாம் தேவர்களல்லவோ உண்டாக்கி வைத்திருக்கின்றனர்? இத் தனை பொருள்களையும் நமக்கு அவர்கள் கொடுக்கிருர்களே? நாம் அவர்களுக்கு ஏதாவது கொடுக்கவேண்டாமா? அவர் களிடத்தி லில்லாத பொருள் கிடையாதே. ஆயினும் நாம் அவர்கட்குக் கொடுக்கக்கூடியவையும் சில உண்டு. அவை, நம்முடைய நல்லெண்ணங்களும், நல்லசொற்களும், நற்செய்கைகளுமேயாம்.

இவைகளைத் தான் நாம் நற்குணங்களென்று சொல் கிரேம். இந் நற்குணங்களால் நமக்கும் சந்தோஷம் ஏற்படு கின்றது. பிறர்க்கும் சந்தோஷம் ஏற்படுகின்றது.

நற்செயல்களில் அநேக விதங்களுண்டு, அவை என்ன வென்ருல்;—

1. உங்களைக் காட்டிலும் மெலிந்தவர்களாகவும், சிறியவர்களாகவும் இருப்போர்க்குச் செய்யத்தக்க உதவிகள், அதாவது, உங்களவ்வளவு வயதாகாத சிறுவர்கள் அல்லது ஸ்நேஹிதர்களுக்குச் செய்யவேண்டிய நற்செயல்கள் பல உண்டு. உங்களுடைய தாயார் தகப்பனர் குருக்கள் (உபாத்தியாயர்கள், பெரியோர்கள், வயதுசென்றவர்கள்) ராஜா, இவர்களிடத்திலெல்லாம் நன்னடக்கையையே நீங்கள் அநுசரிக்கவேண்டும்.

2. நாமே விருத்தியடையுமாறுசில ஸதாசாரங்களைப் பின்பற்றக் கடவோம். முன்னிலுமதிகமாக உண்மையுள்ளவனுகவும், கீழ்ப்படிதலுள்ளவனுகவும், அதிக சாந்தமாகவும்,அதிக பரோபகார புத்தியுடையவனுகவும் வேண்டுமல்லவா ? யாதொன்றுக்கும் தொந்தரவு செய்யாமலும், பொய்சொல்லாமலும், நாம் நடக்கலாமன்றோ ! இவைகள் நமக்காகவே செய்யவேண்டிய நற்செயல்கள்.

3. நாம் ஈசுவரனின் முன்பாகவும் நன்னடக்கையோடிருக்கவேண்டும். அஃதென்னவென்றால் நாம் செய்யும்எல்லாக்கார்யங்களிலும் ஈசுவரனையே நினைக்கவேண்டும். விளையாட்டாயினும் சரி, வேலையானாலும் சரி ஈசுவரனையே நினைக்கவேண்டும். அவருக்குத் தொண்டு புரியவேண்டும். அவருக்குச் சேவகனுக உழைக்கவேண்டும். அவர்வேலையில் நாமும் சேர்ந்து உழைக்கவேண்டும். உங்களுக்கு இனி தக்க வயதுவரும்போது,பகவத்கீதை என்னும் நேர்த்தியான புத்தகமொன்று படிப்பீர்கள். அதில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்வதென்னவென்றால் "நாம் எதைச்செய்தாலும்,நாம் எதைச்சாப்பிட்டாலும் நாம்எதைத் தேவர்களுக்குக் கொடுத்தாலும், எதைப் பிறர்க்குக்கொடுத்தாலும் இன்னும் எதைப் பிறர் பொருட்டுச் செய்வதற்கு நமது சுயநலத்தையுங்கூட விடுகின்றோமோ அதையதையெல்லாம் ஈசுவரனின்பொருட்டுச்செய்வதாக நினை"என்பதேயாம். இது தான் ஈசுவர ஆராதனை. இதற்கே பக்தி யென்று பெயர். இவ்வித நற்செய்கைகளைப்பற்றிய அநேக கதைகளை நாம்



இனி படிப்போம். பலவீனர்களுக்கும் உதவியற்றவர்களுக்கும் நாம் செய்யக்கூடிய நற்செய்கைகளையும், எல்லாமனிதர்களுக்கும் எல்லாஜந்துக்களுக்கும் செய்யக்கூடிய நற்செய்கைகளையும்பற்றி அக்கதைகள் விவரிக்கின்றன. புருஷர்களானாலும் ஸ்திரீகளானாலும், சிறுகுழந்தைகளானாலும் மிருகங்களானாலும் பூச்சிகளானாலுங்கூட எல்லா உயிர்ப்பிராணிகளுக்கும் நாம் உபகரிக்கவேண்டும்.

எல்லாவற்றையும் நாம் நேசித்துவருவது மிக நல்லதாகும். ஏதாவதொன்று தொந்தரவு படும்போது இரக்கப்படுவதும் நல்லதே. எதையும் ஒருபொழுதும் நாம் தொந்தரவுக்குட்படுத்தலாகாது. இவ்விதம் அன்புபாராட்டும் நற்செய்கைதான் தயை, இரக்கம் என்று சொல்லப்படுகிறது. ஏதாவது பிராணி தொந்தரவுக்குட்பட்டு வருந்துவதைப்பார்த்து நீங்கள் அதற்கு உதவிசெய்ய முயலுவீர்களானால், நீங்கள் இரக்கமுடையவர்கள்தான் (தயையுடையவர்கள்)ஒருசிறுகுழந்தை ஏதாவதுஒருபிராணியை எவ்வித உபத்ரவத்தினின்றாவது நீக்கினால்,அக்குழந்தை தயைநிறைந்த குழந்தைஎன்று சொல்லப்படும். சிறியவர்களானாலும், பெரியவர்களானாலும்,புருஷர்களானாலும், ஸ்திரீகளானாலும் துன்பப்படுகிறவர்களுக்கு உதவிபுரிந்து, அவர்களிடம்அன்பு ஆதரவோடு இருப்பார்களானால்,அவர்களெல்லோரும்இரக்கமுடையவர்கள் எனப்படுவார்கள். வியாதிஸ்தர்களுக்கு மருந்து முதலியவை கொடுத்துதவுகிறபோதும், பலவீனர்களுக்கு உபகரிக்கும்போதும், பசித்தவர்களுக்கு அன்னம் கொடுக்கும்போதும் இரக்கம் என்னும் நற்குணத்தை வெளிக்காட்டுகிறோம்.

"ஆதரவான நற் செய்கைகளாலும்
அன்பான நல்ல வார்த்தைகளாலும்
நமது பூலோகமும் மேலுலக
மான ஸ்வர்க்கலோகமாகும்.

வஸந்தானந்தன்.

---

* இது இந்திய வாலிபர்களுக்காக காசி ஸெண்ட்ரல் ஹிந்து கலாசாலை ஸ்தாபகர்களால் எழுதப்பட்ட ஆங்கில வாசகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு.

## கல்விக்கைங்கர்யம். *

### உபாத்தியாயர்.

---

என்னைச் சுற்றிலுமுள்ளவர்களுக்கு எவ்விதம் நான் சிறந்த உபகாரியாயிருக்கலாமென்றுதெரிந்துகொள்ள என் குருநாதன் என்னைப் பயிற்றுவிக்குங்காலத்தில், எனக்குச் சொன்ன உபதேச மொழிகளை "சற்குரு சரணங்களில்" என்னும் புத்தகத்தில் எழுதியிருக்கிறேன். குருநாதனுடைய மொழிகள் எவ்வளவு உற்சாகத்தைக் கொடுக்கின்றனவென்பதையும், அம்மொழிகளைப் படித்துணர்ந்தவர்கள் மற்றவர்களுக்குதவிபுரியப் பழகுவதற்கு எவ்வளவு ஆவலுள்ளவர்களாயிருக்கின்றனர் என்பதையும் அப்புத்தகத்தை வாசித்தவர்களொவ்வொருவரும் அறிவார்கள். நான் யாரிடத்தில் பயிற்சியை எதிர்பார்த்தேனோ அவர்கள் என்விஷயத்தில் அன்புடன் எடுத்துக்கொண்ட கவலையால் எவ்வளவு ஒத்தாசையை அடைந்திருக்கிறேனென்பதை நன்றாயறிவேன். மேலும் அவ்விதம் நான் அவர்களிடம் அடைந்த உதவிகளைப் பிறருக்குச் செய்ய ஆவலுள்ளவனாயிருக்கிறேன்.

குருநாதனுடைய உபதேசமொழிகளை எல்லாவிஷயங்களிலும் உபயோகப்படுத்தலாமென்று எனக்குத் தோன்றுகிறது. தீக்ஷையைப் பெறும்படி செய்விக்கிறதாகிய ஞானமார்க்கத்தில் உறுதியாகச் செல்ல முயலுகிறவர்களுக்கு

---

* ஆத்தங்குடி சுப்பராமையர் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டது.



மட்டுமே இவைகள் பிரயோஜனமுள்ளவைகளென்று நினைக்கக்கூடாது; ஆனால் உலகத்தில் பிரவிர்த்தி மார்க்கத்திலிருந்துகொண்டு தமது வேலைகளை இன்னமும் செய்துவரும்போழ்தே தங்களுக்கேற்பட்ட கடமைகளைப் பலாபேக்ஷையின்றியும், ஊக்கத்துடனும், எப்படிச் செய்யலாமென்று கவலைப்படுகிறவர்களுக்கும் இவைகள் பிரயோஜனப்படும். கௌரவமாக மதிக்கப்படும் வேலைகளில் உபாத்திமைத் தொழிலும் ஒன்றாகவிருக்கிறது. குருநாதனுடைய மொழிகள் அதை எவ்விதம் விளக்கிக்காட்டுகின்றனவென்பதைக் கவனிப்போம்.

"சற்குரு சரணங்களில்" என்னும் புத்தகத்திற் சொல்லப்பட்ட நான்கு சாதனங்களையும் எடுத்துக்கொண்டு ஆசிரியன், மாணாக்கன் இவர்களில் ஒவ்வொருவரிடத்திலும் ஏற்படவேண்டிய ஒழுக்கங்களையும், அவர்களிருவருக்குமிருக்கவேண்டிய பரஸ்பர சம்பந்தங்களையும் அச்சாதனங்களொவ்வொன்றும் எவ்விதமாக விளக்குமென்று காண்பிக்கமுயலுகிறேன்.

கல்வி விஷயத்தில் முக்கிய சாதனம் அன்பாகையால் அதை முதலில் எடுத்துக்கொள்ளுகிறேன்.

கல்வி கற்பிக்கும் தொழிலானது, அதிக சாஸ்திரப் பயிற்சியுள்ளமற்றத் தொழில்களைப்போல் அவ்வளவு உயர்வாகத் தற்காலத்தில், நினைக்கப்படாமலிருப்பது விசனத்தைத் தரத்தக்கதே. எவரும் உபாத்தியாயராயிருக்கத் தகுந்தவரென நினைக்கப்படுவதால், உபாத்தியாயருக்கு மரியாதையே யில்லாமற்போய்விட்டது. ஆகையால் அதி

சப் புத்திசாலியாயிருக்கும் பையன்கள் இத்தொழிலில் நோக்கங்கொள்ளுகிறதில்லை. ஆனால் கல்விகற்பிக்கும் வேலையானது உண்மையில் அதிகப் புனிதமுள்ளதும், தேசத்திலுள்ள ஜனங்களுக்கு அத்யாவசியமானதும் ஆகும். ஏனெனில் அதுதான் இனி வருங்காலங்களில் தேச சுதந்தரர்களாகப்போகிற தற்காலச் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும், நற்குணங்களை உண்டாக்குகிறது. ஆதிகாலத்தில் கல்வி கற்பிக்கும் தொழில் அதிகப் பரிசுத்தமானதெனக் கருதப்பட்டது. தேவாராதனையைக்கைக் கொண்டவர்கள் மட்டுமே கல்வி கற்பிக்கப்பாத்திரர்களென நினைத்து அவர்களைக்கொண்டு கல்வியைக் கற்பித்துவந்தார்கள். ஆலயங்களின் ஓர் பாகமே பள்ளிக்கூடங்களாக ஏற்பட்டிருந்தன. இந்தியாவில் இவ்விதம் கல்விகற்பிக்கும் ஆசிரியரிடம் ஜனங்களுக்கு அதிக நம்பிக்கையுண்டு. பெற்றோர்கள் தம் குழந்தைகளை அநேகவருஷகாலம்வரை அவர்களிடமே பூராவாக ஒப்புவித்து விடுவதும், அவ்விதம் ஒப்புவிக்கப்பட்ட பையன்களும் குருவும் ஒரே குடும்பமாக வசித்து வருவதும், வழக்கம். சந்தோஷகரமான இவ்வித சம்பந்தமானது, திரும்பவும் முன்னிருந்த நிலைமைக்கே கொண்டுவரப்படவேண்டுமென்பதற்காக, ஒரு ஆசிரியனிடமிருக்க வேண்டிய முக்கியமான குணங்களில், அன்பை முதலாவதாக நான் கருதுகிறேன். நாமெல்லோரும் எதிர்பார்க்கிறபடி இவ்விந்தியாவானது மறுபடியும் ஒரு சிறந்த தேசமாக வேண்டுமானால், இச்சந்தோஷகரமான பழய சம்பந்தங்கள் திரும்பவும் ஆசரணைக்குக்கொண்டுவரப்படவேண்டும்.

ஜே. கிருஷ்ணமூர்த்தி.

---

## தியானக்கிரம விஷயம்.

### அக்டோபர் மாசம்.

---

**மாசாந்தர அப்பியாசம்:—செய்கை:—உன் முன்னிலையில் நீ ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய முக்கிய தர்மம் குருநாதனுடைய வேலையைச் செய்வதேயாம்.**

**வாரஅப்பியாசம்.**

1-வது வாரம்:—உலகம் நல்லதென்று சொல்லும் ஒரு பெருங்காரியத்தைவிட, குருநாதனது பிரவிர்த்திக்கு நேரே அநுகூலமாயிருக்கும் ஒரு சிறியகாரியம் மிகவும் மேன்மையானதென்றறி.

2-வது வாரம்:—நியாயத்தைக் கைக்கொள்வதற்கே நீ நியாயமாய் நடக்கவேண்டும்; அதினால் வரும் வெகுமானத்தை யுத்தேசித்தல்ல; நீ வேலை செய்ய வேண்டுவது வேலையை உத்தேசித்தே யல்லாது, அதன் பலனைபடைய உத்தேசித்தல்ல.

3-வது வாரம்:—சோம்பல் தவிர்க்கப்படவேண்டும். நற்காரியத்தில் சுறுசுறுப்புடன் உழைக்கவேண்டும்.

விவேகியானவன் தன் சரீரத்தைப் பார்த்து "நற்பணி செய்ய நீ தடைசெய்யாதே," என்று மறுமொழி சொல்கிறான்.

4-வதுவாரம்:—குருநாதனுக்கு நீ சொந்தமாக வேண்டுவாயாகில், சாதாரணமான காரியங்களை மற்றவர்களைவிட நீ மேலாகவே செய்யவேண்டும், சிரத்தைக் குறைவாய்ச் செய்யலாகாது. ஏனென்றால் அவைகளையுங்கூட நீ குருநாதனுடைய நிமித்தமாகவே செய்யவேண்டும்.

